இமயமலையின் அடிவாரம். நீண்ட பயணத்திற்கப்புறம் பஸ்ஸிலிருந்து அந்த இளைஞன் இறங்கினான். அவனுடைய இரண்டு துணி மூட்டைகளைச் சுமந்துகொண்டு மலையேற, காத்திருந்த கழுதைகளில் ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொண்டான்.

“எங்கே போக வேண்டும் சாஹேப்?”– கழுதையை வழி நடத்துபவன் கேட்டான்.

“ஏதாவதொரு நல்ல சாமியார் ஆசிரமத்திற்குப் போ.”

“எத்தனை நாட்கள் தங்கப் போகிறீர்கள்?"

“நாட்களா? இனி என் வாழ்க்கையே இங்கேதான். என் மனைவி, குழந்தைகள், அம்மா, அப்பா, பிஸினஸ் எல்லாவற்றையும் உதறிவிட்டு வந்துவிட்டேன். இதோ என் கழுத்தில் இருக்கிறதே தங்கச் சங்கிலி... இதைக்கூட உனக்குக் கொடுத்து விடப் போகிறேன்.”

கழுதைக்காரன் வியந்து நின்றான். “இந்தச் சின்ன வயதில் உங்களுக்கு எப்படி இதெல்லாம் சாத்தியமாயிற்று?”

இளைஞன் முகத்தில் பெருமிதம் வழிந்தது. “எங்கள் ஊருக்கு வந்திருந்த குரு ஒருவர் சொன்னது என்னை ஆழமாகத் தொட்டுவிட்டது. ஆசைகள் தான் துன்பத்துக்கெல்லாம் காரணமாம். அதுதான் எல்லா ஆசைகளையும் உதறிவிட்டு வந்துவிட்டேன்.”

“எல்லாவற்றையும் உதறிவிட்டுஇந்த மூட்டைகளில் என்ன கொண்டு வந்திருக்கிறீர்கள், சாஹேப்?”

“இங்கே குளிர் அதிகம் என்று சொன்னார்கள். அவசரத்துக்குப் பக்கத்தில் கடைகளும் கிடையாதாமே. அதனால், இந்த மூட்டைகளில் எனக்கு வேண்டிய கம்பளிகளை எடுத்து வந்திருக்கிறேன்.”

கம்பளியைக்கூட உதற முடியாமல் வாழ்க்கையையே உதறியதாகச் சொல் லும் அந்த இளைஞனைப் போல, ஆசையைத் துறந்ததாகப் பலர் சொல்லிக்கொண்டு அலைகிறார்கள்.

ஆசை இல்லாமல் இந்தப் பிரபஞ்சம் இல்லை. ஆசை இல்லாமல் இந்த உடல் இருக்காது. உயிர் இருக்காது.

ஆசைப்படக்கூடாது என்று இந்தப் பிரபஞ்சம் ஒருநாளும் உங்களுக்குச் சொல்லித்தரவில்லை. ஆசையைத் துறந்தால் எல்லாம் சரியாகிவிடும்

என்பதைப் போன்ற முட்டாள்தனமான தத்துவம் எதுவுமில்லை.

ஆசையைத் துறக்கத் தீர்மானித்து விட்டேன் என்று உங்கள் மனம் போலித்தனமாக துறவு பேசும். மனம் தந்திரசாலி. எதையோ சொல்லி உங்களை நம்பவைத்து ஏமாற்றும். அந்த சூட்சுமம் அதற்குத் தெரியும். ஆனால் உடம்பு?

காற்றுப் புகமுடியாதபடி உங்கள் வாயையும் , மூக்கை யும் இறுகப் பொத்திக் கொண்டு வேடிக்கை பாருங் கள். ஒரு நிமிடம், இரண்டு நிமிடம் வேண்டுமானால் உடம்பு பொறுத்துக்கொள்ளும். அப்புறம், உயிர் வாழவேண்டும் என்று உங்கள் உடம்புக்குள் பீறிட்டு எழும் ஆசை உங்கள் கையைப் பிடுங்கிப்போடும். விட்டுப் போனதற்கும் சேர்த்து அள்ளி அள்ளி ஆக்ஸிஜனைக் குடிக்கும்.

ஆசை இல்லை என்று உங்கள் மனம் சொன்ன தத்துவங்கள் எல்லாம் உடம்பிடம் எடுபடாது. ஏனென்றால், அதற்குப் பொய்சொல்லி ஏமாற்றத் தெரியாது.

உடம்பு என்று மொத்தமாகக்கூடச் சொல்லவேண்டாம். அதில் இருக்கும் ஒவ்வொரு 'செல்'லும் ஆசையில்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. விருந்தாளியாக உள்ளே ஒரு நோய்க் கிருமி நுழைந்து பார்க்கட்டுமே... உடனே ஒவ்வொரு 'செல்'லும் ஆயுதத்தைத் தூக்கிக்கொண்டு கடுமை யான போருக்குக் கிளம்பிவிடும். எதற்காக?

பிரபஞ்சம் அதற்கு வாழும் ஆசையைக் கொடுத்திருக்கிறது.

இன்னும் ஆழமாகப் பார்த்தால், ஆசைகளைத் துறக்கவேண்டும் என்று விரும்பினால் அடிப்படையில் அந்த விருப்பமும் ஓர் ஆசைதானே?

உங்கள் ஊருக்கு ஒரு சாமியார் வந்திருப்பார்.

'நீ பணத்தின்மீது ஆசை வைத்தாய். அதுதான் உன் துன்பத்துக்கு எல்லாம் காரணம். கடவுளின்மீது ஆசை வை' என்பார்.

உங்களிடம் பத்துகோடி ரூபாய் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். கடவுளை நம்பி உங்கள் பணத்தை எல்லாம் தேசத்தில் இருக்கும் ஏழை களுக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டால், உடனே நிம்மதி வந்துவிடுமா?

நாளையிலிருந்து இந்த தேசத்தில் உங்களையும் சேர்த்து ஏழைகளின் எண்ணிக்கையில் ஒன்று கூடிப்போகும். அவ்வளவுதான்.

பணம் கையில் இருந்தால் என்ன வெல்லாம் செய்யமுடியும் என்பதாவது உங்களுக்குத் தெரியும். கடவுளால் என்ன செய்யமுடியும், என்ன

செய்ய முடியாது என்று உங்களுக்கு எந்த அனுபவமும் கிடையாது.

‘இன்பத்துக்கு ஆசைப்படாதே, சொர்க்கத்துக்கு ஆசைப்படு. அதிகாரத் துக்கு ஆசைப்படாதே. அமைதிக்கு ஆசைப்படு’ என்று வேறொரு அறிவுரை யும் அடிக்கடி கிடைக்கும்.

சங்கரன் பிள்ளைக்கு ஒருமுறை மோசமான முதுகுவலி வந்தது. டாக்டர் எக்ஸ்ரேவை வெளிச்சத்தில் பார்த்தார். “இந்த எக்ஸ்ரேவைப் பார்த்தீர்களா? உங்கள் முதுகுத்தண்டு தீவிரமாக பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆபரேஷன் தான் செய்யவேண்டும்.”

“எவ்வளவு செல வாகும், டாக்டர்?”

“என் ஃபீஸ் இருபத்தைந்தாயிரம் ரூபாய். ஆஸ்பத்திரியில் ஆறு வாரம் தங்கி ஓய்வு எடுக்கவேண்டியிருக்கும்.”

சங்கரன் பிள்ளை திகைத்தார். அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது?

“இதோ வந்துவிடுகிறேன் டாக்டர்” என்று எக்ஸ்ரேவை வாங்கியவர், நேராக எக்ஸ்ரே எடுத்தவரிடம் விரைந்தார்.

“டாக்டருக்கு இருபத்தைந்து ரூபாய் கொடுத்து, ஒரு மணிநேரத்தில் சிகிச்சை முடிகிற மாதிரி இந்த எக்ஸ்ரேவைத் திருத்தித் தரமுடியுமா... ப்ளீஸ்?” என்று கேட்டார்.

அப்படி எக்ஸ்ரேவைத் திருத்தித் தரும் சாமியார்கள்தான் ஆசைகளை ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றிக்கொள்ளச் சொல்பவர்கள்.

இன்னொரு சாமியார் வருவார்... “சரி, சரி, ஆசையை மொத்தமாக விட்டொழிக்கவேண்டாம். கொஞ்சமே கொஞ்சம்... இதோ இத்தினியூண்டு வைத்துக்கொள், பரவாயில்லை” என்று அனுமதிதருவார்.

‘விரும்பினால், எனக்கு இன்னும் கிடைக்கும். ஆனால் எனக்கு இது போதும்’ என்று ஒரு வைராக்கியத்துடன் ஆசையைக் குறைத்துக் கொண்டீர் களேயானால் அதை ரசிக்கலாம். அது உங்களுக்கு நிறைவைத்தரும்... சந்தோஷத்தைத் தரும்.

ஆனால், ‘எனக்கெங்கே அதெல்லாம் கிடைக்கப்போகிறது? இதுவே போதும்’ என்று தத்துவம் பேசி, உங்கள் ஆசைகளின் சிறகுகளைக் கத்திரித்தீர்களேயானால், அது கோழைத்தனம். ‘பக்கத்து வீட்டுக்காரன் படுபேராசைக்காரன். ஆனால், அவனுக்கு எல்லாம் கிடைக்கிறது. நான் ஆசைப்பட்டதே இத்துனூண்டு. அதுகூட எனக்குக் கிடைக்க மாட்டேன் என்கிறதே?’ என்று துயரந்தான் மேலும் அதிகமாகிப் போகும்.

அதனால்தான் சொல்கிறேன், ஆசைப்படுங்கள். மிகப்பெரிதாக ஆசைப்படுங்கள். அந்த தைரியம்கூட இல்லாமல், அற்பமாக ஆசையைச் சுருக்கிக்கொண்டீர்களேயானால், வாழ்க்கையில் வேறு எதைப் பெரிதாக நீங்கள் சாதித்துவிடப்போகிறீர்கள்?

உங்களின் வாழ்க்கையின் தரத்தையே நிர்ணயம் செய்யப்போகும் ஆசைகளைப் பற்றி இன்னும் ஆழமாகத் தெரிந்துகொள்வோமா..?

ஒவ்வொரு தனி மனிதனும் எல்லையில்லா ஆனந்த நிலையை உய்த்துணர, கோவை – வெள்ளியங்கிரி மலை அடிவாரத்தில் ஈஷா யோக மையத்தை நிறுவியவர்.

மதங்களுக்கும், வழிபாடுகளுக் கும் அப்பாற்பட்ட தியானலிங்கம் என்ற மிக சக்தி வாய்ந்த சந்நிதியை எழுப்பியவர். யோகாவை ஒரு விஞ்ஞானக் கருவியாகப் பயன் படுத்தி பல லட்சம் மனிதர்களை மேம்படுத்தி சமூகத்திற்கு அர்ப்பணித்தவர்.

தமிழகக் கிராமங்களை மேம்படுத்த பெருமுயற்சி மேற் கொண்டுள்ளவர். உலகெங்கும் பல லட்சம் மனிதர்களின் அன்பிற்கும், நம்பிக்கைக்கும் உரிய சத்குரு!

## அத்தனைக்கும் ஆசைப்படு!

உங்களைச் சுற்றி நடப்பவற்றைக் கவனியுங்கள்.

உங்கள்மீது இருக்கும் ஆசையால்தான் பூமி தன் புவியீர்ப்பு விசையைச் செலுத்தி, உங்களைத் தன்னோடு வைத்துக் கொண்டிருக்கிறது.

சூரியனிலிருந்து குறிப்பிட்ட தூரத்தில் தனக்கான பாதையை அமைத்துக் கொண்டு, இந்தப் பூமி வலம் வருகிறது. அந்தப் பாதையிலிருந்து அது விலகிப் போய்விடாமல், மையத்தில் இருக்கும் சூரியன் ஆசையோடு இழுத்துப் பிடித்திருக்கிறது.

என்றைக்காவது சூரியனுக்குத் தன் கோள்கள்மீது ஆசை போய்விட்டால் என்னவாகும்? யோசித்துப் பாருங்கள்.

புரிகிறதா... ஆம்... ஆசை இல்லை என்றால், இந்தப் பிரபஞ்சமே இல்லை!

அப்புறம் ஏன், உங்கள் ஆசையை மட்டும் குறுக்கிக்கொள்கிறீர்கள்? உங்கள் கற்பனைக்கெட்டிய எல்லைகள் வரை உங்கள் ஆசை விரிந்து, மிக

மிகப் பெரிதாகவே இருக்கட்டும். நட்சத்திரங்களைக் குறி வைத்தால்தான் கூரைவரைக்குமாவது உங்கள் அம்பு போகும். ஐயோ, அவ்வளவு பெரிய ஆசையெல்லாம் கூடாது என்று வில்லைத் தாழ்த்திக்கொண்டே வந்தால், அம்பு உங்கள் பாதங்களின் விரல்களைத்தான் கிள்ளி எறியும்!

கவனியுங்கள்... பேராசைப்படுங்கள் என்று நான் சொல்லவில்லை. உங்கள் ஆசை பெரிதாக இருக்கட்டும் என்றுதான் சொல்கிறேன்.

இரண்டுக்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்துகொள்ளுங்கள்.

ஒருமுறை சங்கரன்பிள்ளை ரயிலில் பயணம் செய்துகொண்டிருந்தார். ரயில் எந்த ஸ்டேஷனில் நின்றாலும், சங்கரன் பிள்ளை இறங்கிவிடுவார். இறங்கிய இடத்திலேயே நின்றிருப்பார். வண்டி புறப்படும்போது ஏறிக்கொள்வார்.

சின்ன ஸ்டேஷன், பெரிய ஸ்டேஷன் என்று இல்லை. இரண்டு நிமிடம் நிற்கும் ஸ்டேஷனிலும் இறங்கி ஏறுவார். எதிரிலிருந்த பயணிக்கு சஸ்பென்ஸ் தாங்கவில்லை.

“உங்களைப் பார்த்தால் மிகக் களைப்பாகத் தெரிகிறீர்கள். உங்களோடு வந்தவர்கள் யாராவது காணாமல் போய்விட்டார்களா? புத்தகம், தண்ணீர் ஏதாவது வாங்க வேண்டுமா? எதற்காக இப்படி இறங்கி, இறங்கி ஏறிக் கொண்டிருக்கிறீர்கள்?”

சங்கரன்பிள்ளை தலையைப் பலமாக ஆட்டினார். “அப்படியெல்லாம் இல்லை. சமீபத்தில் எனக்கு பைபாஸ் சர்ஜரி நடந்தது. ‘நீண்டதூரப் பயணங்கள் கூடாது’ என்று என் டாக்டர் சொல்லியிருக்கிறார். அதனால், இந்தப் பயணத்தைக் குட்டிக் குட்டிப் பயணங் களாக மாற்றிக் கொண்டிருக்கிறேன்!”

‘எல்லாவற்றுக்கும் ஆசைப்படு’ என்று சத்குருவே சொல்லிவிட்டார் என்று அந்த வார்த்தைகளை மட்டுமே எடுத்துக்கொண்டு நீங்கள் ஆசைப்பட ஆரம்பித்தால்... சங்கரன்பிள்ளை டாக்டரைப் புரிந்துகொண்டது போல் ஆகிவிடும்.

அப்படியானால் எது ஆசை, எது பேராசை?

ஒருவருக்கு ஆசை என்று தோன்று வது, இன்னொருவருக்குப் பேராசை யாகத் தோன்றும். பைக் வைத்திருப்பவர் கார் வாங்க நினைத்தால், அதை ஆசை என்பீர்கள். அதையே பிளாட்பாரத்தில் படுத்திருப்பவர் சொன்னால், அது பேராசை என்பீர்கள். ஒப்பிட்டுப் பார்த்துப் பெருமூச்சு விடும் குணம் உங்களிடம் இருக்கும்வரை, இந்தக் குழப்பம் தீராது.

உண்மையில், உங்கள் ஆசை எங்கே தன் வேர்களை ஊன்றியிருக்கிறது என்று கவனியுங்கள். பாட்டிகள் கதை சொல்லும் போதெல்லாம்

கவனித்திருப் பீர்கள்... ஒரு ராஜகுமாரன் தன்னை எதிர்ப்பவர்களுடன் கடுமையாகப் போராடி ஜெயித்து, ஏழு கடல் தாண்டி, ஏழு மலை தாண்டி, இன்னும் என்னென்னவோ சாகசங்கள் எல்லாம் செய்து, அழகான ராஜகுமாரியைச் சிறை மீட்டு வருவான். 'அப்புறம் அவர்கள் சந்தோஷமாக வாழ்ந்தார்கள்' என்று பாட்டி கதை சொல்லி முடிப்பாள்.

சந்தோஷமாக வாழ ஆரம்பித்து விட்டால், காரியம் முடிந்துவிட்டது. அப்புறம் போராட்டம் இல்லை. ஆனால் எது சந்தோஷம்?

கல்யாணமானால் சந்தோஷம் என்று நினைத்தீர்கள். பிறகு, குழந்தைகள் பிறந்தால்தான் வாழ்க்கை முழுமை பெறும், அதுதான் சந்தோஷம் என்று நினைத்தீர்கள். குழந்தைகளும் பிறந்தன. ஆனால், 'இன்றைக்கு என் நிம்மதி போனதற்கே அவர்கள்தான் காரணம்' என்று மனம் உடைந்து அழுகிறீர்கள்.

கோடி ரூபாய் கிடைத்தால் சந்தோஷம் என்றீர்கள். கிடைத்துவிட்டது. ஆனால், அதை அனுபவிக்க நேரமில் லாமல், பிரெட் துண்டுகளைக் கடித்துக்கொண்டே, அடுத்த பிஸினஸ் வெற்றிக்காகக் காரில் டென்ஷனுடன் கம்ப்யூட்டரை நோண்டிக் கொண்டே பயணம் செய்கிறீர்கள்.

அமைச்சர் பதவி கிடைத் தால் சந்தோஷம் என்றீர்கள். கிடைத்த பின்போ, எப்போது நாற்காலி பறிபோகும்... எப்போது வாரண்ட்டோடு போலீஸ் வந்து கதவைத் தட்டும்... எப்போது எதிரி கையால் அரிவாள் வீசப்படும் என்று உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு அலைகிறீர்கள்.

இப்படித்தான் சங்கரன்பிள்ளையும் ஒருமுறை மாட்டிக்கொண்டார்.

'நிறைய சலுகைகள் கிடைக்கும் என்று சொன்னார்களே!' என்று சங்கரன் பிள்ளை ராணுவத்தில் சேர்ந்தார். தவறுத லாக, இரண்டு நம்பர் சிறிய அளவு பூட்ஸ்கள் அவருக்குக் கொடுக்கப்பட்டு விட்டன. தினமும் அவற்றுக்குள் கால் களை நுழைக்கும்போது, விரல்கள் எல்லாம் ஒன்றன்மீது ஒன்று ஏறிக்கொள் ளும். நாள் பூராவும் அந்தச் சிறிய பூட்ஸ் களைக் கழற்றாமல், அவர் பாதங்கள் வலியில் தவிக்கும். வேதனை தாங்காமல் சங்கரன்பிள்ளை ஊருக்கெல்லாம் சாபம் கொடுத்துக் கொண்டிருப்பார்.

"அதிகாரிகளிடம் விஷயத்தைச் சொன்னால், உடனே சரியான அளவு பூட்ஸ்களைக் கொடுப்பார்களே நண்பா... ஏன் இப்படி அவஸ்தைப்படுகிறாய்?" என்று சக சிப்பாய் கேட்டார்.

சங்கரன்பிள்ளையிடம் இருந்து கடுப்பாகப் பதில் வந்தது: "நீதான் பார்க்கிறாயே, தினந்தோறும் எவ்வளவு கடுமையான பயிற்சிகள்... எலும்பெல்லாம் இற்றுப் போகும் அளவுக்கு அடுத்தடுத்து வேலைகள். எதிலாவது சந்தோஷம் கிடைக்கிறதா? ராத்திரி இந்த பூட்ஸ்களைக் கழற்றிப் போட்டதும் 'அப்பாடா' என்று எப்பேர்ப்பட்ட சந்தோஷம் கிடைக்கிறது தெரியுமா? ராணுவத்தில் சேர்ந்ததில் எனக்குக் கிடைக் கும் அந்த ஒரே ஒரு சந்தோஷத்தையும் இழக்கச் சொல்கிறாயா?"

நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள்... சங்கரன்பிள்ளை போல் சந்தோஷத்தையே பணயம் வைத்துவிட்டு, ‘எப்போதடா பூட்ஸைக் கழற்றுவோம் என்று உங்களுக்கும் தவிப்பு வந்திருக்கிறதா, இல்லையா?

‘சந்தோஷமாக வாழவேண்டும்’ என்பதுதானே உங்களுடைய அத்தனை ஆசைகளுக்கும் அடியில் புதைந்திருக்கும் உண்மை?

நீங்கள் கேட்பது கிடைத்துவிடுகிறது. ஆனால், எதற்காகக் கேட்டீர்களோ... அது – அந்தச் சந்தோஷம் மட்டும் கிடைப்பதில்லை!

ஏன் இப்படி? எங்கே தவறு நிகழ்ந்தது?

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சாலைகள் கூடும் இடத்தில் சில நிமிடங்கள் நில்லுங்கள். உங்களைக் கடந்து செல்பவர்களைக் கவனியுங்கள்.

எத்தனை முகங்கள் சந்தோஷமாக இருக்கின்றன? நூறு பேர் கடந்துபோனால், அதில் நான்கோ ஐந்தோ முகங்களில் தான் சிரிப்பிருக்கிறது. மற்றவர்கள் ஏதோ வாழ்க்கையையே தொலைத்துவிட்டவர்கள் போல் தெரிகிறார்கள். ஏன் இப்படி?

வெளியே எதற்குப் போகவேண்டும்? உங்களையே கண்ணாடியில் பாருங் களேன்... உங்கள் முகத்தில் ஆனந்தமும், கொண்டாட்டமும் தெரிகிறதா? அல்லது சிரிப்பை வற்புறுத்தி அழைத்துவர வேண்டியிருக்கிறதா?

உங்களுடைய ஐந்து வயதில் ஒரு பட்டாம்பூச்சியைத் துரத்திக்கொண்டு ஓடினீர்களே, ஞாபகம் இருக்கிறதா? அந்தப் பட்டாம்பூச்சியைத் தொட்டதும், அதன் வண்ணங்கள் உங்கள் கையில் பளபளவென்று ஒட்டிக் கொண்டபோது, அதைவிட உலகில் பெரிதாக எதுவுமே தெரியவில்லையே. அப்போது எப்படிப் பொங்கிப்பொங்கி ஆனந்தமாயிருந்தீர்கள்?

ஐந்து வயதில் உங்கள் உயரம் என்ன, இப்போது உங்கள் உயரம் என்ன? உங்கள் சந்தோஷமும் குறைந்தபட்சம் அதே விகிதத்தில் வளர்ந்திருக்க வேண்டாமா?

கள்ளம் கபடமற்ற அந்தச் சிறுவயதில் சந்தோஷத்தைத் தவிர வேறு எதுவுமே நீங்கள் அறியவில்லை. பிறகு என்ன ஆனது? நீங்கள் வளர்ந்தீர்கள். சந்தோஷமாக இருக்கப் பல விஷயங்களைத் தேடித் தேடிச் சேகரித்தீர்கள். பெரிய படிப்பு, கம்ப்யூட்டர், சொந்த வீடு, மோட்டார்சைக்கிள், கார், கிரெடிட் கார்டு, டி..வி., டி.வி.டி., ஏ.சி, செல்போன் என அவரவர் முயற்சிகளுக்கேற்ப எவ் வளவு வசதிகள் சேர்த்துவிட்டீர்கள்? சில நூற்றாண்டுகளுக்கு முன், உலகையே வென்றுவிட்டதாக நினைத்த பேரரசர்களுக்குக் கூட இத்தனை வசதிகள்

இருந்ததில்லை தெரியுமா?

ஆனால் என்ன ஆனது? சந்தோஷத் துக்காக வாழ்க்கையில் இவ்வளவு தேடிய நீங்கள், கடைசியில் உங்கள் சந்தோஷத்தை மட்டும் தொலைத்து விட்டீர்கள். எங்கே போயிற்று உங்கள் சந்தோஷமெல் லாம்?

ஒருமுறை மூச்சு முட்டக் குடித்து விட்டு சங்கரன்பிள்ளை பஸ்ஸ்டாப்பில் நின்றிருந்தார்.வந்த பஸ்ஸில் கூட்டம் பிதுங்கி வழிந்தது. எப்படியோ முண்டியடித்து அதில்ஏறிவிட்டார். பத்துப் பதினைந்து பேர் காலைமிதித்து, நான்கைந்து பேரை முழங்கையால் நெட்டித் தள்ளி, உள்ளே நகர்ந்தார். ஒரு மூதாட்டிக்குப் பக்கத்து இருக்கை யில் இருந்தவர் எழுந்திருப்பதைப் பார்த்ததும், சங்கரன்பிள்ளை பலரை யும் இடித்துத் தள்ளிப் பாய்ந்தார். குடிகாரனோடு மல்லுக்கு நிற்க வேண்டாமே என்று அவர்கள் முகச் சுழிப்புடன் ஒதுங்கி, வழிவிட்டார்கள். சங்கரன்பிள்ளை பெருமிதத்தோடு அந்த இருக்கையில் தொப்பென அமர்ந்தார். உட்கார்ந்த வேகத்தில் அந்த மூதாட்டியின்மீது சரிந்தார். அவள் மடியில் வைத்திருந்த பழக்கூடை உருண்டோடியது. கோபத்தோடு அவரைப் பார்த்த மூதாட்டி, “நீ நேரே நரகத்துக்குத்தான் போய்ச் சேரப் போகிறாய்” என்று ஆத்திரத்தோடு சொன்னார்.

சங்கரன்பிள்ளை பதறியடித்து எழுந்தார். “ஹோல்டான், ஹோல்டான், வண்டியை நிறுத்துங்கள். நான் போகவேண்டியது காந்தி நகருக்கு. தப்பான வண்டியில் ஏறிவிட்டேன்” என்று கத்தி னார்.

உங்களில் பலர் இப்படித் தான் எந்த பஸ்ஸில் ஏறியிருக்கிறோம் என்பதே தெரியாமல் ஏறுவதும் இறங்குவதுமாக அல்லாடிக் கொண்டு இருக்கிறீர்கள்.

ஆசைப்பட்டது கிடைக்காதபோது, சோகத்தில் முகத்தைத் தூக்கிவைத்துக் கொள்வதே முட்டாள்தனம். ஆனால், ஆசைப்பட்டது கிடைத்த பிறகும், ஏன் முழுமையாக சந்தோஷத்தை அனுபவிக்கத் தெரியாமல் தவிக்கிறீர்கள்?

இயற்கையிடமிருந்து நீங்கள் கற்றுக் கொள்ளவேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன.

தென்னை மரத்தைக் கவனியுங்கள். உங்கள் தோட்டத்தில் நெடுநெடுவென வளர்ந்திருக்கிறது.சுவையான தேங்காய்களாக வழங்கிக்கொண்டு இருக் கிறது. மற்ற மரங்களை வெட்டிப் போடும் நேரத்திலும், தென்னையை வெட்ட உங்களுக்கு மனசு வராது. அதற்குத் தண்ணீர் ஊற்றிக் கவனித்துக் கொள்வீர் கள். ஆனால், உங்களிடமிருந்து தண்ணீரை எதிர்பார்த்தா அது தேங்காய்களைச் சுமக்கிறது?

அதன் இயல்பு என்னவோ, நூறு சதவிகிதம் அந்த இயல்புப்படி நடக்கிறது. அதற்குக் கிடைக்க வேண்டிய தண்ணீர் தானாகக் கிடைத் தும் விடுகிறது.

இயல்பு... அதை ஒட்டிய செயல்... அதற்கான பலன் என்பதுதான் இயற்கை வகுத்து உள்ள நியதி.

ஆனால் நீங்கள்?

உங்களுக்கு சச்சின் போல் கிரிக்கெட் ஆட வேண்டும்; ஐஸ்வர்யா ராயைப் போல் அழகாக வேண்டும்; பில்கேட்ஸ் போல் பணக்காரராக வேண்டும்; இந்த மாதிரி ஒரு பங்களா; அந்த மாதிரி ஒரு கார்; அவரைப் போல் ஒரு வாழ்க்கை; இவரைப் போல் செல்வாக்கு... இப்படிப் பலனை முதலில் தீர்மானித்தீர்கள். அதை எதிர்பார்த்து செயலில் இறங் கினீர்கள். அது உங்களுக்கு சரி வருமோ இல்லையோ, அதை உங்கள் இயல்பு ஆக்கிக்கொள்ளப் பார்க்கிறீர்கள்.

இப்படி அடுத்தவரைப் பார்த்து, அதேபோல் உங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயற்சி செய்யும்போது, வாழ்க்கை நரகமாகிப் போகும். ஆம்... உங்கள் இயல்பைப் புரிந்து கொள்ளாமல், எதிர்த்திசையில் துடுப்பு போடுவது தான் அத்தனைத் துன்பங்களுக்கும் காரணமே தவிர–

உங்கள் அடிப் படைஆசை குற்றமல்ல!

உங்களுடைய இயல்புஎன்ன? அதைநீங்கள் எப்படிப்புரிந்து கொள்வது?

## அத்தனைக்கும் ஆசைப்படு!

**உ**ங்களுக்கு ஆசை இல்லை என்றால், இந்தக் கட்டுரையின் அடுத்த வரிக்குப் பார்வையை எடுத்துப் போகமுடியாது. அவ்வளவு ஏன்... நிற்கமுடியாது. நடக்கமுடியாது. சாப்பிடமுடியாது.

‘ஆசையினால் சாப்பிடுகிறேன் என்று யார் சொன்னது? பசிக்காகத்தான் சாப்பிடுகிறேன்’ என்று நீங்கள் விதண்டாவாதம் செய்யலாம்.

நல்ல பசியான நேரத்தில் உறவினர் வீட்டுக்குப் போயிருக்கிறீர்கள். இலை போட்டு ருசி மிக்க சாப்பாட்டைப் பரிமாறுகிறார்கள். நீங்கள் முதல் கவளத்தை வாயருகில் கொண்டு போகும்போது, உங்களை அசிங்கமாக என்னென்னவோ ஏசுகிறார்கள். அடுத்த கவளம் உள்ளே இறங்குமா?

பசி தீரவில்லை. ஆனால், சாப்பிட வும் முடியவில்லை. ஏன்?

சாப்பிடும் ஆசை போய்விட்டது.

ஆசையினால் செய்யாமல் அவசியத்துக்காக எதைச் செய்தாலும், அது முழுமையான சந்தோஷத்தைக் கொண்டுவராது.

உங்கள் அடிப்படை இயல்பே மகிழ்ச்சியாக இருப்பதுதான். நீங்களாக வரவழைத்துக்கொண்ட துன்பங்களால்தான், அது காணாமல் போகிறது.

சந்தோஷமாக இருக்க வேண்டுமானால், முதலில் நீங்கள் சுயநலத்தோடு இருக்கவேண்டும். சுயநலத்தில்கூடக் கஞ்சத்தனம் வேண்டாம். முழுச் சுயநலவாதியாக இருங்கள்.

ஒருமுறை, சங்கரன் பிள்ளையின் மகனுக்குக் கடுமையான காய்ச்சல். டாக்டர் வந்தார். 'இது தொற்று நோய்க்கிருமியால் வந்திருக்கும் காய்ச்சல். ஏற்கெனவே, இதை எவ்வளவு பேருக்கு உங்கள் மகன் பரப்பிவிட்டானோ? இனி, உடம்பு சரியாகும்வரை பள்ளிக்குப் போக வேண்டாம்' என்று எச்சரித்தார். சிகிச்சை சில நாட்களுக்குத் தொடர்ந்தது.

மகனுக்கு ஒருவழியாகக் காய்ச்சல் குறைந்து, குணமாகிவிட்டான்.

டாக்டர் பில்லை நீட்டினார்.

தொகையைப் பார்த்து சங்கரன் பிள்ளை சண்டைக்குப் போய் விட்டார்.

டாக்டர் விளக்கம் கொடுத்தார்."ஒன்பது முறை, உங்கள் வீட்டுக்கே வந்து ஊசி போட்டிருக்கிறேன். அதுவும் விலை உயர்ந்த மருந்து!"

சங்கரன் பிள்ளை கொதித்தார்.

"விளையாடுகிறீர்களா? என் மகன் ஊரெல்லாம் காய்ச்சலைப் பரப்பியதால்தானே உங்கள் பிஸினஸ் படு ஜோராகப் போய்க்கொண்டு இருக்கிறது. என்னிடம் எப்படிப் பணம் கேட்பீர்கள்? நியாயமாக நீங்கள் அல்லவா எனக்குப் பணம் தரவேண்டும்?"

இப்படித்தான் எது கிடைத்தாலும், அதனால் ஆதாயம் உண்டா, அதை வைத்துக்கொண்டு எப்படியாவது உலகத்துப் பணத்தையெல்லாம் சுருட்டித் தன் பாக்கெட்டில் போட்டுக் கொள்ளமுடியுமா என்று பேராசை கொண்டு பலர் அலைகிறார்கள்.

அப்பேர்ப்பட்ட சுயநலத்தை நான் சொல்லவில்லை. நான் சொல்லும் சுயநலம் இன்னும் பெரிது.

இந்தச் சட்டை என்னுடையது, இந்த வீடு என்னுடையது என்ற குறுகிய சுயநலத்தை விடுங்கள். இந்த ஊர் என்னுடையது, இந்த நாடு

என்னுடையது, இந்த உலகமே என்னுடையது என்று எல்லாவற்றையும் உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள்.

நீங்கள் டெய்லராக இருங்கள். ஆட்டோ ஓட்டுபவராக இருங்கள். ஆபரேஷன் பண்ணும் டாக்டராக இருங்கள். காய்கறி விற்பவராக இருங்கள். கம்ப்யூட்டர் தயாரிப்பவராக இருங்கள்.

இந்த உலகமே உங்களுடையதென்று மனதார ஏற்றுக்கொண்டுவிட்டால், அதில் உள்ளவர்கள் உங்களைச் சேர்ந்தவர்களாகிவிடுவார்கள். அதன்பின், அவர்களுக்காக நீங்கள் எதைச் செய்தாலும் எப்படிச் செய்வீர்கள்? உங்களுக்கே செய்து கொள்வதாக நினைத்து, மிகுந்த ஈடுபாட்டுடன், முழு அர்ப்பணிப்புடன் செய்வீர்கள் அல்லவா? அப்படி அன்போடு, ஆசையோடு செய்யும்போது அதன் தரம் எப்படி இருக்கும்? உச்சத்தில் இருக்கும். அப்புறம் உங்களுக்குக் கிடைக்கவேண்டிய பலனை நீங்களே வேண்டாம் என்று மறுத்தாலும் அது தானாக வந்து உங்கள் காலடியில் கொட்டும். உண்டா, இல்லையா?

எப்போதுமே நூறு சதவிகித ஈடுபாட்டுடன், சந்தோஷத்துடன் செயலாற்றுங்கள். பலன்தான் சந்தோஷம் என்று நினைக்காமல், செய்வதையே பிரியத்துடன் செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். முதல் முறை வெற்றி கிடைக்கவில்லையானால், உங்களுக்குப் பிரியமானதைச் செய்ய இன்னொரு வாய்ப்பு கிடைத்தாக நினைத்துக்கொள்ளுங்கள்.

மறுபடியும் முழு ஈடுபாட்டுடன் செயலாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சந்தோஷம்தான் கிடைக்கும். வலி தெரியாது. வேதனை இருக்காது.

யோசியுங்கள்... உங்கள் திறமை முழுவீச்சில் எப்போது வெளிப்படுகிறது? நீங்கள் சந்தோஷமாக இருக்கும்போதா? படபடப்பிலும், துக்கத்திலும் இருக்கும் போதா? ஆசையோடு, சந்தோஷமாக ஒரு வேலையைச் செய்யும்போது, வெற்றி கிடைக்காமல் போவதற்கு வாய்ப்பே இல்லை.

நீங்கள் மட்டும் சந்தோஷமாக இருந்தால் போதாது. நீங்கள் இருக்கும் இடத்தில் உங்களால் மற்றவர்களுக்கும் சந்தோஷம் இருக்கவேண்டும். சுற்றி இருப்பவர்கள் உங்களைச் சந்தோஷத்தோடு ஏற்கவேண்டும்.

காட்டில் ஒரு சிங்கம் கால்களை வீசி வீசி கர்வத்தோடு நடந்தது. அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்த முயல் குட்டியைச் சட்டென்று பிடித்தது.

“ஏய், இந்தக் காட்டில் யார் ராஜா?” என்று கேட்டது. முயல் குட்டி பற்களெல்லாம் கிடுகிடுக்க, “சந்தேகமென்ன? நீங்கள்தான்!” என்றது.

சிங்கம் முயலை விட்டுவிட்டு, அடுத்ததாக ஒரு நரியைத் தாவிப் பிடித்தது. அதே கேள்வியைக் கேட்டது.

நரி நடுக்கத்துடன், “தலைவா... உனக்கேன் இந்த சந்தேகம்? உன்னைத் தவிர, வேறு யார் இங்கே ராஜாவாக இருக்க முடியும்?” என்றது.

அப்புறம் வழியில் எதிர்ப்பட்ட மிருகங்கள் எல்லாம் பணிவாக மண்டியிட்டு சிங்கத்திடம், “நீங்கள்தான் ராஜா” என்று அச்சத்தில் அலறின.

சிங்கத்துக்குப் பெருமை பிடிபட வில்லை. இன்னும் கொஞ்சம் தூரம் போனது.

அங்கே ஒரு யானை, சிங்கத்தைப் பொருட்படுத்தாமல் அதுபாட்டுக்கு மரத்தில் இருந்து இலைகளைப் பறித்துக் கொண்டிருந்தது.

சிங்கம் அதன் எதிரில் போய் நின்று, “ஏய் முட்டாளே, யார் இந்தக் காட்டுக்கு ராஜா?” என்று கர்ஜித்தது.

யானை திரும்பியது. தும்பிக்கையால் சிங்கத்தைச் சுருட்டித் தூக்கியது. ஓங்கித் தரையில் அடித்தது.

சிங்கத்தின் முதுகெலும்பே முறிந்து போயிற்று. “ஏம்ப்பா, இப்ப நான் என்னப்பா கேட்டுப்புட்டேன்? வாய் வார்த்தையாகச் சொல்லப்படாதா?’ என்று வலியில் முனகியபடி கேட்டது சிங்கம்.

“இனிமேல் இந்த விஷயத்தில் உனக்குக் குழப்பமே வரக்கூடாது, பார்!” என்றது, யானை.

சுற்றியிருப்பவர்கள் உங்களை மகிழ்ச்சியுடன் ஏற்காவிட்டால், சிங்கத்திற்குக் கிடைத்த அனுபவம்தான் உங்களுக்கும் கிடைக்கும்.

இப்படி வேறு யாராவது உங்களுக்குக் கற்பிப்பதற்கு முன் உங்கள் வாழ்க்கையை நீங்களே இனிதாக அமைத்துக் கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்.

எதைச் செய்தாலும் முழு ஆசையோடு செய்யுங்கள்!

உங்களுக்குச் சந்தோஷமானது என்று நம்பி நீங்கள் ஏற்றுக் கொண்டது எதுவாக இருந்தாலும், அதோடு சில சவால்கள் இலவச இணைப்பாகச் சேர்ந்துவரும்.

அது கடின உழைப்பாக இருக்கலாம், மும்முரமான போட்டியாக இருக்கலாம், எதிர்பாராத தடைகளாக இருக்கலாம்... எதுவாக இருந்தாலும் அதையெல்லாம் ஆசையோடு, சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்ளுங்கள்.

உங்கள் வளர்ச்சியில் உண்மையிலேயே விருப்பம் இருந்தால், பிரச்னைகளை ஆசையோடு வரவேற்கப் பழகுங்கள்.

தோற்றுக் களைத்தவர்கள் பொதுவாகச் சொல்லும் காரணம் என்ன தெரியுமா?

‘எனக்கு மட்டும் நேரமே சரியில்லை. நான் மாவு விற்கப்

போனால் காற்று அடிக்கிறது. உப்பு விற்கப்போனால் மழை பெய்கிறது.’

நீங்கள் கேட்டாலும், கேட்காவிட்டாலும் எப்படியும் இந்த உலகம் உங்கள்மீது பிரச்னைகளை வீசி வேடிக்கை பார்க்கத்தான் போகிறது. அப்புறம் ஏன் அவற்றை எதிர்கொள்ளத் தயங்குகிறீர்கள்?

கடினமான சந்தர்ப்பங்கள் உண்மையில் சாபங்கள் அல்ல. உங்களுக்கு அருளப்படும் வரங்கள்!

ஒரு சினிமாவுக்குப் போகிறீர்கள். அடுத்தடுத்த காட்சிகள் நீங்கள் எதிர்பார்த்தபடியே வந்துகொண் டிருந்தால் அந்த சினிமாவை ரசிப்பீர்களா, அல்லது போர் என்று எழுந்து வெளியே வருவீர்களா?

எதிர்பாராத திருப்பங்கள்தானே ஒரு வாழ்க்கையைச் சுவையாக அமைத்துத் தரமுடியும். கடவுளிடம் ஒரு விவசாயி கடுமையாகச் சண்டைக்குப் போனான்.

“உனக்குப் பயிர்களைப்பற்றி என்ன தெரியும்? நீ நினைத்தபோது மழையை அனுப்புகிறாய். தப்பான சமயத்தில் காற்றை வீசுகிறாய். உன்னால் பெரிய தொந்தரவாக இருக்கிறது. பேசாமல், அந்த வேலைகளை விவசாயி ஒருத்தனிடம் ஒப்படைத்துவிடேன்!”

கடவுள் உடனே, “அப்படியா? சரி, இனிமேல் வெளிச்சம், மழை, காற்று எல்லாம் உன் கட்டுப்பாட்டிலேயே இருக்கட்டும்” என்று வரம் அருளிவிட்டுப் போய்விட்டார்.

விவசாயிக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. அடுத்த பருவம் வந்தது.

“மழையே, பெய்” என்றான். பெய்தது. நிறுத்தச் சொன்னபோது, நின்றது. ஈரமான நிலத்தை உழுதான். தேவையான வேகத்தில் காற்றை வீசச் செய்து, விதை தூவினான். மழை, வெயில், காற்று எல்லாமே அவன் சொன்ன பேச்சைக் கேட்டன. பயிர் பச்சைப் பசேலென்று வளர்ந்தது. வயல் வெளியைப் பார்க்கவே படு ரம்மியமாக இருந்தது.

அறுவடைக் காலம் வந்தது. விவசாயி ஒரு கதிரை அறுத்தான். திறந்து பார்த்தான். அதிர்ந்தான். உள்ளே தானியத்தைக் காணவில்லை.

அடுத்தது, அதற்கடுத்தது என்று ஒவ்வொரு கதிராக வெட்டி எடுத்துத் திறந்து பார்த்தால், ஒன்றிலுமே தானியம் இல்லை.

“ஏ கடவுளே!” என்று கோபத்தோடு கூப்பிட்டான். “மழை, வெயில், காற்று எல்லாவற்றையுமே மிகச் சரியான விகிதங்களில்தானே பயன்படுத்தினேன்! ஆனாலும், பயிர் பாழாகிவிட்டதே, ஏன்?”

கடவுள் புன்னகைத்தார்: “என் கட்டுப்பாட்டில் இருந்தபோது காற்று வேகமாக வீசும். அப்போது கதிர்களெல்லாம், அம்மாவை இறுக்கிக்கொள்ளும் குழந்தை களைப்போல பூமிக்குள் தங்கள் வேர்களை மிக ஆழமாக அனுப்பிப் பிடித்துக்கொள்ளும். மழை குறைந்தால், தண்ணீரைத் தேடி வேர்களை நாலாபக்கமும் அனுப்பும். போராட்டம் இருந்தால்தான் தாவரங்கள் தங்களைப் பாதுகாத்துக் கொண்டு, வலுவாக வளரும். எல்லாமே வசதியாக அமைத்துக் கொடுத்ததில் உன் பயிர்களுக்கு சோம்பேறித்தனம் வந்துவிட்டது. தளதளவென்று வளர்ந்ததே தவிர, ஆரோக் கியமான தானியங்களைக் கொடுக்க அவற்றுக்குத் தெரியவில்லை.”

“வேண்டாமடா, உன் மழையும், காற்றும்! நீயே வைத்துக் கொள்” என்று கடவுளிடமே அவற்றைத் திருப்பித் தந்துவிட்டான் விவசாயி. ஆம்... வாழ்க்கை எல்லாவிதத்திலும் சௌகரியமாகவே அமைந்துவிட்டால், அதைப் போன்றதொரு வெறுமை வேறெதுவும் இல்லை.

பிரச்னைகள் உங்களைப் போட்டு அழுத்தும் போதுதான், உங்கள் திறமை அதிகரிக்கும். சவால்கள்தான் மனிதனை முழுமையாக்கும்.

இருட்டு என்று ஒரு பிரச்னை இருந்ததால்தானே மின்விளக்கைக் கண்டு பிடித்தீர்கள்? பயணம் என்பது பிரச்னையாக இருந்ததால்தானே வாகனங்களுக்கு உருக் கொடுத்தீர்கள்? தொலைவில் இருப்பவர்களைத் தொடர்புகொள்வது பிரச்னையாக இருந்ததால்தானே, தொலைபேசியை உருவாக்கினீர்கள்?

பிரச்னைகளே இல்லாமல் இருந்துவிட்டால் உங்கள் மூளையின் திறனை எவ்வாறு அறிவீர்கள்?

சங்கரன்பிள்ளை புதிய வீடு கட்ட விரும்பினார். கட்டட நிபுணர் விதவிதமான பிளான்களைக் காட்டினார்.

‘இல்லை, இது இல்லை. நான் நினைத்திருப்பது வேறு மாதிரி’ என்று ஒவ்வொரு பிளானையும் நிராகரித்தார் சங்கரன்பிள்ளை. நிபுணர் களைத்துப்போனார். “உங்கள் மனதில் என்னதான் இருக்கிறது?” என்று கேட்டார்.

ஒரு புராதன பித்தளைக் குமிழை சங்கரன்பிள்ளை தன் பாக்கெட்டிலிருந்து எடுத்துக் காட்டினார். “இதைக் கதவில் பொருத்தக்கூடிய மாதிரி ஒரு வீட்டு பிளானை இதுவரை நீங்கள் எனக்குக் காட்டவில்லையே?’ என்றார்.

பிரச்னைகளை எதிர்கொள்ளத் தைரியமில்லை... ஆனால், வாழ்க்கை மட்டும் வசதியாக அமையவேண்டும் என்று நினைப்பவர்கள்தான் சங்கரன்பிள்ளையைப்போல் கதவுக் குமிழை வைத்துக்கொண்டு அரண்மனைக்கு ஆசைப்படுகிறார்கள். எதற்காக எல்லாம் திட்டமிட்டபடியே முடியவேண்டும்? ஏதாவது ஒன்று பிய்த்துக் கொண்டுதான் போகட்டுமே... என்னதான் ஆகிவிடும்? அதை எதிர்கொள்வோம். சமாளிப்போம். அதுதானே உண்மையான வெற்றி?

முடிவு சாதகமாக இருக்குமா, இருக்காதா என்று வீண்யோசனைகள் செய்து கொண்டிருக்காதீர்கள். முழுமையான ஈடுபாட்டுடன் செயலாற்றுங்கள்.

இனிமேல் சவால்கள் எதிர்வந்தால் அவற்றுக்குச் சாபம் கொடுக்காதீர்கள்.

அத்தனையையும் ஆசையோடு எதிர்கொள்ளுங்கள்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“இவ்வளவு கடவுள்கள் இருந்தும், ஞானிகள் வந்தும் – பசி பட்டினி, பிணி எல்லாம் ஏன்?”

“இந்த தேசத்தில் பசி, பட்டினிக்கெல்லாம் யார் காரணம்? பொறுப்பில்லாமல் ஜனத்தொகையை வீங்க வைத்தது நீங்களா, கடவுளா?

கணக்கு வழக்கில்லாமல் குழந்தைகளைப் பெற்றுப்போட்டுவிட்டு, கடவுள்தான் கொடுத்தார் என்று வெட்கமில்லாமல் சொல்லாதீர்கள்.

புத்தர், மகாவீரர் போன்றவர்கள் ஞானம் கொடுக்கவந்தார்கள். சோறு போட வரவில்லை. அப்புறம் உங்களுக்கு எதற்குக் கண்களும் கைகளும் கால்களும்? அவற்றைப் புத்திசாலித்தனமாகப் பயன்படுத்துவீர்கள் என்று நம்பித்தானே, அதையெல்லாம் உடம்பில் வைத்துப் படைத்து உங்களை கடவுள் பூமிக்கு அனுப்பியிருக்கிறார்?

தவறு உங்களிடம்தான்! நீங்கள் திருந்தும்வரை, எந்த பகவத்கீதையாலும் புண்ணியமில்லை. எந்த மதம் வந்தாலும் உங்களை மீட்க முடியாது.

கடவுளைக் கும்பிட்டுக்கொண்டே, ஆகாயத்தைப் பார்த்தபடி நடந்தால், திறந்திருக்கும் சாக்கடைக்குள்தான் போய்விழுவீர்கள்.

தயவுசெய்து உங்கள் வாழ்க்கையை உங்கள்கையில் எடுத்துக்கொள்ளுங்கள். கடவுள் கையில்கொடுக்காதீர்கள்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

உங்களுடைய ஆசை என்ன? எதைத் தொட்டாலும் வெற்றி கிடைக்கவேண்டும் என்பதுதானே?

மேல்நாட்டு உளவியல் நிபுணர்கள் என்ன சொல்லிக்கொடுக்கிறார்கள்? 'ஜெயிக்கவேண்டும், ஜெயிக்கவேண்டும் என்று உங்களுக்கு நீங்களே அடிக்கடி சொல்லிக்கொள்ளுங்கள். வெற்றியைக் குறிவைத்தே உங்களுடைய ஒவ்வொரு செயலும் இருக்கட்டும்' என்கிறார்கள்.

பெரும்பாலும் இந்த முயற்சி உங்கள் ரத்தக் கொதிப்பைத்தான் அதிகரிக்கும். ஏன்?

வெற்றியையே நினைத்து உழைத்தால், அது கிடைக்குமா, கிடைக்காதா என்ற

சந்தேகத்தில் படபடப்பு, அச்சம், கவலை, மன உளைச்சல் என்று ஏராளமான பிசாசுகள் உங்கள்மீது வந்து ஏறிக்கொள்ளும்.

இலக்கின்மீது ஒரு கண்ணைப் பதித்துக்கொண்டால், அவன் பாதிக் குருடனாகி விடுகிறான் என்கிறது, ஜென் தத்துவம். மிச்சமிருக்கும் ஒரு கண்ணை வைத்துக்கொண்டு எவ்வளவு தூரம் செயலாற்றமுடியும்?

அப்படி அரைகுறை கவனத்துடன் செயலாற்றாதீர்கள். இந்தக் கணம் செய்ய வேண்டியதை இரண்டு கண்களையும் பயன்படுத்தி முழுமையாகச் செய்யுங்கள். எட்டிப் பிடிக்கவேண்டிய அவசியமில்லாமல், வெற்றி இலக்கை சுலபமாகத் தொட்டுவிட முடியும்.

புரிந்துகொள்ளுங்கள்.

நீங்கள் கவனமாக உழைக்கவேண்டுமே தவிர, கடுமையாக உழைக்கத் தேவையில்லை. இதை விளக்க ஜென்னில் ஓர் அழகான சம்பவம் உண்டு.

சான்ஸூ என்றொரு ஜென் குரு இருந்தார். மிகச் சிறந்த வாள் வீரர். அவரிடம் ஒரு புதிய சீடன் சேர்ந்தான். 'இந்த நாட்டிலேயே முதன்மையான வாள் வீரனாக என்னை ஆக்க முடியுமா?' என்றான்.

'அதற்கென்ன... பத்து வருடங்களில் உன்னை அப்படித் தயார் செய்து விடுகிறேன்' என்றார் குரு. 'என்னது, பத்து வருடங்களா? ஐந்தே வருடங்களில் சாதிக்கவேண்டும் குருவே. மற்றவர்களைவிட இரண்டு பங்கு அதிகமாக உழைக்கத் தயாராக இருக்கிறேன்.'

‘அப்படியானால் இருபது வருடங்களாகும்’ என்றார், சான்ஸூ.

சீடன் திகைத்தான். ‘போதாது என் றால், இன்னும் நான்கு பங்கு கடுமை யாக உழைக்கிறேன்’ என்றான்.

‘அப்படிச் செய்தால், நாற்பது வருடங்களாகுமே’ என்றார் குரு.

ஆம், உங்களை வருத்திக்கொள்ள வருத்திக்கொள்ள— நீங்கள் நினைத்ததை அடைவதற்கு அதிகக் காலமாகும். இதைத்தான் சான்ஸூ அந்தச் சீடனுக்குப் புரியவைத்தார்.

கடுமையாக உழைப்பவர்கள் சில சமயம் வெற்றி பெறலாம். ஆனால், அதன் சந்தோஷத்தை அனுபவிக்க முடியாது.

உலகின் மிக அற்புதமான கண்டு பிடிப்புகள், விஞ்ஞானிகள் ஓய்வாக இருந்தபோதுதான் நிகழ்ந்திருக் கின்றன.

மரத்தடியில் சும்மா உட்கார்ந்திருந்த போதுதான் ஆப்பிள் விழுவதைக் கவனித்தார் நியூட்டன். புவியீர்ப்பு பற்றிய விதியைக் கண்டுபிடித்தார். ‘பாத் டப்’பில் ஓய்வாகக் குளித்துக் கொண்டிருந்த போதுதான், மிதப்பது பற்றிய விதிகளைக் கண்டுணர்ந்தார் ஆர்க்கிமிடீஸ். டென்ஷனில்லாமல், ரசித்து முழு ஈடுபாட்டுடன் பணிகளைச் செய்யும் போதுதான், மூளை அதன் உச்சத் திறனுடன் செயலாற்றும்.

கவனித்துப் பாருங்கள், விளையாட் டில்கூட, வெற்றியை நினைத்து அதிகப் படபடப்புடன் விளையாடும் குழுதான் பெரும்பாலும் தோற்கிறது. விளையாட்டை அனுபவித்து ஆடுபவர்கள் வெற்றி பெறுகிறார்கள்.

வெற்றி... வெற்றி... என்று உங்களை நீங்களே வருத்திக்கொள்ளும் சந்தர்ப்பங்களில் உடலளவிலும், மனதளவிலும் நீங்கள் பலவீனமாகிப் போவீர்கள்.

வெற்றியைப் பற்றிய அச்சத்தை விட்டுவிட்டு, மனதை அமைதியாக வைத்திருங்கள். உடல் தானாக வேகமாக உழைக்கும்.

ஆனால், உங்களில் பெரும்பாலானவர்கள் நேரெதிராக அல்லவா இருக்கிறீர்கள்? உங்கள் மனம் நிலையில்லாமல் வேகமாக இயங்கிக்கொண்டிருக்கிறது. அதனால், உடலின் வேகம் குறைந்து விடுகிறது.

இப்படித்தான் சங்கரன் பிள்ளையின் வாழ்க்கையில் ஒரு வேடிக்கை நடந்தது.

‘ஒரு வேலையை, மாலையில் வீட்டுக்குப் போனதும் மறக்காமல் செய்யவேண்டும்’ என்று கைக்குட்டை யில் அவர் முடிச்சு போட்டுக்கொண்டார்.

ஆனால், வீட்டுக்குப் போனதும் எதற்காக அந்த முடிச்சைப் போட்டோம் என்பது அவருக்குச் சுத்தமாக மறந்துவிட்டது.

படபடப்பானார். மூளையைக் கசக்கினார். மொட்டைமாடியில் உலாத்தினார். நெற்றியில் தட்டிக் கொண்டார். நோட்டில் என்னென்னவோ கிறுக்கினார். ஊஹூம்... நினைவுக்கு வரவே இல்லை..

‘பேசாமல் படுத்துத் தூங்குங்கள். எதுவாயிருந்தாலும் நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம்’ என்று அவரது மனைவி அறிவுரை சொன்னார்.

‘மாட்டேன். ஏதோ முக்கியமான விஷயமாயிருக்கும். அதைக் கண்டுபிடிக்காமல் எப்படித் தூங்குவது?’ என்று படுக்கையில் உட்கார்ந்தே இருந்தார்.

இதுவா... அதுவா... என மண்டைக்குள் நூறாயிரம் யோசனைகள் பூச்சிகள் போல் பறந்தன. கடைசியில் இரவு இரண்டு மணிக்கு சலித்துப்போய் கைக்குட்டையைத் தூர எறிந்தார். சடக்கென்று ஞாபகம் வந்தது.

‘இன்றைக்கு ஒன்பது மணிக்கே தூங்கப்போக வேண்டும்’ என்று நினைவுபடுத்திக்கொள்ளப் போடப்பட்ட முடிச்சு அது!

படபடப்பாக மூளையை இயங்கவிட்டால், சங்கரன் பிள்ளைக்கு நேர்ந்ததுதான் உங்களுக்கும் நேரும்.

முடிவைப் பற்றிய கவலையை விடுங்கள். ஒவ்வொரு முறையும் முழுமையான ஈடுபாட்டுடன் செயலாற்றுங்கள். வெற்றி தானாக உங்கள் கதவை வந்து தட்டும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“யார் நல்லவன்? யார் கெட்டவன்?”

“முதலில் அந்தத் தீர்ப்பை எழுத நீங்கள் யார்?

எல்லையில் ராணுவ வீரராய் துப்பாக்கி பிடித்து நிற்கிறீர்கள். பாகிஸ்தான் வீரர்கள் பத்துப் பேரைச் சுட்டுத்தள்ளுகிறீர்கள். நீங்கள் நல்லவரா, கெட்டவரா?

இந்திய ராணுவத்தினர் அழைத்துப்போனால் மெடல் கொடுப்பார்கள். பாகிஸ்தான் ராணுவத்தினர் அழைத்துப்போனால் சித்ரவதைக் கூடத்தில் போடுவார்கள்.

ஒரே செயலைச் செய்தபோதும், ஒருவருக்கு நீங்கள் நல்லவர். இன்னொருவருக்கு நீங்கள் வெகு மோசமானவர்.

உங்களை யாருடன் அடையாளப்படுத்திக்கொள்கிறீர்களோ, அதை வைத்துத்தானே நல்லது கெட்டதை உங்களால் தீர்மானிக்க முடிகிறது.

இயற்கை ஒருபோதும் பாரபட்சம் பார்ப்பதில்லை. செடி இருக்கிறது. தண்ணீரை பூசாரி ஊற்றினாலும், பூ பூக்கும். கொலைகாரன் ஊற்றினாலும் பூ பூக்கும்.

ஆனால், நீங்கள்..? கெட்டவர் என்று யாரைப்பற்றித் தீர்மானித்தாலும், அவர் மீது வெறுப்பை வளர்க்கிறீர்கள். முதலில் மனதளவில் அவரையும் உங்களில் ஒருவராக ஏற்றுக்கொள்ளப் பழகுங்கள். உங்கள் குறுகிய மனநிலையில் யாரைப் பற்றியும் தீர்ப்பு எழுதாதீர்கள்.”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

இந்த உலகில், மற்றவருடன் உங்கள் உறவு எப்படி அமைகிறது என்பது உங்கள் வாழ்க்கையைத் தீர்மானிக்கும் முக்கிய அம்சங்களில் ஒன்று.

இங்கே, நீங்கள் பல்வேறு முகங்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கும்.

ஒரு சிறிய சதுர அறையில் உங்களுடன் ஒரேயொரு சக பணியாளர் வேலை செய்தால், பிரச்னைகளைச் சமாளிப்பது சுலபமாயிருக்கலாம். ஆனால், உங்கள் பணியில் ஆயிரம் பேரைக் கையாளவேண்டியிருந்தால், பலப்பல விநோதமான அனுபவங்களை நீங்கள் சந்திக்க நேரிடும்.

நீங்கள் முக்கியமானவராக இருந்தாலும், அத்தனை பேரும் உங்களைப் புரிந்துகொள்ளவேண்டும் என்று எதிர்பார்த்தீர்களேயானால், மிகப் பெரிய ஏமாற்றமே ஏற்படும்.

அடுத்தவர் உங்களைப் புரிந்து கொள்ளாததால் இது நேரவில்லை. அடுத்தவரை நீங்கள் புரிந்து கொள்ளாததால்தான் இது நேர்ந்தது.

சொல்லப்போனால், மிக நெருக்கமான உறவு களிடம்கூட பல சந்தர்ப் பங்களில் ஏமாற்றங் களையே சந்தித்திருப் பீர்கள்.

ஒருமுறை, கோமாவில் பல மாதங்களாகக் கிடந்த கணவனை அருகிலேயே இருந்து கண்ணும் கருத்துமாக அவனது மனைவி கவனித்துக்கொண்டாள்.

கணவனுக்கு நினைவு திரும்பியதும், மனைவியை அருகே அழைத்தான்.

“என்னுடைய மோசமான நேரங் களில் எல்லாம் நீ என்கூடவே இருந் திருக்கிறாய். எனக்கு வேலை போன போது, உற்சாக வார்த்தைகள் சொன்னாய். நான் சொந்த பிஸினஸ் துவங்கி நஷ்டத்துக்கு மேல் நஷ்டம் வந்த போது, இரவு பகல் பார்க்காமல் உழைத்துப் பணம் கொண்டுவந்தாய். வழக்கில் நம் வீட்டையே ஜப்தி செய்தபோதுகூட மனம் தளராமல் சிறிய வீட்டுக்கு என்னுடன் குடி வந்தாய். இன்று ஆஸ்பத்திரியில் கிடக்கிறேன். இப்போதும் நீ பக்கத்திலேயே இருக்கிறாய். உன்னைப் பார்க்கும்போது எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா?’ என்று மெல்லிய குரலில் கேட்டான்.

மனைவி சந்தோஷக் கண்ணீர் பொங்க, நெகிழ்ச்சியுடன் அவன் கைகளைப் பற்றிக்கொண்டாள்.

கணவன் சொன்னான்... “நீ என்னோடு இருப்பதால்தான் எனக்கு எந்த நல்லதும் நடப்பதில்லையோ என்று தோன்றுகிறது.”

இப்படி ஏறுக்கு மாறாகக் குதர்க்க மாகப் புரிந்துகொள் பவர்களிடம் எந்த உறவுதான் நீடித்திருக்க முடியும்?

உறவுகளை எப்படிக் கையாள வேண்டும்?நாம் எப்படிக் கையாள் கிறோம்?

எவ்வளவு நெருக்கமான வர்களாக இருந்தாலும், ஒரு எல்லைக் கோட்டை வரைந்து வைத்திருக்கிறோம். இருவரில் யார் அதைத் தாண்டினாலும், அடுத்தவர் போர்க்கொடி தூக்குகிறோம். ஒருவராவது விட்டுக்கொடுத்து, பெருந் தன்மையாக நடந்தால்தான் அடுத்தவர் பிழைத்திருக்க முடியும்.

உறவினராயிருக்கலாம், உடன் பணிபுரிபவராக இருக்கலாம், நண்பராயிருக் கலாம், அடுத்த நாட்டைச் சேர்ந்தவராக இருக்கலாம்... உலகில் பிறந்தவர் எவராக இருந்தாலும் அவர்களிடம் உங்களுக்குப் பிடித்த குணங்கள் சிலவும், பிடிக்காத குணங்கள் சிலவும் கலந்துதான் இருக்கும்.

இரண்டு வகை குணங்களையும் சமமாக ஏற்றுக்கொள்ளும் பக்குவம் வந்துவிட்டால், பிரச்னைகள் எல்லாம் தீர்ந்துவிடும்.

அப்படியில்லாமல், தேவைப்படும்போது அடுத்த வரைக் கொஞ்சுவதும், தேவையில்லாதபோது எடுத்தெறிவதுமாக இருக்கும் வரை –

ஏமாற்றங்களும் மனப்போராட்டங்களும் தொடரத்தான் செய்யும். சுற்றியிருப்பவர்கள் எல்லோரும் அற்புதமான மனிதர்கள். ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் அவர்கள் பைத்தியக்காரத்தனமாக நடந்துகொள்ளலாம். அதைப் பெரிதுபடுத்தாதீர்கள்.

அவர்கள் மாற வேண்டும் என்று ஏன் எதிர்பார்க்கிறீர்கள்? நீங்கள் மாறுங்கள்.

எங்கெங்கே, யார் யாரிடம், எப்படி நடந்துகொள்ள வேண்டுமோ, அப்படி நடந்து கொள்ளத் தயாராயிருங்கள். அடுத்தவரிடம் எது செல்லுபடியாகுமோ, அதைப் பயன்படுத்துங்கள்.

ஒரு தடவை சங்கரன்பிள்ளை திறந்திருந்த சாக்கடைக்குள் விழுந்துவிட்டார். எவ்வளவு முயற்சி செய்தும் வெளியே வரமுடியவில்லை.

பெருங்குரலெடுத்து, “தீ... தீ...” என்று கத்தினார்.

அக்கம்பக்கத்திலிருந்தவர்கள் பரபரப்பாகி தீயணைப்பவர்களை வரவழைத்தார்கள். அவர்கள் சங்கரன்பிள்ளையைச் சாக்கடையிலிருந்து வெளியே இழுத்துப் போட் டார்கள்.

“தீ... தீ... என்று கத்தினீர்களே,எங்கே நெருப்பு?” என்று அவரிடம் கேட்டார்கள்.

“சாக்கடை... சாக்கடை... என்று கத்தினால் நீங்கள் வருவீர்களா? அதனால்தான் தீ... தீ... என்றுகுரல் கொடுத்தேன்” என்றார் சங்கரன்பிள்ளை.

உங்கள் வீட்டில் இருக்கும் ஒவ்வொருவரும் உங்களைப் போலவே இருந்துவிட்டால், என்ன ஆகும் யோசியுங்கள். அப்புறம் யாரை முட்டாள் என்று திட்டுவீர்கள்? யாரை புத்திசாலி என்று கொண்டாடுவீர்கள்? அரைமணி நேரத்துக்குக்கூட உங்களால் தாக்குப்பிடிக்க முடியாது.

வீட்டிலேயே இப்படி என்றால், உலகையே உங்களைப்போலமாற்றப்பார்ப்பது எப்பேர்ப்பட்ட முட்டாள்தனம்?

வாழ்க்கையின் சுவாரசியமே, அதன் வேறுபாடுகளில்தானே இருக்கிறது?

ஒவ்வொருவரையும் உங்கள் எதிர்பார்ப்புக்கு ஏற்றபடி வளைக்கப் பார்க்காதீர்கள். மாறாக, அடுத்தவரை அப்படியே ஏற்றுக்கொள்ளப் பழகுங்கள்.

அப்படிச் செய்தால், மற்றவர்கள் உங்கள் விருப்பப்படி அமையாமல் போனாலும், வாழ்க்கை உங்கள் விருப்பப்படி அமையும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“நான் கடவுளிடம் பிரியமாகத்தான் இருக்கிறேன். ஆனால், அவர் அதை கவனித்ததாகத் தெரியவில்லையே?”

“உங்கள் பிரச்னையே அதுதான். காணாதபோதுதான் காதல் கொள்கிறீர்கள்.

அடுத்தவேளைச் சாப்பாட்டைப் பகிர்ந்துகொள்ள ஆண்டவன் வந்துவிட்டால், உங்கள் பிரியம் நீராவி போல் காணாமல் போய்விடும்.

உங்கள் கடவுளை நீங்கள் வளர்க்கும் நாயைப்போல நினைத்துவிட்டீர்கள். நாய்க்குப் போடும் பிஸ்கட்களைப் போல் ஆண்டவனுக்கும் எதையோ எறிவீர்கள்.

நாயிடமாவது தூக்கிப் போட்டதைத்தான் எடுத்து வரச் சொல்வீர்கள். கடவுளிடம் ‘அதைக் கொடு, இதைக் கொடு’ என்று மனசுக்குத் தோன்றியதையெல்லாம் கொண்டுவரச் சொல்வீர்கள்.

இதன் பெயரா பிரியம்?

பக்கத்தில் இருப்பவரும் கடவுளின் படைப்புதான். அவர் வாழும்போது வெறுப்பை உமிழ்கிறீர்கள். கல்லறையில் மட்டும் கவிதை எழுதி வைக்கிறீர்கள்.

படைப்பின் மீது வெறுப்பைச் சொரிந்துவிட்டு, படைத்தவன் மீது மட்டும் ஆசை வைத்திருப்பதாகச் சொல்வது அவனை அவமானப்படுத்துவது போலாகும். அந்தப் பிரியத்தை அவன் எப்படி கவனிப்பான்?

உங்கள் ஒவ்வொரு மூச்சிலும், ஒவ்வொரு செயலிலும் அன்பு இருக்கட்டும். அந்த அன்பு தானாக உங்களை ஆண்டவனிடம் கொண்டு நிறுத்தும்!”

அத்தனைக்கும் ஆசைப்படு!

வாழ்க்கையைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பதே வாழ்க்கை ஆகிவிடாது. ஈடுபாட்டுடன் ஒவ்வொரு கணத்தையும் வாழ்வதே வாழ்க்கை.

என்னைப் பார்க்க ஒரு தொழிலதிபர் வந்திருந்தார். அவருடைய பிஸினஸ் கார்டைக் கொடுத்தார். சிறிது நேரம் என்னுடன் பேசிக்கொண்டிருந்துவிட்டு, அவர் புறப்படும்போது சற்றுத் தயங்கி நின்றார்.

“சத்குரு, என்னிடம் பேசும்போது இடையிடையே ரமியான்... ரமியான் என்று சொன்னீர்களே, அந்த மந்திரத்துக்கு என்ன அர்த்தம்?” என்று கேட்டார்.

நான் திகைத்துவிட்டேன். அவர் கொடுத்த கார்டைக் காட்டினேன்.

“அதுதானே உங்கள் பெயர்? RHAMEAN என்றுதானே கார்டில் போட்டிருக்கிறது?” என்றேன்.

“இல்லை சத்குரு... என் பெயர் ராமன். அதை ஆங்கிலத்தில் இப்படி எழுதினால் என் தொழில் சிறப்பாக இருக்கும் என்று நியூமராலாஜி ஜோசியர்தான் மாற்றச் சொன்னார்!”

பொத்துக்கொண்டு வந்தது சிரிப்பு எனக்கு.

எழுத்துக்களையும் எண்களை யும் உருவாக்கியதே மனிதன் தானே? பின், அவை எப்படி மனிதனை உருவாக்க முடியும்? உங்கள் திறமையை நம்பித் தொழிலைத் துவக்குவீர் களா, எண்களை நம்பித் துவக்குவீர்களா? என்ன கேவலம் இது?

உங்களுக்கு ராசியான எண் 1 என்று சொன்னால், ஒரு கண்ணையே குருடாக்கிக் கொண்டுவிடுவீர்களா? ஒரு கையையும், ஒரு காலையும் வெட்டி எறிந்துவிடுவீர்களா? என்ன அபத்தம் இது?

சங்கரன்பிள்ளை ஒருமுறை குடித்து விட்டுக் கலாட்டா செய்தார். நீதிமன்றத்துக்கு இழுத்து வரப்பட்டார். அவரிடம் நீதிபதி சலிப்பாக, “மறுபடி மறுபடி கோர்ட்டுக்கு வருகிறாயே, வெட்கமாயில்லையா? உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. எல்லாம் நீ குடிக்கும் விஸ்கி செய்யும் வேலை!” என்றார். உடனே, சங்கரன்பிள்ளை “உங்களுக்காவது உண்மைக் காரணம் தெரிந்திருக்கிறதே! என் மனைவி விஸ்கியைச் சொல்லாமல் என்னையே குற்றம் சாட்டுகிறாள்”என்றார்.

இப்படித்தான் சிலர், பழியை யார் மீது போடலாம் என்று அலைகிறார்கள்.

தோற்றுப் போனால், உடனே ஜாதகக் கட்டங்களையும், எண் ஜோசியத்தையும் துணைக்குச் சேர்த்துக் கொள்வதா? உங்கள் கையாலாகாத் தனத்தை அவர்கள் அல்லவா பயன்படுத் திக்கொள்கிறார்கள்?

என்னிடம் ஒரு பழைய மாருதி கார் இருந்தது. ஒருவர் அதை வாங்க விரும்பி னார். “சுவாமிஜி, உங்கள் கார் எண் எனக்கு மிக அதிர்ஷ்டமாக இருக் கும். என்ன விலை சொன்னாலும் வாங்கிக் கொள்கிறேன்” என்றார்.

சிரித்தேன். “எந்த எண்களைச் சொல்கிறீர் கள்? பதிவு எண் களையா? இன்ஜின் எண்களையா?” என்றேன்.

அவர் குழம்பினார். பின்பு போய், தனது ஜோசியரைக் கேட்டுக் கொண்டு வந்தார். “பதிவு எண்தான் முக்கியமாம்! ஆங்கில எழுத்துகளுக்கெல் லாம் ஏதேதோ எண்ணிக்கை போட் டுக் கூட்டிச் சொன் னார்” என்றார்.

ஜோசியர் குறிப் பிட்ட தேதியில், குறிப்பிட்ட நேரத்தில், 99,999 ரூபாய் பணம் கொடுத்தார்.

“பேசிய தொகை யில் ஒரு ரூபாய் குறை வாக இருக்கிறதே என்று தப்பாக நினைக்காதீர்கள். இதுதான் எனக்கு ராசியான தொகை” என்றவர், குறைந்த அந்த ஒரு ரூபாய்க்குப் பதிலாக விலை உயர்ந்த பரிசுப் பொருள் ஒன்றைக் கொடுத்தார். “இதெல்லாம் இருக்கட்டும். முதலில் காரை ஓட்டிப் பாருங் கள்... நிறைய பாகங் கள் வெலவெலத் திருக்கும். திருப்தியாக இருந்தால் பிறகு வாங்கிக் கொள்ளுங் கள்” என்றேன்.

தனக்கு ராசி யான எண்தான் முக்கியம் என்று ஓட்டிப் பார்க்க மறுத்து, காரை கையோடு வாங்கிக் கொண்டு போய்விட்டார்.

ஒரே மாதம்தான்... அவர் அந்த காரை விற்றுவிட்டார்.

காரணம் என்ன தெரியுமா? ஒருமுறை அவர் காரை ஓட்டிச் செல்லும்போது, முன் இருக்கையின் ஸ்பிரிங் விடுபட்டு, பின்னால் சாய்ந்துவிட்டதாம். ஏதோ அமானுஷ்ய சக்திதான் அவரைப் பின்னாலிருந்து இழுத்தது என்று பயந்து, காரையே விற்றுவிட்டார்.

காரை எடுத்துக்கொண்டு போன போது, கோயில் வாசலில் அவர் உடைத்த தேங்காய்க்குப் பலனில்லை. நசுக்கிய எலுமிச்சைகள் வீண். முக்கியமாக, அவருடைய ராசி எண் அவரைக் கைவிட்டுவிட்டதே!.

கிழமைகளும், தேதிகளும், எண்களும் நம் வசதிகளுக்காக நாம் உருவாக்கியவை. அவையா நம் வாழ்க்கையைத் தீர்மானிப்பது?

எதையோ செய்ய ஆசைப்பட்டு ஜோசியரிடம் போவீர்கள். வெற்றி கிடைக்கும் என்று அவர் சொல்லிவிட்டால், அலட்சியத்தால் முழுத்திறமை

காட்டமாட்டீர்கள். வெற்றி கிடைக்காது என்று அவர் சொன்னாலும், சலிப்பினால் முழு மூச்சுடன் ஈடுபடமாட்டீர்கள். பின் எதற்கு ஜோசியரிடம் போவது?

அரைகுறையாக வேலை செய்தால், விரும்பியது எப்படிக் கிடைக்கும்?

ஆசைப்பட்டதை அடைய வேண்டுமானால், உங்கள் திறமையை வளர்த்துக் கொள்ளுங்கள். விளையாடு வதற்கு முன்பாகவே முடிவைத் தெரிந்துகொள்ள நினைக்காதீர்கள். உங்கள் செயல்களுக்கான பொறுப்பை நீங்களே ஏற்றுக் கொள்ளத் துணியுங்கள்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

ஜாதகப் பொருத்தம் பார்க் காமல் திருமணம் செய்யலாமா?

உங்களுடன் வாழப் போகிறவரை நீங்கள் அல்லவா தெளிவுடன் தேர்ந்தெடுக்க வேண்டும்?

உங்கள் வாழ்க்கையை ஜோசியம், ஜாதகம் என்று ஏன் அடுத்தவர் கையில் ஒப்படைக்கிறீர்கள்?

கட்டங்களைப் பார்த்து அவர் செய்து வைத்த திருமணங்களில் எவையெவை விபத்துகளாக முடிந் திருக்கின்றன என்ற பட்டியலை உங்களிடம் காட்டியிருக்கிறாரா?

உங்கள் கணவனுடன் சண்டை வந்தால், காரணம் நட்சத்திரங்கள் என்பீர்கள். உங்கள் மனைவியுடன் சேர்ந்து வாழத் தெரியாவிட்டால், கிரகங்கள் மீது பழியைத் தூக்கிப் போடுவீர்கள்.

திருமண வாழ்வு சரியாக அமையாவிட்டால், அதற்குக் காரணம் இங்கே இருக்கும் இரண்டு பிடிவாதக்காரர்கள்தான். எங்கேயோ இருக்கும் ஒன்பது கிரகங்களல்ல.

கணவன், மனைவி இருவரும் மனதால் பொருந்திவிட்டால், தெளிவுடன் வாழ்க்கையை வாழத் தயாராகி விட்டால்... நாள் என்ன செய்யும்? நட்சத்திரங்களும், கிரகங்களும் என்ன செய்யும்?

## அத்தனைக்கும் ஆசைப்படு!

வெளியே தொடர்ந்துவேட்டுச் சத்தம் கேட்டது. காரணம் கேட்டேன். யாரோ ஒரு நடிகரின் படம் தோல்வியடைந்துவிட்டதாம். இன்னொரு

நடிகரின் ரசிகர் மன்றம் பட்டாசு வெடித்துக் கொண்டாடுவதாகச் சொன்னார்கள். என்ன அபத்தம் இது?

கால்பந்து விளையாடப் போகிறீர்கள். உங்களுக்கு எதிராக ஒரு அணி இருக்கும். அது உங்களைவிடத் திறமையான அணியாக இருந்தால், உங்களை கோல் போடவிடாமல் தடுக்கும். நீங்கள் அசந்த நேரம் உங்கள் பக்கம் கோல் போட்டு விடும். அதற்காக அந்த அணியை எதிரியாக நினைத்து, மைதானத்தை விட்டே துரத்திவிடுவீர்களா என்ன?

எதிர்க்க இன்னொரு அணியே இல்லை என்றால், நீங்கள் நினைத்த நேரத்தில் பந்தை எடுத்துக்கொண்டு எதிர்ப்பக்கம் போகலாம். நடுவில் எத்தனை தடவை வேண்டுமானாலும் உதைத்து கோல் போடலாம். ஆனால், அதன் பெயர் கால்பந்தாட்டமா?

அல்லது, வெற்றி பெற்றுக் காட்டவேண்டும் என்பதற்காக, உங்களுக்கு இணையாக இல்லாத கற்றுக்குட்டிகளுடன் மட்டும் விளை யாடிக் கொண்டிருப்பீர்களா?

யமகுசி, கராத்தேயில் மிகச் சிறந்த வீரர். பல போட்டிகளில் பங்கேற்று வெற்றிகளைக் குவித்தவர். ஒருமுறை போட்டியில் அவர் தன் குருவையே எதிர்கொள்ள வேண்டியிருந்தது.

தனக்குத் தெரிந்த அத்தனைவிதத்திலும் முயற்சி செய்தார் யமகுசி. குருவை வீழ்த்த முடியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகப் பொறுமை இழந்தார் யமகுசி. கோபத்தில் தவறான சில வீச்சுகளை முயற்சி செய்ததில், நிறைய காயங்களானதுதான் மிச்சம். போட்டி முடிந்ததும், குருவைப் பணிந்து தன் தோல்விக்குக் காரணம் கேட்டார்.

“நீ என்னை எப்படிப் பார்த்தாய், மகனே?”

“போட்டியென்று வந்துவிட்டால், குரு, சிஷ்யன் எல்லாம் கிடையாது. உங்கள் பலவீனங்களைக் கண்டுபிடித்து, உங்களை எப்படியாவது வீழ்த்திவிட வேண்டும் என்றுதான் பார்த்தேன். ஆனாலும், முடியவில்லையே குருவே?” குரு தரையில் ஒரு கோடு வரைந்தார். “இதைச் சிறியதாக்க வேண்டுமானால், என்ன செய்வாய்?”

யமகுசி அந்தக் கோட்டின் ஒரு பகுதியை அழித்துக் காட்டினார்.

“இதே கோடு அழிக்க முடியாதபடி பாறையில் இருந்தால்?”

யமகுசிக்கு விடை சொல்லத் தெரியவில்லை.

குரு அந்தக் கோட்டின் பக்கத்தில் அதை விட ஒரு பெரிய கோடு வரைந்தார். “இப்போது முதல் கோடு சிறியதாகி விட்டதல்லவா? யாரையாவது வெற்றி கொள்ளவேண்டுமானால், அவனைத் தாழ்த்த வேண்டுமென்று முயற்சி செய்யாதே! அவனைவிட அதிகமாக உன் திறமையை வளர்த்துக் கொள். உனக்காக விளையாடு. அவனுக்கு எதிராக விளையாடாதே!”

யமகுசி தெளிவடைந்தார்.

நீங்கள் எந்தத் துறையில் இருந்தாலும், போட்டியை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். உங்களுடன் போட்டி போடுபவரை உங்கள் எதிரியாகப் பார்த்தீர்களானால், உங்கள் நிம்மதி தொலைந்து போகும்.

தெருவில் நடந்து கொண்டிருக் கிறீர்கள். முன்பின் தெரியாத ஒருவர் உங்கள் பக்கத்தில் வந்து, காதருகில் ‘முட்டாள்’ என்று சொல்லிவிட்டுப் போய்விடுகிறார். உடனே உங்கள் ரத்தம் கொதிக்கும். அப்படிச் சொன்னவர் உங்களைவிடச் சிறியவராக இருந்தால், சண்டைக்குப் போவீர்கள். வலியவராக இருந்தால்?

காலையில் எழுந்திருக்கிறீர்கள். ஜன்னலைத் திறக்கிறீர்கள். அவர் உங்கள் வீட்டையே பார்த்துக் கொண்டு நின்றிருக்கிறார். அவர் இப்போது எதுவும் செய்யவேண்டாம்... காறித் துப்பவேண்டாம். கல் எடுத்து அடிக்கவேண்டாம். சும்மா நின்றிருந்தாலே போதும், உங்களுக்குப் படபடப்பு வந்துவிடுமல்லவா? காரியங்கள் தாறுமாறாகிவிடுமல்லவா?

அவர் வலியவரோ எளியவரோ... ஆனால், சொன்னபடி உங்களை முட்டாளாக்கிக் காட்டிவிட்டார் அல்லவா? நீங்கள் நண்பர் என்று நினைப்பவருக்குக் கூட இவ்வளவு சக்தி இல்லையே? யாரையாவது நீங்கள் எதிரியாக நினைத்தால், அவர் ஆற்றல் மிகுந்தவராகி விடுவதைக் கவனித்தீர்களா?

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்... நீங்கள் இங்கே யாருடனும் போர் புரிவதற்காக வரவில்லை. ஒருவரை அழித்தால், அடுத்தவர் தலை தூக்கிக்கொண்டு நின்றிருப்பார். உங்கள் ஆற்றலின் பெரும் பகுதி ஆக்கப்பூர்வமாகப் பயன்படாமல், அழிப்பதிலேயே வீணாகிவிடும்.

அடுத்தவரை எதிரியாக நினைக்காதீர்கள். பொறாமைக்கும் அச்சத்துக்கும் இடம் கொடுத்தால் உங்கள் திறமைதான் மழுங்கிப்போகும். எனவே, நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் உங்களுக்காக இருக்கட்டும்.இன்னொருவருக்கு எதிராக இருக்க வேண்டாம். அப்போதுதான், உங்களுக்கான சிகரத்தைச் சென்றடையும்வரை அந்தப் பயணம் ஆனந்தமாயிருக்கும்.

முழுத்திறமையும் வெளிப்படுத்தும் விதமாகச் செயல்படு வதில்தான் உண்மை யான வெற்றியே இருக்கிறது. அதற்கு உங்கள் உடல், மனம் – இரண்டின் ஆற்றலையும் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்து இருக்க வேண்டும்.

இதற்கு முறையான யோகாவை விடச் சிறந்த சாதனம் இல்லை.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“கடவுளுக்கு நெருக்கமாக இருக்க வேண்டுமென்றால், அற்பமான அன்றாடக் காரியங்களையெல்லாம் உங்களைப்போல் துறந்துவிடவேண்டுமா?” “என் துணிகளை நானே துவைத்துக் கொள்கிறேனே, அது அன்றாடக் காரியமில்லையா? தென்னை மரங்களுக்குத் தண்ணீர் ஊற்றிக் கவனித்துக் கொள்கிறேன், எனக்கான உணவைத் தயாரித்துக் கொள்கிறேன்... இவையெல்லாம் அற்பக் காரியங்களா? இதையெல்லாம் தவிர்த்து விட்டு இந்த உலகத்தில் எப்படி வாழப் போகிறீர்கள்?

நீங்கள் அரசியலில் இருக்கலாம். கணக்கெழுதுபவராக இருக்கலாம். பெரிய நிர்வாகியாக இருக்கலாம். தெருவைச் சுத்தம் செய்பவராகக்கூட இருக்கலாம். இந்த உலகில் வாழ்ந்திருக்க சில காரியங்களைச் செய்துதான் ஆக வேண்டும். அவற்றை அற்பமென்று நினைத்துக் கொள்வதால் தான் வருகிறது ஆபத்து!

உங்களுக்குப் பிரியமான காரியம் எதுவோ, அதை முழுமையாகச் செய்தால், கடவுளுக்கு நெருக்கமாக இருக்கிறீர்கள் என்றுதான் அர்த்தம்.

இன்னொருவரைப்போல வாழவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டு வீணாக வேதனைகளை வளர்த்துக் கொள்ளாதீர்கள்!”

அத்தனைக்கும் ஆசைப்படு!

பக்திக்கும் பாசத்துக்கும் இடையில் மிக மெல்லிய கோடுதான் இருக்கிறது.

நினைத்தது நிறைவேற வேண்டுமானால், முதலில் உங்களுக்கு எது வேண்டும் என்று மனதில் தெளிவுவேண்டும்... உறுதி வேண்டும்! உங்களில் பெரும்பாலானவர்களுக்கு எது வேண்டும் என்று கேட்கத் தெரியாது. எது வேண்டாம் என்று சொல்லித்தான் பழக்கம்.

‘நான் தோல்வி அடையக்கூடாது, என் தொழிலில் நஷ்டம் வரக்கூடாது, இதை நான் இழந்துவிடக்கூடாது’ என்று ‘வேண்டாம்’களையும், ‘கூடாது’களையும் தான் அதிகம் நினைக்கிறீர்கள்.

நீங்கள் எதற்கு ஆசைப்பட்டீர்களோ, முதலில் அதை மனதளவில் கற்பனையில் உருவாக்குங்கள். அப்போதுதான் அது நிஜத்திலும் உருவெடுக்கும்!

ஒரு வீடு கட்ட வேண்டும் என்றால், மனதில் அதை எழுப்பி, காகிதத்தில் வரைந்து, திருத்தி அமைத்துத்தானே நிஜத்தில் கட்டுகிறீர்கள்?

அஸ்திவாரம் போடும் நிலை யிலேயே மனதில் உறுதியில்லாமல், இது என்னால் முடியுமா என்று சந்தேகப்பட ஆரம்பித்தால், உங்கள் வீடு கற்பனையில்கூட எழும்பாது.

‘கடவுளே, எனக்கு இது வேண்டும்’ என்று தீவிரமாக வேண்டிக்கொண்ட சிலருக்கு, ஆசைப் பட்டது கிடைத்ததைக் கவனித்திருப்பீர்கள். கடவுளா வந்து அதை நடத்திக் கொடுத்தார்?

போர்க்களம் நோக்கிப் படையை நடத்திக்கொண்டிருந்தான் ஒரு தளபதி. பாதிவழியில் அவனை ஓர் ஒற்றன் எதிர் கொண்டான். “தளபதியாரே, நம்மிடம் ஆயிரம் வீரர்கள்தான் இருக்கிறார்கள். எதிரியிடமோ பத்தாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். நாம் பேசாமல் சரணடைந்துவிடலாம்’ என்றான்.

தகவல் அறிந்ததும் ஆயிரம் வீரர்களும் தைரியமிழந்தார்கள். அவர்கள் எல்லோரையும் அம்மன் ஆலயத்துக்கு வரச் சொன்னான் தளபதி.

“வலுவான எதிரியை நம்மால் வெல்ல முடியுமா என்பதைத் தெய்வத்திடமே கேட்டு விடுவோம். சந்நிதியில் இந்த நாணயத்தைச் சுண்டு கிறேன். தலை விழுந்தால் போருக்குப் போக, அம்மன் உத்தரவு தந்ததாக ஏற்போம். பூ விழுந்தால் இப்படியே திரும்பிவிடுவோம்” என்று நாணயத்தைச் சுண்டினான்.

தலை விழுந்தது. வீரர்கள் அனைவரும் உற்சாகமானார்கள். போருக்குப் போனார்கள். அவர்களைப்போல் பத்து மடங்கு படைபலம் கொண்ட எதிரியை வீழ்த்திவிட்டார்கள். வெற்றியுடன் நாடு திரும்புகையில் அம்மனுக்கு நன்றி சொல்ல, எல்லோரும் அதே கோயிலில் கூடினார்கள்.

தளபதி அப்போதுதான் தன்னிடமிருந்த நாணயத்தை எடுத்துக் காட்டினான். அதில் இரண்டு பக்கமும் தலைதான் அச்சாகியிருந்தது.

தெய்வமே உத்தரவு தந்துவிட்டதாக எண்ணிய வீரர்கள், எப்படியும் வெற்றி பெறுவோம் என்று முழுமையாக நம்பினார்கள். அவர்களிடம் எதிர் மறையான எண்ணங்கள் எழவில்லை. அதனால் வெற்றியே பெற்றார்கள். அந்த விதத்தில் கடவுள் என்பது எண்ணங்களை ஒருமுகப்படுத்திக் கொள்ளப் பயன்படும் ஒரு கருவி. அவ்வளவுதான்.

மற்றபடி, எதற்கெடுத்தாலும் கோயிலுக்குப் போய் வேண்டிக்கொண்டால் காரியங்கள் நடந்துவிடுமா?

கடவுள்மீது இம்மியளவும் சந்தேகமில்லாத பூரண நம்பிக்கை உங்களுக்கு இருக்கிறதா? கள்ளம் கபடமற்ற அந்த குணம் இருந்தால்தான்,

எதிர்மறையான எண்ணங்கள் தலையெடுக்காது... ஆசைப்பட்டது கிடைக்கும்!

ஆனால், சந்நிதியில் ஒரு கண்ணும், வாசலில் விட்டு வந்த செருப்பில் ஒரு கண்ணுமாகத்தான் உங்களால் கடவுளுடன் உறவு கொண்டாட முடியும் என்றால், கடவுளை நம்புவதாக உங்களை நீங்களே ஏமாற்றிக்கொள் கிறீர்கள். அவ்வளவுதான்! அந்தப் பொய் விசுவாசம் உங்கள் காரியங்களை நிறைவேற்றிக்கொள்ள உதவாது.

கடவுளிடம் வேண்டிக்கொண்ட பிறகும் அது நடக்குமோ, நடக்காதோ என்ற பயமும், மனதின் போராட்டமும் தொடர்ந்தால், எதிர்மறையான எண்ணங்கள் எப்படி விலகும்? ஆசைப்பட்டது எப்படிக் கிடைக்கும்?

சங்கரன்பிள்ளை ஒருமுறை வெகுதூரம் நடந்து, தற்செயலாக சொர்க்கத்துக்குள் நுழைந்துவிட்டார். அவருக்கு அகோரப் பசி. களைப்பாக இருந்ததால் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தார். அது கேட்கும் வரங்களை எல்லாம் அள்ளித்தரும் கற்பக விருட்சம். அது தெரியாமலேயே, ‘இப்போது மட்டும் வயிறார உணவு கிடைத்தால் எப்படி இருக்கும்?’ என்று நினைத்தார்.

அடுத்த கணம் ஆசைப்பட்ட உணவு வகைகளெல்லாம் பொன் தட்டில் அவர் முன் வந்தன. விரும்பிய பழச் சாறுகள் எல்லாம் தங்கக் கோப்பைகளில் கிடைத்தன.

வயிறு நிரம்பியவுடன் தூக்கம் வந்தது. ‘வசதியான கட்டில் இருந்தால்?’ என்று நினைத்தார். உடனே சொகுசான மெத்தையும் கட்டிலும் அவர் முன் தோன்றின. அவருக்கு இப்போது அச்சம் வந்துவிட்டது.

‘நினைத்தவுடன் எப்படி, எல்லாம் கிடைக்கிறது? இதென்ன பிசாசுகளின் இருப்பிடமா?’ என்று நினைத்தார்.அடுத்த கணமே அவரைப் பிசாசுகள் சூழ்ந்தன.

‘ஐயையோ, இந்தப் பிசாசுகள் என்னைக் கொன்றுவிட்டால்..?’ என்று சங்கரன் பிள்ளை நினைத்ததுதான் தாமதம், பிசாசுகள் அவரைக் கிழித்துத் தின்றன.

சங்கரன்பிள்ளைக்கு நேர்ந்த கதியைக் கவனித்தீர்களா? உங்கள் எண்ணங்கள் எதிர்மறையாக இருந்தால், இதுதான் விளைவு.

உங்கள் மனதில் தேவையானதற்கு ஆசைப்படும் எண்ணம் ஒன்று எழுந்தால், நம்பிக்கையின்றி அச்சப்படும் எண்ணங்கள் ஆயிரம் தோன்றுகின்றன. உங்கள் ஆசை எண்ணத்தின் சக்தியை நீங்களே பலவீனப்படுத்தும் அபத்தத்தை முதலில் விட்டொழியுங்கள்.

ஆசைப்பட்டதைக் கொடுக்கும் கற்பக விருட்சங்களைத் தேடி நீங்கள் காட்டுக்குள் போகத் தேவையில்லை. உங்கள் எண்ணங்கள் தீவிரமாக இருந்தால், உங்கள் மனம் உறுதியாக இருந்தால், அதுவே வரமளிக்கும் விருட்சமாகச் செயல்படும். எண்ணங் களால் ஏற்படும் அதிர்வுகளுக்கு அந்த சக்தி உண்டு என்று விஞ்ஞானத்திலும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பின் என் கணவருக்கு அடிக்கடி காய்ச்சல் வருகிறதே, ஏன்?”

“குழந்தைப் பருவத்திலிருந்தே ஒரு தவறான அணுகுமுறை துவங்கிவிடுகிறது. ஒரு குழந்தை ஆனந்தமாக விளையாடினால் அதைக் கவனிப்பதற்கு ஆளில்லை. காய்ச்சல் வந்தால், அந்தக் குழந்தையைக் குடும்பமே சூழ்ந்துகொள்கிறது.

குழந்தைகள் அடிக்கடி நோயுறுவதற்குக் காரணம், சுற்றியுள்ளவர்கள்தான்.

அவர்களுக்குத் தேவையான மருத்துவத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள். ஆரோக்கியமான உணவை வழங்குங்கள். அந்தப் பொறுப்பைக் கைவிடச் சொல்லவில்லை. மற்றபடி, அவர்களைக் கட்டுப்படுத்தாமல் விளையாட விடுங்கள். தேவையற்ற கவனிப்பை அவர்கள்மீது சொரிந்து பழக்கிவிட்டீர்களானால், கவனிப்புக்காக ஏங்கும்போதெல்லாம், அவர்களை அறியாமலேயே நோய்வாய்ப்பட ஆரம்பித்துவிடுவார்கள்.

வயதான பின்னும் இந்தப் போக்கு மாறுவதில்லை. ஓய்வு பெற்றதும் மற்றவர் கவனம் குறைந்துவிட்டதாக அச்சம் வருவதால், காய்ச்சலும் வருகிறது.

உலகம் ஆரோக்கியமாக இருக்க வேண்டுமானால், தயவுசெய்து நோய்களைக் கொண்டாடாதீர்கள்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

ஏது உங்களுக்கு வேண்டும் என்பதில், மனதில் தெளிவும் உறுதியும் இருந்துவிட்டால், ஆசைப்பட்டதை அடைவது எளிது.

தீவிரமான ஆசை இருந்தால், அது கிடைக்குமா, கிடைக்காதா என்ற முட்டாள்தனமான சந்தேகம் எதற்கு?

‘உங்களால் எழுந்து நடக்க முடியுமா?’

‘முடியும்’ என்பீர்கள்.

‘உங்களால் காற்றில் எழும்பிப் பறக்க முடியுமா?’

‘முடியாது’ என்பீர்கள் தானே!

உங்களுடைய இந்த இரண்டு பதில்களையும் தீர்மானித்தது உங்களுடைய முந்தைய அனுபவங்கள் தானே? ஒரு விருப்பம் நேற்று நடக்கவில்லை என்பதால், இனி என்றைக்கும் நடக்காது என்று எந்த அடிப்படையில் தீர்மானிக்க முடியும்?

நூறு வருடங்களுக்கு முன், அமெரிக்காவில் நடப்பதை அந்தக் கணமே இங்கே இந்தியாவில் பார்க்க வேண்டும் என்று விரும்பி இருந்தால் அது நடந்திருக்காது. ஆனால், அப்படிப் பார்க்க வேண்டும் என்று யாரோ தீவிரமாக விரும்பியதால் தானே உங்களுக்குத் தொலைக்காட்சி கிடைத்தது?

ஜெர்மனியைச் சேர்ந்த ஓட்டோலிலியந்த்தா என்ற விஞ்ஞானி, ‘பறக்க முடியாது’ என்பதை ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை. அவர்தான் முதன் முதலாகப் பறக்கும் இயந்திரத்தை அமைத்தார். இந்த சந்தோஷத்தைத் தன் நாட்டு மக்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்பினார். ஒரு நாளைக் குறிப்பிட் டார். அன்றைக்கு எல்லோர் முன்னிலையிலும் பறந்து காட்டுவதாக வாக்குக் கொடுத்தார்.

ஆனால், ஜெர்மன் சர்ச்சுகளில் பாதிரியார்கள் கொந்தளித்தார்கள். ‘தேவர்களும், தேவதைகளும் மட்டுமே விண்ணில் பறக்கலாம். மனிதன் பறப்பது கடவுளுக்கு எதிரானது’ என்று, ஓட்டோலிலியந்த்தா கட்டுமானம் செய்திருந்த விமானத்தை, இரவோடிரவாகத் தீயிட்டுக் கொளுத்தி விட்டார்கள்.

உலக சரித்திரத்தில் மத குருமார்கள் பலர் இப்படித்தான் கடவுளின் பிரதிநிதியாகத் தங்களைக் காட்டிக்கொள்ளும் வியாபாரம் படுத்துவிடுமே என்று அவ்வப்போது பல ஆட்சேபங்களைக் கிளப்பி வந்திருக்கிறார்கள்.

ஓட்டோலிலியந்த்தா தளரவில்லை. மீண்டும் விமானத்தைக் கட்டி முடிக்க அவருக்கு நான்கு வருடங்கள் தேவைப்பட்டன. ஆனால், அதற்குள் ரைட் சகோதரர்கள் தயாரித்த விமானம் விண்ணில் பறந்து காட்டி சரித்திரத்தை மாற்றிவிட்டது.

மனிதனால் பறக்க முடியுமா என்று நம்பிக்கையின்றி, சந்தேகங்களை மட்டுமே வளர்த்திருந்தால், ஓட்டோலிலியந்த்தாவோ, ரைட் சகோதரர்களோ விமானத்தைக் கண்டுபிடித்திருக்க முடியுமா? இன்றைக்குச் சில மணிநேரங்களில் உலகின் மறுபக்கத்தையே சென்றடையும் வாய்ப்புஉங்களுக்குக் கிடைத்திருக்குமா?

‘பரிணாம வளர்ச்சியில் குரங்கின் வால் உதிர்ந்து மனிதன் பிறந்தான்’ என்று டார்வின் சொன்னது உண்மை யாகத்தான் இருக்க வேண்டும். வால் உதிர்ந்துவிட்டது. ஆனால், குரங்கு இறங்கிப் போகவில்லை. மனித மனத் தின் உள்ளேயே உட்கார்ந்துவிட்டது. நிலையில்லாமல் அங்கும் இங்குமாகத் தாவி எதிலும் தீவிர ஈடுபாடு இல்லாமல் அது அலைந்துகொண்டிருப்பதைக் கவனித்திருக்கிறீர்களா?

அந்தக் குரங்கைக் கிட்டே சேர்க்கா மல், மனதில் உறுதியாக இருந்த மிகச் சிலரால்தான் உலகில் இவ்வளவு மாற்றங்களைக் கொண்டுவர முடிந்திருக்கிறது.

நடக்காது, முடியாது, கிடைக்காது என்று மட்டுமே உங்கள் மூதாதையர் விட்டிருந்தால், நீங்கள் இன்னும் மரங் களில்தான் தொங்கிக் கொண்டு இருப்பீர்கள்.

புராணக் கதைகளில் படித்திருப்பீர்கள். ஈசனை நினைத்து ஓர் அசுரன் கடுமையான தவம் செய்வான். அந்தத் தவத்தைக் கலைக்க தேவர்கள் பெரு முயற்சி செய்வார்கள். புயலடிக்கும். பெருமழை கொட்டும். துஷ்ட மிருகங்கள் தொந்தரவு செய்யும். தேவலோகத்திலிருந்து ரம்பை, ஊர்வசி போன்ற அதிரூப அழகிகள் அவன் கவனத்தைச் சிதறடிக்கப் பார்ப்பார்கள். எத்தனை இடையூறுகள் வந்தாலும், அசுரன் தன் தவத்தில் உறுதியாக இருந்ததால், இயற்கையே அவனுக்கு அரணாக நிற்கும். இறுதியில் தனக்கு வேண்டிய வரத்தை சிவனிடம் வாங்கிக்கொண்டுதான் அவன் போவான்.

ஆம், உறுதியான எண்ணங்கள் இருப்பவர் களுக்குக் கிடைக்க வேண்டியதைக் கடவுளே நினைத்தாலும் தடுக்க முடியாது.

மகாத்மா காந்தி எளிமையான மனிதர். குறிப்பிட்ட எந்தத் துறையிலும் அபார திறமை பெற்றவர் என்று சொல்ல முடியாது. ஆனால், திடீரென்று உலகமே வியக்கும்விதத்தில் விஸ்வரூபம் எடுத்தார். யாராலும் அசைக்க முடியாத மாபெரும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தை அசைத்துக் காட்டினார். இது எப்படி அவருக்குச் சாத்தியமாயிற்று?

எடுத்துக்கொண்ட பொறுப்பில் முழுமையான தீவிரம் காட்டினார் மகாத்மா. அவரைவிட கல்வியும், செல்வமும், வசதியும், திறமையும் பெற்றிருந்த பலரும் அவரைப் பின்பற்றத் தயாராக இருந்தார்கள். காரணம், விரும்பியதைச் சாதிக்க அவர் முழுமையான மன உறுதியுடன் இருந்தது தான். சிறையில் தூக்கிப்போட்டாலும், அவர் தன் உறுதியிலிருந்து பின்வாங்கவில்லை. அவருடைய மனவலிமையைக் குலைக்க முடியாமல், பிரிட்டிஷ் அரசு பணிந்தது.

தீவிரமாயிருப்பவர்களால்தான் இப்படிச் சாதிக்க முடியும்.

துரதிர்ஷ்டவசமாக, இன்றைக்குத் தங்கள் விருப்பத்தில் முழுமையான தீவிரம் கொண்டு இருப்பவர்கள் எல்லோரும் ஆபத்தான சிந்தனைகளைக்

கொண்டிருக்கிறார்கள். தீவிரவாதிகள் தாங்கள் விரும்பியதை நிறைவேற்றிக் கொள்ள தங்கள் உயிரைக் கொடுக்கக்கூடத் தயாராக இருக்கிறார்கள்.

மகாத்மா காந்தியும் தீவிரவாதிதான். ஆனால், வன்முறையை புள்ளியளவுக்குக்கூட ஆதரிக்காத தீவிரவாதி. எதிர்மறை எண்ணங்களில் விருப்பம் காட்டாத தீவிரவாதி.

யாராலும் கலைக்க முடியாத அதே போன்ற உறுதியோடு நீங்கள் இருந்தால், விரும்பியதை நிச்சயம் அடைவீர்கள்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“மதமாற்றம் பற்றி உங்கள் கருத்து?”

“மனிதன் தனக்குள் இருக்கும் இறைத்தன்மையை உணர்வதற்கான வாய்ப்பளிக்க, அவன் உள்நோக்கி அடியெடுத்து வைப்பதற்காகவே மதங்கள் உருவாக்கப்பட்டன. தெருவில் கூவி விற்பதற்காக அல்ல.

எண்ணிக்கையைக் கூட்டிக் காட்ட வேண்டும் என்பதற்காக எதையும் செய்யத் துணியும் மூர்க்கத்தனத்திற்குப் பெயர் மதம் அல்ல!

‘நான் நம்பும் கடவுளை நீயும் நம்பு... இல்லையென்றால், கொன்று விடுவேன்’ என்று கத்தி முனையில் திணிப்பது மதமல்ல. அதேபோல, பசியும் ஏழ்மையுமாக இருப்பவர்களுக்கு உணவும் கல்வியும் கொடுப்பது உன்னதமான செயல்தான். ஆனால், சாப்பாட்டைக் காட்டித் தன் பக்கம் வரச் சொல்வது எப்பேர்ப்பட்ட ஆபாசம்?

பசித்தவனுக்கு உணவுதான் கடவுள். அதை நம்பித்தான் அவன் மதம் மாறுவானே ஒழிய, அவனுக்குப் புதிய கடவுள் மேல் விசுவாசம் வந்துவிடப் போவதில்லை. தங்கள் கடவுள் மேல் உண்மையான நம்பிக்கை இருப்பவர்களுக்கு, பல்லாயிரக்கணக்கான வருடங்கள் வளர்ந்த பாரம்பரியம் மிக்க ஒரு கலாச்சாரத்தைத் தகர்த்துத் தன் பக்கம் கூட்டம் சேர்க்க வேண்டிய அவசியம் இல்லை.

எந்த ஒரு மதத்துடனும் தன்னை அடையாளப்படுத்திக்கொள்வதைவிட, ஒரு கலாச்சாரத்தோடு தன்னை அடையாளப்படுத்திக்கொள்வதே மனிதனுக்கு மேன்மையானது!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

ஒரு முறை சங்கரன்பிள்ளைக்குக் கடவுளைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

‘உனக்கு மூன்று வரங்கள் தருகிறேன்’ என்றார் கடவுள்.

‘எது வேண்டுமானாலும் கேட்கலாமா?’

‘கேள். ஆனால், உனக்கு என்ன கிடைத்தாலும், உன் நண்பனுக்கு அதைப் போல் இரண்டு பங்கு கிடைக்கும்’ என்றார் கடவுள்.

சங்கரன்பிள்ளை சந்தோஷத்துடன் வீட்டுக்குப் போனார்.

‘கடவுளே, அரண்மனைபோல ஒரு வீடு வேண்டும்.’

அடுத்த கணம் சாயம் போயிருந்த அவருடைய வீடு, அபாரமான அரண்மனையாகிவிட்டது.

ஜன்னல் வழியே பார்த்தார். அவருடைய நண்பன் வசித்த இடத்தில் இரண்டு அரண் மனைகள் தோன்றியிருந்தன.

சங்கரன்பிள்ளைக்குச் சற்றே வலித்தது.

‘போகட்டும். என்னோடு ஜாலியாக இருப்பதற்கு ஓர் உலக அழகி வேண்டும்’ -வேண்டிக் கொண்டதும், அவருடைய கட்டிலில் மிக ஒய்யாரமான பேரழகி படுத்திருந்தாள்.

சங்கரன்பிள்ளையால் ஆர்வத்தை அடக்க முடியவில்லை. ஜன்னல் வழியே நண்பர் வீட்டைப் பார்த்தார். அங்கே பலகணியில் அவனை இரண்டு பேரழகிகள் இருபுறமும் கொஞ்சிக்கொண்டிருந்தார்கள். அதற்கு மேல் சங்கரன்பிள்ளையால் பொறுக்க முடியவில்லை. மூன்றாவது வரத்தை அவசரமாகக் கேட்டார்,

‘கடவுளே, என்னுடைய ஒரு கண்ணைப் பிடுங்கிக்கொள்.’

தன்னிடம் இருப்பது, அடுத்தவரிடம் இல்லாதிருந்தால் மட்டுமே சங்கரன் பிள்ளைபோல் சந்தோஷப்படுபவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் இருப்பதையும் இழந்துவிட்டு பரிதவித்துக் கொண்டிருப்பவர்கள்.

நீங்கள் ஒரு கார் வாங்குவீர்கள். சந்தோஷமாயிருப்பீர்கள். ஆனால், பக்கத்து வீட்டுக்காரன் உங்களை விட விலையுயர்ந்த கார் வாங்கினால், உங்கள் சந்தோஷம் புஸ்ஸென்று போய்விடும். ஆயிரம் வருடங்களுக்கு முன் மனிதன் காரைப் பற்றியே அறிந்திருக்க வில்லை. ஆனால்,

அவனிடம் இருந்த பசுமாட்டைவிட அடுத்த குடிலில் இருந்த பசுமாடு அதிக பால் கறந்துவிட்டால், அவன் மனம் வெதும்பியிருப்பான்.

மாட்டுக்குப் பதிலாக இப்போது கார் வந்துவிட்டதே தவிர, அடிப்படையில் மனிதனின் துன்பம் மாறிவிட்டதோ? இல்லையே!

கடந்த சில நூற்றாண்டுகளில் தன் சுகங்களுக்காக மனிதன், இந்தப் பூமியின் முகத்தையே மாற்றிவிட்டான். மற்ற உயிர்களைப் பற்றிய பொறுப்பு உணர்வு இல்லாமல், புழு, பூச்சி, பறவை மிருகம் எல்லாவற்றின் இடத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டான். மரம், செடி கொடிகளைக்கூட விட்டுவைக்க வில்லை. நிலம், நீர், காற்று எல்லா வற்றையும் சகட்டுமேனிக்குப் பயன் படுத்தி சுத்தமான சுவாசம் கிடைப்பதற்குக்கூடப் போராடும் நிலையை உருவாக்கிவிட்டான்.

எல்லாம் எதற்காக?

தனக்குச் சந்தோஷம் கிடைக்கும் என்று நினைத்துத்தானே?

ஆனந்தம் கிடைத்து அதைக் கொண்டாடும் மனநிறைவோடு அவன் பூமிப் பந்தையே சொக்கப்பனையாக எரிக்கட்டும். தப்பில்லை. ஆனால், சந்தோஷத்தைச் சிறிதளவும் ருசிக்கத் தெரியாமல், பூமியை மட்டும் அழித்துக் கொண்டிருக்க அவனுக்கு என்ன உரிமை இருக்கிறது?

எனக்கு ஒரு அத்தை இருந்தார். நவீனமானவர். லேடீஸ் கிளப்பில் முக்கிய உறுப்பினர். அபாரமாக உடுத்திக் கொண்டு போவார். விமலா என்ற உறுப்பினருக்கும் அவருக்கும் எப்போதும் பிரச்னை. ஒரு குறிப்பிட்ட நாள் மீட்டிங்கிலிருந்து திரும்பியதும் அத்தை ‘ஓ’வென்று அழ ஆரம்பித்தார்.

தலைவருக்கான தேர்தலில் தோற்று விட்டாரா? கார் விபத்துக்குள்ளாகி விட்டதா? வேறு என்ன துக்கம்? புரியவேயில்லை.

“விமலா என்னை நன்றாகப் பழி வாங்கிவிட்டாள்” என்று ஒருவழியாக அவர் அழுதபடி விவரித்தார்.

அத்தை புதிய நெக்லஸ் ஒன்றை அணிந்து கொண்டு மீட்டிங்குக்குப் போயிருக்கிறார். மற்றவர் விசாரிக்கும்போது அந்த வைரங்களின் மேன்மையைப் பற்றி என்னவெல்லாம் சொல்ல வேண்டும் என்று தயார் செய்து வைத்திருந்தார். ஆனால், ஒரு உறுப்பினர் கூட நெக்லஸைக் கவனித்ததாகவே காட்டிக்கொள்ளவில்லை. அத்தையால் அந்த ஏமாற்றத்தைத் தாங்க முடிய வில்லை. விமலாவின் தூண்டுதலால் எல்லோரும் அப்படி அலட்சியம் செய்தார்கள் என்று அத்தை அவளை அழுது தூற்றினார்.

அத்தை விலையுயர்ந்த நெக்லஸ் வாங்கியது அவருடைய சந்தோஷத்துக் காகத்தான். ஆனால், எங்கேயோ உட்கார்ந்துகொண்டு, மௌனத்தினா

லேயே அந்த சந்தோஷத்தை யாரோ ஒரு விமலாவால் பறிக்க முடிந்துவிட்டது.

எப்பேர்ப்பட்ட அபத்தம் இது? உங்கள் வாழ்க்கையில்கூட இப்படி ஏதாவது நிகழலாம்.

உங்கள் ஆசையின் நோக்கம் என்ன? ஆனந்தமாயிருப்பது!

ஆனால், எங்கே தவறு செய்கிறீர்கள்?

இவ்வளவு படித்தால்தான் சந்தோஷம். இவ்வளவு பணம் இருந்தால்தான் மகிழ்ச்சி. மற்றவர் பொறாமைப்படும்படி நகை அணிந்தால்தான் ஆனந்தம் என்று அதற்கு ஏதேதோ நிபந்தனைகளை விதித்தீர்கள்.

வெளி சூழ்நிலைகள் எல்லா சந்தர்ப் பங்களிலும் உங்கள் விருப்பப்படி அமையாது. ஆசையின் நோக்கம் புரியாமல், வெளி சூழ்நிலைகளை நூறு விதமாக மாற்றிப் பார்த்தாலும் நிம்மதி கிடைக்காது. அப்படியானால், நெக்லஸுக்கு ஆசைப்பட்டது தப்பா? காருக்கு விருப்பப்பட்டது தவறா?

கிடையவே கிடையாது. எதன்மீது வேண்டுமானாலும் ஆசை வைக்கலாம். சந்தோஷமாயிருக்க வேண்டும் என்பதே உங்கள் ஆசையின் அடிப்படை என்பதை மறந்துவிட்டு, அதற்கான கருவிகளாக நீங்கள் தேர்ந்தெடுத்த நெக்லஸிலும், காரிலும் சிக்கிப்போனதால்தான் இந்த அவலம்.

உங்கள் சந்தோஷத்தை மற்றவர்கள் சொற்களுக்கும், வெளி சூழ்நிலை களுக்கும் அடமானம் வைக்காமல், பயணத்தைத் தொடருங்கள். இந்த உலகையே உங்கள் விருப்பப்படி மாற்ற முடியும்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

### இனக்கவர்ச்சி என்பது தவறா?

இளமையாக இருக்கும் போது, அடுத்த இனத்தின்மீது ஏற்படும் வசீகரத்தை நீங்கள் தவிர்க்க நினைத்தாலும் முடியாது. அது இயற்கை. தவறா, சரியா என்று அதை ஆராயத் தேவையில்லை.

மேலை நாடுகளில் சுதந்திரமான செக்ஸ் என்று ஒரு முறையைக் கொண்டு வந்தார்கள். குடும்பம், கட்டுப்பாடு என்று சிக்காமல் சந்தோஷமாயிருக்க விரும்பினார்கள். இளமையாக இருந்தபோது, இது ஜாலியான அனுபவமாக இருந்தது. ஆனால், வயதான பின்

உண்மையான உறவுகள் இல்லாமல், பலர் மனநிலை பாதிக்கப்பட்டு பரிதாபமாகிவிட்டார்கள். பொறுப்பேற்கத் தயாராக இல்லாமல் செக்ஸை மட்டும் அனுபவித்த இவர்களால், ஒரு தலைமுறையே அடையாளமற்ற அநாதைகளாக அலைந்து கொண்டிருக்கிறது.

உடல் இச்சைகளைத் தாண்டி வாழ்க்கை தொடர வேண்டியுள்ளது என்பதை மறக்காதீர்கள். அதில் அதிகப்படியாக ஆழ்ந்துபோனாலும் சிக்கிக்கொள்வீர்கள். அறவே ஒதுக்கப் பார்த்தாலும் சிக்கிக் கொள்வீர்கள்.

உறுதியும் பொறுப்பு உணர்வும் இல்லாமல் எந்த சந்தோஷத்தையும் தேடாதீர்கள். உங்கள் வாழ்க்கை இலக்கிலிருந்து கவனம் சிதறாத அளவுக்கு அதற்கு இடம் கொடுங்கள். போதும்.

## அத்தனைக்கும் ஆசைப்படு!

ஒரு குறிப்பிட்ட வயது வந்தவுடன் உங்களுக்குச் சம்பாதிக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தம் வந்துவிடுகிறது. எந்தத் தொழிலைத் தேர்ந்தெடுத்தாலும், மற்றொன்று அதைவிடச் சிறப்பாகத் தோன்றுகிறது. அதற்கு மாறமுடியுமா என்று மனம் அலைபாய்கிறது. ஆசை ஒன்றிலிருந்து மற்றதுக்கு மாறிக்கொண்டே இருப்பதால், அதன் இலக்கு மசமசப்பாகிவிடுகிறது.

“இசையில்தான் என் ஆர்வம். ஆனால், வயிற்றுப்பாட்டுக்கு ஏதாவது வேலைக்குப் போயாக வேண்டியிருக்கிறதே!” என்று என்னிடம் ஓர் இளைஞன் கேட்டான்.

அவன் எந்த மாதிரி வேலைக்குப் போகவேண்டும்? இசைக் கருவிகளை விற்பனை செய்யும் கடையில் தரையைக் கூட்டுபவனாகக்கூட வேலைக்குச் சேரத் தயாராக இருக்கவேண்டும். இசைக் கருவிகளைத் துடைத்து சுத்தம் செய்தாலும் நூறு சதவிகித ஈடுபாட்டுடன் செய்யத் தயாராயிருக்கவேண்டும். இப்படி முழுமையாகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டு இந்த வேலைகளில் ஈடுபட்டால், அவன் எப்படி மலர வேண்டுமோ, தானாக அப்படி மலர்ந்து விடுவான்.

எந்தத் துறையைத் தேர்ந்தெடுப்பது என்று தீர்மானிப்பதற்கான புத்திசாலித்தனம் உங்களிடம் இல்லையா?

ஒன்று செய்யுங்கள். இப்போது எந்தச் செயலில் இருந்தாலும் அதில் முழுமையாக உங்களை ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். முழுமையாக என்றால் இதயத்தையும் உயிரையும் அதற்காக ஒப்படைக்கத் தயாராயிருக்கும் முழுமை. செய்வதை நூறு சதவிகித ஈடுபாட்டுடன் செய்தால், உங்கள் உள்ளுணர்வு உங்களைச் சரியான பாதைக்குத் தானாக அழைத்துச் செல்லும்.

சந்தோஷமாக வேலை செய்வதாக உணர்ந்தால் மட்டுமே உங்களால் முழுமையாக செயலாற்ற முடியும். கட்டாயத்துக்காக வேலை செய்வதாக நினைத்து விருப்பம் இல்லாமல் செய்தீர்கள் என்றால், ரத்தக் கொதிப்பும், அல்சரும் மற்ற மனநோய்களும் கூப்பிடாமலே வந்து உள்ளே

உட்கார்ந்து கொள்ளும்.

சங்கரன்பிள்ளை ஒருமுறை ரயிலில் பயணம் செய்தார். வசதியான இருக்கை கிடைத்து உட்கார்ந்தார். அதன் பின்னும்தன் தலை மீதிருந்த பயண மூட்டையை அவர் இறக்கிக் கீழே வைக்கவில்லை. டிக்கெட் பரிசோதகர் வந்தார். உணவு விற்பவர் வந்தார். மூட்டையை வைத்துக்கொண்டு சங்கரன்பிள்ளையால் எந்த இயல்பான வேலையையும் செய்ய முடியவில்லை.

சக பயணிகளில் ஒருவர் கேட்டார்... “ஐயா, பெரிய மூட்டையாக இருப்பதால், கீழே இறக்கி வைக்க உதவி தேவைப் படுகிறதா?”

“அதெல்லாம் இல்லை!”

“ஓ, மூட்டையில் விலை உயர்ந்த பொருள் ஏதாவது வைத்திருப்பீர்கள். திருடர்களைப் பற்றிய பயம் இருந்தால், மூட்டையைக் கீழே வைத்து அதன் மீது நீங்கள் உட்காரலாமே?”

“இல்லையில்லை, எல்லாம் பழைய துணிகள்தான்!”

“அப்புறம் அதை எதற்காகத் தலை மீது சுமக்கிறீர்கள்?”

“என் பாரத்தை அநாவசியமாக இந்த ரயில் மீது சுமத்தக்கூடாது என்று பார்க்கிறேன்” என்றார் சங்கரன்பிள்ளை.

சங்கரன்பிள்ளையைப்போல சுமைகளை இறக்கி வைக்கத் தெரியாதவர்களால் எதை ஒழுங்காகச் செய்யமுடியும்? குடும்பத்தையே தோள் மீது சுமப்பதாக நினைத்து நினைத்து துக்கத்துடன் வேலை செய்பவர்களுக்கு எந்த ஆசை நிறைவேறும்?

தயவுசெய்து உங்கள் மன பாரங்களை இறக்கி வையுங்கள். செய்வதைச் சந்தோஷமாகச் செய்யுங்கள்.

நீங்கள் செல்ல வேண்டிய ரயில் நான்கு மணி நேரம் தாமதமாகப் புறப்படும் என்று சொல்லிவிட்டார்கள். உலகமே முடிவுக்கு வந்து விட்டதுபோல் அத்தனை பெரியவர்களும் முகத்தைத் தூக்கி வைத்துக்கொள்வீர்கள். காத்திருக்கும் நான்கு மணி நேரத்தையும் முள் மேல் உட்கார்ந்து, ரயில்வேயை விடாமல் சபித்துக் கொண்டிருப்பீர்கள்.

ஆனால், பயணத்துக்காகக் காத்திருக் கும் குழந்தைகளைக் கவனியுங்கள். கைக்குக் கிடைத்த சிறு பொருள்களை வைத்து, அவர்கள் இருக்கும் இடத்தில் ஜாலியாக விளையாடியபடி எந்தத் துக்கமும் இல்லாமல் இருப்பார்கள்.

தேவையில்லாமல் அவர்கள் தங்களை வருத்திக் கொள்வதில்லை. கிடைத்த தருணங்களைச் சந்தோஷமாக அனுபவிக்கிறார்கள். அதிகச் சிரமம் இல்லாமல், தங்கள் வாழ்க்கையைப் பூரணமாக்கிக் கொள்கிறார்கள்.

ஆனால் நீங்கள்? வாழ்க்கையை சந்தோஷமாக்கிக்கொள்ள உங்களையே வருத்திக் கொள்கிறீர்கள். ஆனாலும் சந்தோஷத்தை அனுபவிக்கத் தெரியாமல் தோற்றுவிடுகிறீர்களே?

மனதைத் துக்கமும் படபடப்பும் அழுத்தாமல் பொறுப்புடன் என்ன செய்யவேண்டுமோ அதைச் செய்யுங்கள்.

இந்த ரயில் இல்லை என்றால், பஸ் பிடிக்கலாம். டாக்ஸி பிடிக்கலாம். வேறு வாகனங்கள் கிடைக்குமா என்று பார்க்கலாம். எதுவும் கிடைக்க வாய்ப்பில்லை என்றால், காத்திருக்கக் கிடைத்த நேரத்தை ஆனந்தமாக இருந்து செலவு செய்யலாம்.

துக்கப்படுவதால் மனபாரம் குறையப்போவதில்லை. சந்தோஷமான மனிதர்களால்தான் எந்த வேலையையும் சிரமமில்லாமல் விளையாட்டாகச் செய்யமுடியும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“தொழிலில் சிறக்க எந்தக் கடவுளைக் கும்பிடலாம்?”

“சொன்னால், அந்தக் கோயிலுக்குப் போவீர்கள். அங்கே கடவுளிடம் நேரடியாகப் பேச உங்களுக்குத் தெரியாது. அங்கே இருக்கும் பூசாரியை கடவுளின் ஏஜெண்ட்டாக நினைப்பீர்கள். பத்து ரூபாய் கொடுப்பீர்கள். உங்கள் பெயர், நட்சத்திரம், முகவரி எல்லாம் சொல்லி அந்த ஏஜெண்ட் கடவுளைக் கூப்பிடுவார்.

‘இந்தப் புத்திசாலி உன்னை நம்பிப் பத்து ரூபாய் செலவு செய்திருக்கிறான். இவன் பிஸினஸைப் பார்த்துக் கொள்’ என்பார்.

கடவுள் வருவாரா? இங்கே இருக்கும் அடி முட்டாள்கூட நீங்கள் கொடுக்கிற பத்து ரூபாய்க்காக உங்கள் பிஸினஸைப் பார்த்துக்கொள்ளமாட்டார். நீங்கள் மழித்துப் போடுகிற தலைமுடிக்காகவும், உண்டியலில் போடுகிற சில்லறைக் காசுகளுக்காகவும் காலம்பூராவும் உங்களைப் பார்த்துக்கொள்ள கடவுள் என்ன இளிச்சவாயரா?

என்னவொரு அற்புதமான இயந்திரமாக மனிதனைப் படைத்து உலகுக்கு அனுப்பியிருக்கிறார்? அவர் செய்யவேண்டியதை எல்லாம்

செவ்வனே செய்து முடித்துவிட்டார். இனி, மகனே உன் சமர்த்து!

உங்கள் திறமைகளை முன்வைத்து மைதானத்தில் நீங்கள் இறங்கவேண்டிய நேரம் இது. இப்போதும் கடவுளைக் கூப்பிட்டால் என்ன அர்த்தம்? கோடி ரூபாய் கொடுத்தாலும், உங்களுக்காகக் கடவுள் தன் சுண்டு விரலைக்கூட நகர்த்தமாட்டார்.

கவனித்துக்கொள்ள உங்களுக்குத் துப்பில்லை என்றால், அந்தத் தொழில் உங்களுக்கு எதற்கு?"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

நீங்கள் பிறந்த தினத்திலிருந்தே, 'கெட்ட பழக்கங்களுக்கு அடிமை ஆகாதே, நல்ல பழக்கங்களை வளர்த்துக் கொள்' என்று அடிக்கடி போதனை செய்திருப்பார்கள்.

என்னைக் கேட்டால், அனுபவித்துச் செய்யாமல், பழக்கத்தினால் எதைச் செய்தாலும் அது கெட்டதுதான்!

காலை அலாரம் வைத்து எழுந்திருப் பீர்கள். பரபரவென்று தினப்படி வேலைகளைச் செய்வீர்கள். குளித்து முடித்து, டிபனைத் திணித்துக்கொண்டு, ஸ்கூட்டரிலோ, காரிலோ, பஸ்ஸிலோ அலுவலகம் போய்ச் சேர்வீர்கள். மாலை வரை அங்கேயும் பழகிப்போன விஷயங்கள். வேலை முடிந்து வீடு திரும்பி, சாப்பிட்டு, தூங்கி, மறுபடி எழுந்து...

பூட்டப்பட்ட மாடு, வண்டியை இழுத்துக்கொண்டு தினமும் ஒரே இடத்துக்குப் போய்த் திரும்புவது போல், நாற்பது ஐம்பது வருடங்களை இப்படியே தேய்த்துவிட்டு அடங்கிப் போவதற்குப் பெயர் வாழ்க்கையா?

ஒரு பெரிய இயந்திரத்தில் பொருத்தப் பட்ட நூற்றுக்கணக்கான பல்சக்கரங் களில் ஒன்று போல் ஆவீர்கள். பக்கத்தில் இருக்கும் சக்கரம் உங்களைக் கொஞ்சம் நகர்த்தும். அதன்படி உங்களை அடுத்துள்ள சக்கரத்தை நீங்கள் நகர்த்துவீர்கள். மற்ற சக்கரங்கள் சுழல்வதைப் பொறுத்துத்தான் உங்கள் இயக்கமே தீர்மானிக்கப்படும் என்ற பரிதாப நிலைக்கு வந்துவிட்டீர்கள்.

நீங்கள் ஒரு நிறுவனத்தின் முதலாளி யாகக்கூட இருக்கலாம். ஆனாலும் பழக் கத்துக்கு அடிமையாகிவிட்டால், உங்கள் சுதந்திரம் பறிபோய் விடுகிறதல்லவா?

சங்கரன் பிள்ளை ஒரு முறை குடித்துவிட்டு 'பாரை'விட்டுப் புறப்பட வெகு நேரமாகிவிட்டது.

‘எட்டு மணிக்குள் வீட்டில் இருந்தாக வேண்டும் என்பது உன் மனைவியின் நிபந்தனையாயிற்றே?’ என்று நண்பர்கள் கிண்டலடித்தார்கள்.

சங்கரன் பிள்ளை ஜம்பமாக ‘நோ, நோ! என் வீட்டில் எனக்கு முழு சுதந்திரம் இருக்கிறது’ என்று தலை நிமிர்த்திச் சொன்னார். தெனாவட்டாக வீட்டுக்கு நடந்தார்.

வாசலிலேயே ஆபத்தைப் புரிந்து கொண்டார். மனைவியின் பலவீனம் அவருக்குத் தெரியும். சரேலென அவரைக் கடந்து உள்ளே ஓடினார். பருமனாக இருந்த மனைவியால் அவருடைய வேகத்துக்கு ஈடு கொடுத்துத் துரத்த முடியவில்லை. வீட்டின் பல இடங்களுக்கும் துரத்தப்பட்ட சங்கரன் பிள்ளை கடைசியில் கட்டிலுக்கு அடியில் போய்ப் படுத்துக் கொண்டார்.

மனைவியால் கட்டிலுக்குக் கீழே இருந்த இடைவெளிக்குள் நுழைய முடியவில்லை.

‘நீ என்ன எலியா, ஆண்மகனா? வெளியே வாய்யா!’ என்று அவள் கத்தினாள். சங்கரன் பிள்ளை ஹாயாக பதில் சொன்னார்... ‘நான்தான் இந்த வீட்டின் ராஜா. எங்கே படுத்துக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்யும் முழு சுதந்திரம் எனக்கு இருக்கிறது’.

சங்கரன் பிள்ளையைப் போல்தானே உங்களில் பலரும் சுதந்திரத்துடன் வாழ்வதாக நினைத்துக்கொண்டு, உங்களையே ஏமாற்றிக்கொள்கிறீர்கள்?

முதன் முதலில் நீங்கள் வேலைக்குப் போனபோது, எந்த நாற்காலி உங்களுக்கு சொர்க்கத்துக்கு நிகராகத் தோன்றியதோ, அதே நாற்காலிதான் இன்றைக்கு உங்கள் ரத்த அழுத்தத்தையும் அல்சரையும், இதய வலியையும் உற்பத்தி செய்யும் நரகமாகிவிட்டது.

சந்தோஷம் கொடுக்கும் என்றுதானே இந்தப் பணியைத் தேர்ந்தெடுத்தீர்கள்? பழகிப்போன பின், சந்தோஷத்தைத் தவிர மற்ற எல்லாவற்றையும் அனுபவித்துக் கொண்டிருக்கிறீர்களே, ஏன்?

படகில் பயணம் செய்வதற்காகத் துடுப்பை எடுத்தவன், படகை விட்டுவிட்டு துடுப்பை மட்டும் கெட்டியாகப்பிடித்துக் கொண்டிருப்பது போல் ஆகி விட்டீர்களே!

உங்கள் புத்திசாலித்தனத்தையும் விழிப்பு உணர்வையும் பயன்படுத்தாமல், செய்ததையே திரும்பத் திரும்பச் செய்வதற்கு நீங்கள் என்ன இயந்திரமா?

ஒரே பக்கத்தைப் பல நூறு ஜெராக்ஸ் பிரதிகள் எடுத்து வைத்துக்கொண்டு, அடுத்தடுத்துப் படித்துக்கொண்டிருப் பது போல் உங்கள்

தினங்களை காலண்டரில் கிழித்துக் கொண்டிருப்பதா வாழ்க்கை?

முழுமையாக வாழ்வது என்றால் என்ன என்று நீங்கள் எப்போதேனும் யோசித்தது உண்டா?

என்றைக்காவது காலையில் பட்சிகள் விழிக்கும்போது, சந்தோஷ மாகக் குரல் கொடுப்பதைக் கேட்டு உற்சாகமாகியிருக்கிறீர்களா? எத்தனை நாட்கள் உடலின் ஒவ்வொரு புள்ளியை யும் தண்ணீர் நனைத்து இறங்குவதை ரசித்துக் குளித்திருக்கிறீர்கள்? வண்டி ஓட்டும்போது சிந்தனையை எங்கேயோ வைக்காமல், எத்தனை நாட்கள் அனுபவித்து ஓட்டியிருக்கிறீர்கள்?

மிக ருசியான உணவாக இருந்தாலும் முதல் கவளத்தைத்தான் அனுபவித்துச் சாப்பிடுவீர்கள். அடுத்தடுத்த கவளங் களை, கை தன் பழக்கப்படி வாயில் கொண்டு போடும். வாய் தன் பழக்கப்படி கடித்துக் கூழாக்கி உள்ளே தள்ளும். வாயில் போட்ட உணவு எப்படி மெல்லப் பட்டு உணவுக் குழாயின் வழியே இறங்கி வயிற்றுக்குப் போகிறது என்பதை ஒரு தடவையாவது முழுமையாகக் கவனித்திருக்கிறீர்களா?

எப்போதும் ஆனந்தமாக இருக்க வேண்டும் என்ற உங்கள் ஆசையை மறந்துவிட்டு, வேலையில் சிக்கிக் கொண்டதால், இதற்கெல்லாமா நேரத்தை வீணடிப்பார்கள் என்றுதான் உங்களிடமிருந்து பதில் வரும்.

சும்மா மூக்கால் மூச்சு விட்டுக் கொண்டிருப்பதற்காகவா வந்தீர்கள்? உயிரை உடலில் இருத்தி வைத்துக் கொள்வதற்குத்தான் அதுபயன்படும்.

உயிரோடு இருப்பது வேறு, வாழ்வது என்பது வேறு. ஒரு கணம்... ஒரே ஒரு கணத்தையாவது முழு விழிப்பு உணர்வோடு வாழ்ந்து பாருங்கள். வாழ்க்கையின் போக்கே மாறிவிடும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“என் மனம் திருப்தியில்லாமல் அலைகிறதே?”

“அப்படியா? பத்து நிமிடங்களுக்குத் தொடர்ந்து உங்கள் மனதைக் கவனியுங்கள். அங்கு உற்பத்தி யாகி அலைபாய்கிற எண்ணங் களை எல்லாம் நேர்மையாக ஒரு காகிதத்தில் பட்டியல் போட்டுக்கொண்டே வாருங்கள்.

ஓர் இடைவெளிவிட்டு அதை உங்கள் நண்பரிடம் காட்டுங்கள். அல்லது நீங்களே படித்தாலும் சரி... இன்னும் எப்படி உங்களுக்குப்

பைத்தியம் பிடிக்காமல் இருக்கிறது என்று உங்களுக்கே ஆச்சரியம் வந்துவிடும்.

இப்போதே உங்களுக்கும் மன நோயாளிக்கும் பெரிய வித்தியாசம் இல்லை.

ஒரே ஆறுதல், உங்கள் பைத்தியக் காரத்தனத்தை சமூகம் வரையறுத்துள்ள எல்லைகளுக்குள் வைத்திருக்கிறீர்கள். வெளியே தெரியாமல் மறைத்து ஒளித்து நாடகமாடும் தந்திரம்தான் உங்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறது.

பைத்தியக்காரத்தனத்தை ஒளித்து வைப்பது உங்கள் பிரச்னைகளை முடிவுக்குக் கொண்டுவந்து விடாது.

முழுமையான விழிப்பு உணர்வு இல்லாமல் உங்கள் வாழ்க்கை தன்பாட்டுக்குத் தற்செயலாக நடந்துகொண்டு இருந்தால், மனதுக்கு என்றைக்கும் திருப்தி கிடைக்காது. வாழ்க்கையை ஒவ்வொரு கணமும் முழுமையாக வாழுங்கள். மனம்வீணாக அலைபாய்வதை நிறுத்திவிடும்!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

இளமைக் காலத்தில் உங்கள் ஆசைகளில் முக்கியமான இடத்தைப் பிடித்திருப்பது எது? காதல்.

கல்லூரிகளில் காதலர்களைப் பார்த்திருக்கிறேன். ஒருவருக்காகவே அடுத்தவர் பிறந்து வளர்ந்தது போல் தெரிவார்கள். கண்களிலும் முகத்திலும் சந்தோஷம் கொப்பளிக்கும். காதலின் அதிர்வுகள் அவர்கள் இருக்கும் சூழ்நிலையையே சந்தோஷமாக்கும். துடிப்பும் துள்ளலுமாக அவர்கள் திரிவதைப் பார்த்தால், மரணம் வரை இது தொடரும் என்றுதான் தோன்றும். பெற்றோர், சமூகம், கலாசாரம் எல்லாவற்றையும் எதிர்த்துக்கொண்டு அவர்கள் திருமணம் செய்துகொள்வார்கள்.

ஐந்து அல்லது ஆறு வருடங்கள் கழித்து அவர்களைப் பார்த்தால், பகீரென்றிருக்கும். துடிப்பும் உயிரோட்டமுமாக இருந்தவர்கள், உலகத்தையே தொலைத்துவிட்டவர்கள் போல் உலர்ந்திருப்பார்கள். ஏன் இப்படி?

மிக ஆழமாகக் காதல் வயப்பட்டிருந்தபோது, பலமணி நேரம் முணுமுணுப்பின்றிக் காத்திருந்தார்கள். பசி, வெயில், மழை எதுவும் தெரியவில்லை. காலம் தெரியவில்லை.

கனவுகள் நிறைவேறிய பின், அங்கே வியாபாரம் நுழைந்து விட்டது. காதலை ஒரு முதலீடாக நினைத்து வாழ்க்கையைத் தொடங்கினால், சீக்கிரமே சலிப்பும் வலியும் வேதனையும் வருவதைத் தவிர்க்கமுடியாது.

சங்கரன் பிள்ளை, பூங்காவில் ஓர் அழகான பெண்ணைப் பார்த்தார். அவள் அருகில் போய் அமர்ந்தார்.

‘உன்னை என் உயிருக்கும் மேலாகக் காதலிக்கிறேன். நீ இல்லையென்றால், இப்போதே செத்துவிடுவேன்’ என்று உருக்கமாகச் சொன்னார்.

அந்தப் பெண் அவருடைய காதல் வசனங்களில் மயங்கினாள். அவர் மடியில் படுத்துக்கொண்டாள்.

அப்புறம் என்ன? சங்கரன்பிள்ளை அவளிடம் தன் விருப்பப்படியெல்லாம் நடந்துகொண்டார்.

மணி ஏழரை ஆனது. சங்கரன் பிள்ளை தன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டுப் பதறி எழுந்தார். ‘என்னை விட்டுப் போகாதீர்கள்’ என்றாள் அந்தப் பெண், மயக்கம் விலகாமல்.

‘ஐயோ, இன்றைக்கு நேரத்தோடு வருவதாக என் மனைவியிடம் சொல்லியிருக்கிறேனே!’ என்றார் சங்கரன் பிள்ளை.

‘மனைவியா? என்னை யுகம் யுகமாகக் காதலிப்பதாகச் சொன்னீர்களே? அதை சத்தியமென்று நம்பினேனே?’ என்று அந்தப் பெண் அழ ஆரம்பித்தாள்.

‘அட, முட்டாளே! காதல் என்பது, ‘திறந்திடு சீஸேம்’ என்று அலிபாபா சொன்ன சொற்களைப்போல் காரியத்தை சாதித்துக்கொள்ளப் பயன்படும் ஒரு மந்திரச் சொல். அவ்வளவுதான்!’ என்று சங்கரன் பிள்ளை அவளை உதறினார்.

சங்கரன் பிள்ளையைப்போல் நடந்துகொள்வதையெல்லாம் காதல் என்று முத்திரை குத்தலாமா? ஓர் ஆணும் பெண்ணும் ‘நான் இதைத் தருகிறேன், நீ அதைத் தருவாயா?’ என்று எழுதாமல் போட்டுக்கொள்ளும் ஒப்பந்தமா காதல்?

உங்களுக்குச் சமூகரீதியாக ஒரு துணை தேவைப்படுகிறது. அது உடலிச்சையினால் இருக்கலாம். மனத் திருப்திக்காக இருக்கலாம். பொருளாதார வசதிக்காக இருக்கலாம். ஆனால், இப்படி ஒரு தேவையினால் பிறப்பது உண்மையான காதல் ஆகாது.

திருமணத்தை, சமூகப் பாதுகாப்பாக மட்டுமே நினைத்து, காதலின் அடிப்படையை உணராதவர்களால் அதைப் படுகொலை செய்யத்தான் முடியும். இந்த ஏற்பாட்டில் வேறு என்னென்னவோ வசதிகள் கிடைக்கலாம். ஆனந்தம் மட்டும் கிடைக்கவே கிடைக்காது. தலைமுறை தலைமுறையாக இந்தத் துயரம் நடந்து கொண்டிருக்கிறது.

பர்மாவைச் சேர்ந்த ஒரு சிப்பாய், இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பின்னர் ராணுவத்தை விட்டு விலகி, வேறு வேலைக்குப் போய்விட்டார்.

உண்மையில், அவர் போர்க்களத்தில் ஆக்ரோஷமான தாக்குதல்களுக்கு நடுவில் இருந்தது, பத்துப் பதினைந்து நிமிடங்கள்தான்.

‘ஒரு பக்கம் அமெரிக்கா குண்டு வீசுகிறது. இன்னொரு பக்கம் ஜப்பான் குண்டு எறிகிறது. எங்கு திரும்பினாலும் துப்பாக்கிச் சத்தம். பீரங்கிகளின் முழக்கம். வானத்தில் தீப்பொறிகள். கரும்புகை’ என்று புதிதாகச் சந்திக்கும் நபர்களிடம் அவர் தவறாமல் அந்தப் பதினைந்து நிமிடங்களை மணிக்கணக்கில் விவரித்துக்கொண்டே இருப்பார்.

‘போருக்கு அப்புறம் என்ன செய்தீர்கள்?’ என்று கேட்டால், ‘விற்பனைப் பிரதிநிதியாக இருக்கிறேன்’ என்று அடுத்த இருபத்தைந்து வருடங்களைப் பற்றி, ஒற்றை வாக்கியத்தில் பதில் சொல்வார்.

வாழ்க்கையைத் தீவிரமாக அவர் வாழ்ந்தது அந்தப் பதினைந்து நிமிடங்கள்தாம். அது போன்ற தீவிரத்தோடுதான் காதல் வயப்பட்டிருக்கும் காலங்களும் வாழப்படுகின்றன. அதனால்தான் காதலித்த தினங்களைப் பற்றிப் பேசும்போது, கிழவர்கள் முகத்தில்கூட ஒரு பிரகாசத்தை நீங்கள் கவனிக்கலாம்.அப்பேர்ப்பட்ட காதலை ஒரு பரஸ்பர உதவித் திட்டமாக, அதாவது மியூச்சுவல் பெனிஃபிட் ஸ்கீமாக நினைக்காதீர்கள்.

காதல் வியாபாரம் அல்ல. மாயையும் அல்ல. அது உண்மையில் உன்னதமானதொரு உணர்வு!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“மரணத்துக்குப் பின் சொர்க்கம் போவேனா, நரகம் போவேனா?”

“இப்போது கிடைத்த வாழ்க்கையைச் சந்தோஷமாக வாழத் தெரியாமல் வருத்திக் கொள்பவர்கள்தான், எப்போதோ கிடைக்கப்போகும் சொர்க்கத்துக்காகக் கவலைப்படுவார்கள்.

எல்லாம் முடிந்த பிறகு எங்கே போகிறீர்கள் என்பதா முக்கியம்? அங்கே உள்ள விதிகளைப் பற்றி உங்களுக்கென்ன தெரியும்? ஒருவேளை அங்கே நரகமாயிருந்தால், இங்கே கிடைத்த சொர்க்கத்தையும் அல்லவா வாழாமல் கோட்டைவிட்டிருப்பீர்கள்?

இங்கே கிடைக்கும் ஒவ்வொரு கணத்தையும் அன்போடும் பிரியத்தோடும் செலவு செய்யுங்கள். ஒவ்வொரு மூச்சையும் ஒவ்வொரு செயலையும் முழுமையான ஈடுபாட்டுடன் அனுபவித்து வாழுங்கள்.

அதை விட்டுவிட்டு, இங்கே வாழ்க்கையை நரகமாக்கிக்கொண்டு, தெரியாத சொர்க்கத்துக்காகத் திட்ட மிடுவதைப் போன்ற முட்டாள்தனம் வேறு எதுவுமில்லை!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

இருபது வயதைத் தாண்டிவிட்டாலே இளைஞர்களிடம், ‘எப்போது திருமணச் சாப்பாடு போடப் போகிறாய்?’ என்று கேட்பது ஒரு சடங்காகிவிட்டது.

கல்விபோல, உத்தியோகத் தைப்போல, நம் சமூகத்தில் திருமணம் என்பதும் ஓர் அந்தஸ்தாகக் கருதப்படுகிறது.

திருமணம் என்பது தனக்கு அவசியமா, இல்லையா என்ற யோசனையே இல்லாமல், மற்றவர்கள் செய்துகொள்கிறார்களே என்று தானும் சிக்கிக் கொள்பவர்கள், மூன்றாம் நாளே பேயடித்ததுபோல் காணப்படுகிறார்கள்.

திருமணம் என்று மட்டும் இல்லை... நீங்கள் எந்தச் செயல் செய்தாலும், அதற்கான பின்விளைவுகள் வெள்ளம்போல் அடித்துக்கொண்டு வரும் என்பதை மறக்கக்கூடாது. அவற்றைச் சுணங்காமல் எதிர்கொள்ள உங்களைத் தயார் செய்துகொண்ட பிறகே, காரியத்தில் இறங்க வேண்டும்.

வயதில் மூத்தவர்கள், இளைய வர்களுக்கு அப்பழுக்கில்லாத அன்பைச் செலுத்தச் சொல்லித் தருவதில்லை. ஆனால், பெண்களைப் பெற்ற பெரும் பாலானவர்கள், புகுந்த வீட்டு மனிதர்களை அனுசரித்துப் போகச் சொல்லி தங்கள் மகளுக்கு அறிவுரை தருவார்கள். இவர்கள் தங்கள் மகளைப் பற்றிய பொறுப்பை அடுத்தவர் தோள்களுக்கு மாற்றுவதாகவே நினைத்து, அவளுக்கான துணையைத் தேடுகிறார்கள்.

சங்கரன் பிள்ளையின் திருமணமாகாத மகள், திடீரென்று கர்ப்பமாகி வந்து நின்றாள். சங்கரன் பிள்ளை ஆத்திரமானார். அவளைத் தாறுமாறாக அடித்து, அதற்குக் காரணம் யாரென்று உலுக்கினார்.

அவள் அழுதுகொண்டே அவன் பெயரைச் சொன்னாள்.

சங்கரன் பிள்ளை தன் துப்பாக்கியை எடுத்துக்கொண்டார். நேரே அவனைத் தேடிப் போனார். அரண்மனை போன்ற அந்த வீட்டின் கதவை உதைத்துத் திறந்தார். கட்டிலில் படுத்திருந்த அவன் நெற்றிப் பொட்டில் துப்பாக்கிமுனையை வைத்தார்.

‘அவசரப்படாதீர்கள். நாம் இதைப் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்’ என்று அவன் கெஞ்சினான்.

‘நீ ஊரிலேயே பெரிய பிஸினஸ்மேனாக இருக்கலாம். ஆனால், சின்னப்பெண்ணை ஏமாற்றியிருக்கிறாய். உனக்கு என் கையால்தான் சாவு’ என்று உறுமினார் சங்கரன் பிள்ளை.

‘ஐயா, உங்கள் மகளுக்குப் பெண் குழந்தை பிறந்தால் பத்து லட்சம் தருவதாக இருக்கிறேன்!’

‘ஆண் குழந்தையாக இருந்தால்?’

‘இருபது லட்சம் தருவேன்!’

சங்கரன் பிள்ளை துப்பாக்கியை மடக்கிப் பையில் வைத்துக்கொண்டார். அவனுக்கெதிரில் மரியாதையாக நின்றார். நெளிந்தபடி கேட்டார்: ‘ஒருவேளை கரு தங்காவிட்டால், என் மகளுக்கு இன் னொரு வாய்ப்புத் தருவீர்களா சார்?’

செல்வத்தையும் வசதிகளையும் மட்டுமே அளவுகோலாக வைத்துத் திருமணங்களை நிச்சயம் செய்பவர்களுக் கும் சங்கரன் பிள்ளைக்கும் அதிக வித்தியாசம் இல்லை.

ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி... வசதியான குடும்பம், கை நிறையச் சம்பளம் என்பவற்றையே வாழ்க்கைப் பொருத்தங்களாக நினைப்பது பரிதாபமல்லவா?

மனப் பொருத்தம் பற்றி யோசிக்கா மல், மற்ற காரணங்களை உத்தேசித்து, இரண்டு பேரை ஒரு கட்டுக்குள் கொண்டுவருவதுதான் பெரும்பாலான திருமணங்கள் கசப்பாகிப் போவதற்கான அடிப்படைக் காரணம்.

உங்கள் திருமண வாழ்வை எப்படிச் சந்தோஷமாக அமைத்துக்கொள்வது என்று சொல்லித்தர, நூற்றுக்கணக்கான புத்தகங்களை இன்று மேல்நாட்டில் எழுதித் தள்ளுகிறார்கள்.

‘ஒரு நாளைக்கு இத்தனை தடவை ‘ஐ லவ் யூ’ என்று சொல்... இத்தனை தடவையாவது தொட்டுப் பேசு... இத் தனை தடவையாவது முத்தம் கொடு’ என்று கணக்கெல்லாம் சொல்லி விற்பனை செய்கிறார்கள். பிறந்த குழந்தைக்குத் தாய் எத்தனை முத்தம் கொடுக்கவேண்டும் என்று சொல்லித் தரக்கூட அங்கே ஆட்கள் இருக்கிறார்கள். அதையெல்லாம் படித்து ஒவ்வொன்றுக்கும் விரல்விட்டு எண்ணிக் கொண்டிருந்தால், ஒரு வாரத்துக்குள் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குத்தான் போய்ச் சேரவேண்டியிருக்கும்.

உண்மையான அன்பிருந்தால், கட்டி அணைக்கவும் முத்தம் கொடுக்கவும் ஏற்ற நேரத்தை இதயமே தேர்ந்தெடுக்கும்!

ஒரு தம்பதியின் இருபத்தைந்தாவது திருமண நாள் கொண்டாட்டங்கள் கோலாகலமாக நடந்துகொண்டிருந்தன.

கணவனின் கண்களிலிருந்துதாரை தாரையாக நீர் வழிந்து கொண்டிருந்தது. மனைவி நெகிழ்ந்து போய், அவனைத் தன்மீது சாய்த்துக் கொண்டாள்.

‘என்ன கண்ணா... என் மேல் அவ்வளவு பிரியமா? எதற்கு இவ்வளவு உணர்ச்சிவசப்படுகிறீர்கள்?’

கணவன் கண்ணீரை அடக்க முடியாமல் சொன்னான்... ‘நாம் காதலித்து, ஜாலியாகச் சுற்றிக் கொண்டிருந்தபோது, உன் அப்பா நீதிபதியாக இருந்தாரே... நினைவிருக்கிறதா?’

‘ஆமாம்!’

‘நம் விஷயம் தெரிந்து, அவர் என்னைத் தேடி வந்துவிட்டார். என் மகளைத் திருமணம் செய்யாமல் ஏமாற்றினாயோ, உன்னை இருபத்தைந்து வருடம் உள்ளே தூக்கிப் போட்டுவிடுவேன் என்று மிரட்டினார். அந்த மிரட்டலுக்கு மட்டும் நான் பயப்படாமல் இருந்திருந்தால், இன்றைக்கு நான் விடுதலையாகி இருக்கவேண்டிய நாள்!’

திருமணம் என்றாலே இப்படி வேதனைதானா? இல்லவே இல்லை! இரண்டு உயிர்கள் ஒன்றை ஒன்று புரிந்துகொண்டு, வாழ்க்கையை ஆனந்த மாக்கிக் கொள்ளக்கூடிய சந்தர்ப்பம் அது. உண்மையான அன்பைப் பகிர்ந்துகொள்ளக் கிடைக்கும் ஓர் அற்புதமான வாய்ப்பு!

ஆனால், திருமணத்துக்கு அப்புறம் அடுத்தவரிடம் என்ன ஆதாயம் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்புடன் கணவன்—மனைவி உறவு அமைந்தால், வாழ்க்கை கொந்தளிப்புகள் நிறைந்ததாகி விடும். கோர்ட் வரை போகாவிட்டாலும், குடும்ப அளவிலேயே திருமணம் தோற்றுவிடும். இருவருக்கிடையிலான உறவு இனிதாக இருக்கவேண்டுமானால், அங்கு ஆதாயக் கணக்குகளுக்கு இடம் இருக்கக்கூடாது. அன்பு மட்டும் தீவிரமாக மலர்ந்திருந்தால், வாழ்க்கையின் மேடு பள்ளங்களில் விழுந்தாலும் காயப்படாமல், சுகமாக மிதந்து பயணம் செய்யமுடியும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“எனக்கு சினிமா பார்க்கப் பிடிக்கும். என் மனைவிக்கு அறவே பிடிக்காது! இதனால், எங்களுக்குள் அடிக்கடி சண்டை வருகிறது! என்ன செய்யலாம்?”

“எதற்காகத் திருமணம் செய்துகொண்டீர்கள்... சினிமா பார்க்கவா? இல்லையே... சந்தோஷமாக வாழத்தானே!

ஒரே செடியில் பூத்தாலும், இரண்டு மலர்கள் ஒரே மாதிரி இருப்பதில்லை. உலகெங்கும் தேடினாலும் உங்கள் மனைவியைப்போல் மற்றொருவர் கிடைக்கமாட்டார். அவரது தனித்தன்மையை மதியுங்கள்.

உங்களுக்குப் பிடித்ததையெல்லாம் அவரைச் செய்யச் சொல்லி வற்புறுத்தாதீர்கள்.

சினிமா இருந்தால் என்ன, இல்லையென்றால் என்ன? சொந்த வீடு இருந்தால் என்ன, இல்லையென்றால் என்ன? குழந்தைகள் இருந்தால் என்ன, இல்லையென்றால் என்ன?

சின்னச் சின்ன விஷயங்களுக்கெல்லாம் வருத்தப்பட்டு, அந்தச் சுமையை அவர்மீது சுமத்தாதீர்கள். உங்கள் துக்கங்களைப் பகிர்ந்துகொள்வதற்காகவா அவரைத் திருமணம் செய்தீர்கள்? உங்கள் சந்தோஷங்களை இரட்டிப்பாக்கிக் கொள்ளத்தானே ஒன்றானீர்கள்?

இருவரின் சந்தோஷத்தையே முன்னிறுத்துங்கள். சினிமா இல்லாமலும் வாழ்க்கை ஆனந்தமாக இருக்கும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

‘ஆசையே துன்பங்களுக்குக் காரணம்!’ என்று சொன்னவர்கள், இன்னொன்றும் சொல்வார்கள். ‘யார் மீதும், எதன் மீதும் பற்று வைக்காதே. பற்றும் பாசமும்தான் வளர்ச்சிக்குத் தடை!’ என்று பயமுறுத்துவார்கள்.

பற்றுடனே வாழ்ந்து பழகிவிட்ட நீங்கள் இது மாதிரி சித்தாந்தங்களால் குழம்பிப்போவீர்கள். அப்பாவையும் அம்மாவையும் குழந்தைகளையும் பற்றிய பொறுப்புகளைச் சுமக்க யோசனையாக இருக்கும்போது, பற்றில்லாமல் இருக்கச் சொன்னதை உங்களுக்கு வசதியாகப் புரிந்துகொள்வீர்கள். யாருக்கு என்ன நடந்தால் என்ன என்ற அலட்சியத்துடன் அக்கறையில்லாமல் இருப்பதை, ‘பற்றில்லாமல் இருப்பது’ என்று திரித்து உங்களையே ஏமாற்றிக்கொள்வீர்கள்.

பற்று இருந்தால் வளர்ச்சி இல்லை என்று யார் சொன்னது?

பூமியுடன் பற்று கொண்டு மரம் தன் வேர்களை ஆழமாகச் செலுத்தும்போதுதான் அது ஆரோக்கியமாக வளர்கிறது. பல பட்சிகளுக்கு இருப்பிடம் தருகிறது. காற்றில் உயிர்வாயுவைச் சேர்க்கிறது. காய், கனிகளை வழங்கிப் பயன்படுகிறது. பூமியிடமிருந்து அதைப் பிடுங்கி எடுத்தால், சிதைந்துபோகிறது.

அதைப்போலத்தான் நீங்களும்... யாரோ சொன்னார்களேயென்று, பற்றிக் கொண்டிருப்பதிலிருந்து வலுக்கட்டாயமாக விடுவித்துக்கொள்ளப்

பார்த்தால், உங்களைத் தீவிரமாகக் காயப்படுத்திக்கொள்வீர்கள்.

உங்களுடைய அடிப்படைக் குணம் பற்று வைப்பதாக இருந்தால், நீங்கள் அதை மாற்றிக்கொள்ள முயற்சி செய்யாதீர்கள்.

ஒருவன் தவளையை வைத்து ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தான். அவன் ‘தாவு’ என்று சொன்னால், அது தாவும்படி பழக்கியிருந்தான். ஆராய்ச்சியில், அதன் கால்களில் ஒன்றை வெட்டிவிட்டு, ‘தாவு’ என்றான். தவளை மூன்று கால்களால் கஷ்டப்பட்டுக் குதித்தது. அடுத்து இன்னுமொரு காலை வெட்டிவிட்டு, ‘தாவு’ என்றான். அப்போதும், தவளை கஷ்டப்பட்டுக் குதித்தது. மூன்றாவது காலை எடுத்ததும், மிகுந்த வலியோடு ஒற்றைக் காலால், எப்படியோ கொஞ்சமாகத் தாவி விட்டது. கடைசியாக நான்கா வது காலையும் அவன் வெட்டி விட்டு, ‘தாவு’ என்றான். நகர முடியாமல், தவளை அவனைப் பரிதாபமாகப் பார்த்தது. மறுபடி மறுபடி தாவச் சொல்லிக் கத்தினான். தவளை அசையவேயில்லை.

அவன் ஆராய்ச்சி முடிவை இப்படி எழுதினான் - ‘நான்கு கால்களையும் எடுத்துவிட்டால், தவளைக்குக் காது கேட்காது!’

இப்படித்தான் சிலர் என்னவோ நடந் தால், என்னவோ முடிவெடுத்து சித்தாந்தங் களை அமைத்துவிடுகிறார்கள். துன்பத்தின் அடிப்படைக் காரணத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் பற்று வைத்தால் துன்பம்தான் என்று சொல்லிவிடு கிறார்கள்.

பற்று கொண்டால் துன்பம் எப்போது வருகிறது?

உங்கள் குழந்தையைப் பள்ளி யிலிருந்து அழைத்து வரும் ரிக்ஷா கண்ணெதிரே கவிழ்ந்துவிட்டால், என்ன செய்வீர்கள்? ரிக்ஷாவிற்கு ஓடுவீர்கள். கீழே விழுந்துகிடக்கும் குழந்தைகளில் உங்கள் குழந்தையைத் தான் முதலில் அள்ளி எடுப்பீர்கள்.

குழந்தைகளின் மீது பற்று என்றால், எந்தக் குழந்தையையும் நீங்கள் எடுத்திருக்கலாம். அங்கே குழந்தையின் மீது பற்று இல்லை. அது உங்களுடையது என்று சொந்தம் கொண்டாடும் தன்மைதான் உங்களைச் செலுத்துகிறது. ‘நான், எனது’ என்ற எண்ணங்கள்தான் முன் நிற்கின்றன.

ஒருவர் உங்கள் நண்பராக இருக்கும் வரை அவர் மீது பற்று கொள்கிறீர்கள். அவர் எதிரியாகும்போது காழ்ப்பு வருகிறது. உண்மையில் அந்தத் தனி நபர் மீதா நீங்கள் முதலில் பற்று கொண்டீர்கள்? இல்லை. அவர் ‘உங்கள்’ நண்பர் என்பதால் பற்று கொண்டீர்கள்.

எந்த உறவிலும் உங்களை விலக்கி விட்டு, அவரை மட்டும் முன்னிறுத்தி நீங்கள் பற்றுகொள்ள இயலவில்லை. உங்களை முன்னிறுத்தித்தான் பற்று கொண்டீர்கள். அப்படி மிகக் குறுகிய வட்டத்திற்குள் உங்களை அடைத்துக் கொள்ளும்போது, பற்று இருந்தாலும் பிரச்னைதான்,

விலக்கினாலும் பிரச்னைதான்.

என்னிடம் யோகா கற்றுக்கொள்ள வருபவர்களில் சிலர், சில பயிற்சிகள் பிடிக்கவில்லை என்பார்கள். அவர்களிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்து ‘சரி, உங்களுக்குப் பிடித்ததையெல்லாம் பட்டியலிடுங்கள்’ என்பேன். வெகு நேரம் யோசித்து எழுதிய காகிதத்தைத் திருப்பித் தருவார்கள். அதில் அரை டஜன் விஷயங்களை எழுதி இருப்பார்கள்.

“இவ்வளவு பிரமாண்டமான பிரபஞ்சத்தில் உங்களுக்குப் பிடித்தது ஆறேழு விஷயங்கள்தானா?” என்று கேட்டால், விழிப்பார்கள்.

விருப்புகள், வெறுப்புகள் என்று பார்வையைக் குறுக்கிக்கொள்வதால், எத்தனையோ அற்புதமான விஷயங்கள் நீங்கள் பற்றுகொள்ளும் பட்டியலில் தவிர்க்கப்பட்டுவிடுகின்றன. இந்த உலகின் முழுமையை நீங்கள் உணர முடியாமலேயே போய்விடுகிறது.

எல்லாவற்றிலிருந்தும் பற்றில்லாமல் விலகி விலகித் தனியே போய் நிற்பது சுதந்திரமல்ல... வளர்ச்சியல்ல. எல்லாவற்றையும் தனக்குள் அடக்கி விசுவரூபம் எடுத்துக்காட்டுவதுதான் உண்மையான வளர்ச்சி.

நீங்கள் ஒருவர்மீது கொள்ளும் பற்றும் அப்படிப்பட்ட ஆழத்துடன் இருக்க வேண்டும். நீங்கள் வேறு, அவர் வேறு என்று பகுத்துப்பார்க்க முடியாத அளவிற்கு, அவருடன் பூரணமாக ஒன்றாகிவிடுங்கள். அப்புறம் இன்னொன்று என்ற அடையாளம் ஏது? சேர்ந்திருக்கலாமா, விலகியிருக்க லாமா என்ற கேள்வி ஏது? அதன் மீது பற்று வைக்கலாமா என்ற கேள்வி ஏது? அதனால் வரப்போகிற வலிகள்தான் ஏது?

இந்த வாழ்க்கையில் இன்னொரு உயிரைத் தன் உயிர்போல மதித்துச் சேர்த்துக்கொள்வதற்கு இணையான உன்னதம் வேறென்ன இருக்க முடியும்?

உங்களுடையது என்பதை விலக்கிவிட்டு, கொஞ்சம் கொஞ்சமாக பிரபஞ்சத்துடன் நீங்கள் முழுமையான பற்றுக்கொள்ளும்போது, உங்கள் வாழ்க்கையே முழுமையாகிவிடும்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“குடும்பத்தைத் துறந்துவிட்டு, ஆன்மிகப் பாதையில் போவது, குடும்பத்திற்கு செய்யும் துரோகம் இல்லையா?”

“நீங்கள் ஆன்மிகப் பாதையில் போவதற்கு எதிலிருந்தும் பிய்த்துக்கொண்டு வர வேண்டியதில்லை. ஆனால், குடும்பம் என்பது வாரிசுகளைப்

பெற்றுக்கொள்வதற்கும், ஒருவருடன் ஒருவர் சிக்கலான வலைகளைப் பின்னிக் கொள்வதற்கும் மட்டும் பயன்படும் இடமாகத் திகழ்ந்தால், அங்கே எப்போது வேண்டுமானாலும் பிரச்னை வெடிக்கும். அடுத்தவரை அப்படியே ஏற்றுக்கொள்ளும் தன்மை இல்லாமல், சகிப்புத்தன்மையின் காரணமாக மட்டும் உறவினர்கள் சேர்ந்திருந்தால், சந்தர்ப்பம் வரும்போது, அந்தக் குடும்பம் தானாக உடைந்துவிடும். அதற்குக் காரணம் பக்குவமற்ற மனிதர்களேயன்றி, நிச்சயமாக ஆன்மிகம் அல்ல!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சின்ன வயதிலிருந்தே, உங்களுக்குள் ஒரு கடமை உணர்வை வளர்த்திருப்பார்கள். மகனைப் படிக்க வைப்பது தந்தையின் கடமை, வயதான தந்தையைக் கவனித்துக்கொள்வது மகனின் கடமை, மாணவனைத் தயார் செய்வது ஆசிரியரின் கடமை, சட்டத்தை மதித்து நடப்பது குடிமகனின் கடமை, எல்லையில் நாட்டைக் காப்பது ராணுவத்தின் கடமை என்றெல்லாம் சொல்லிச் சொல்லி, 'கடமை' என்ற வார்த்தையை உங்களுக்குள் ஆழமாக விதைத்திருப்பார்கள்.

கடமையைச் செய்வதாக நினைத்து எதைச் செய்தாலும் உங்களுக்குக் களைப்புதான் மிச்சமாகும். ரத்த அழுத்தம் ஏறும்.

தன்னுடைய செருப்புத் தொழிற் சாலைக்கு அந்த முதலாளி வந்திருந்தார். அங்கே, ஒரு பகுதியில் வேலை மும்முரமாக நடந்துகொண்டு இருந்தது.

"ஐயா, அடுத்தவர் என்ன செய்கிறார் என்று கவலைப்படாமல், தங்கள் கடமையை ஆற்றும்படி இங்கே ஒவ்வொரு தொழிலாளருக்கும் கச்சிதமாகச் சொல்லித்தரப்பட்டிருக்கிறது" என்றார் மேலாளர், பெருமையாக.

ஒரு தொழிலாளி அட்டைப் பெட்டியை எடுத்து அதன் மீது லேபிள் ஒட்டி, அடுத்தவருக்குத் தள்ளினார். அவர் அந்தப் பெட்டியில் ஒற்றைச் செருப்பைப் போட்டார். அவரை அடுத்திருந்தவர் அந்தப் பெட்டியை மூடி ஓட்டினார். அந்தப் பெட்டி விற்பனை செக்ஷனுக்கு செல்லும் வண்டியில் ஏற்றப்பட்டது.

"என்ன நடக்கிறது இங்கே? செருப்புகளை ஜோடியாகத்தானே தயாரிக்கிறோம்? ஏன் ஒற்றைச் செருப்புகளாக பேக் செய்கிறீர்கள்?" என்று முதலாளி பதறினார்.

"இடது கால் செருப்பை எடுத்துப் பெட்டியில் போடவேண்டியவர் இன்றைக்கு லீவு சார்! ஆனாலும் வந்திருப்பவர்கள் தங்கள் கடமையை ஒழுங்காகச் செய்கிறார்கள்!" என்று மேலாளரிடமிருந்து பதில் வந்தது.

எந்த ஒரு வேலையையும் ரசித்து, அனுபவித்துச் செய்யாமல், கடமைக்காகச் செயல்பட்டால், இப்படித்தான் ஆகும்! விரைவிலேயே சலிப்பும்வெறுப்பும் விரக்தியும் கொண்ட இயந்திரமாக மாறிப் போவீர்கள். யார் சொல்லியோ செய்யாமல், அதை நீங்களாகப் பொறுப்புடன் உணர்ந்து விரும்பிச் செய்தால் மட்டுமே இந்த வேதனை இருக்காது. உயர்வும் உங்களைத் தேடி வரும்.

நீங்கள் தேர்வு எழுதினீர்கள். மிக நன்றாக எழுதியிருந்தீர்களென்றால், 'பிரமாதமாக எழுதினேன்' என்பீர்கள். சரியாக எழுதவில்லையென்றால்..?

'நேரமே போதவில்லை' என்பீர்கள். 'பாடத்திட்டத்தில் இல்லாத கேள்விகள் வந்துவிட்டன' என்பீர்கள். அல்லது, வேறு காரணங்கள் தேடுவீர்கள்.

வெற்றிக்கு உடனடியாக உரிமை கொண்டாடி பொறுப்பேற்றுக் கொள்ளத் தயாராயிருக்கும் நம் மனம், தவறு நடந்துவிட்டால் மட்டும் அதற்கு வேறு எதைப் பொறுப்பாக்கலாம், யார் மீது பழிபோடலாம் என்று அலை பாய்கிறது.

பொதுவாகவே, பொறுப்பை ஏற்பது என்றால், சுமைகளைச் சுமப்பது என்று அர்த்தப்படுத்திக் கொள்பவர்கள்தான் நம்மில் அதிகம். விளக்கை யார் ஏற்றுவது, தட்டை யார் கழுவுவது, தண்ணீர் பிடித்து வைப்பது யார் போன்ற சின்னச் சின்ன விஷயங் களில்கூட பொறுப்பேற்பது பற்றிய சர்ச்சைகள் நம்பமுடியாத அளவுக்கு நீண்டுகொண்டு போகின்றன.

இப்படித்தான் சங்கரன் பிள்ளைக் கும் அவர் மனைவிக்கும் வாசல் கதவை யார் பூட்டுவது என்பதில் தகராறு வந்துவிட்டது. அவர்கள் பேசி ஒரு முடிவுக்கு வந்தார்கள். 'யார் வாய் திறந்து முதல் வார்த்தையைப் பேசுகிறோமோ, அவர்தான் எழுந்து போய்க் கதவைப்பூட்ட வேண்டும்!'

அவ்வளவுதான்! அதன்பின் அவர்களுக்குள் பேச்சுவார்த்தை நின்றது. 'சாப்பாடு போடு' என்று சங்கரன் பிள்ளையோ, 'சாப்பிட வரலாம்' என்று அவர் மனைவியோ வாயைத் திறந்தால்கூட கதவைப் பூட்ட வேண்டிய பொறுப்பு வந்துவிடுமே என்று, பிடிவாதமாகப் பட்டினியாகவே கிடந்து, மௌனம் சாதித்தார்கள்.

நள்ளிரவில் சில ரௌடிகள் வீட்டினுள் நுழைந்தார்கள். ஹாலில் உட்கார்ந்து இருந்த தம்பதி, தாங்கள் நுழைந்ததைக் கண்டும் கூச்சல் போடாமல் மௌனமாக வேடிக்கை பார்ப்பதைக் கண்டு, ரௌடிகளுக்கு ஆச்சரியம். கைக்குக் கிடைத்த பொருள்களையெல்லாம் அள்ளிக்கொண்டார்கள். அப்போதும் தம்பதியர் பேசாமல் இருக்கவே, ஒருவன் தைரியமாகி சங்கரன் பிள்ளையின் மனைவியின் காதிலிருந்து வைரத் தோட்டைக் கழற்றினான். அதற்குக்கூட அவள் குரல் கொடுக்கவில்லை.

அடுத்தவன் ஆச்சரியமாகி, அங்கிருந்த கத்தியை எடுத்து சங்கரன் பிள்ளையின் மீசையை மழிக்கப் பார்த்தான். அதுவரை கல்லுளிமங்கனாக அமர்ந்திருந்த சங்கரன் பிள்ளை வேறு வழியின்றிக் குரல் கொடுத்தார்...

“சரி சரி, நானே எழுந்துபோய்க் கதவைப் பூட்டித் தொலைக்கிறேன்!”

உங்களைச் சுற்றியுள்ள சூழ்நிலையை உங்களுக்கு விருப்பமானதாக அமைத்துக்கொள்ள வேண்டுமென்றால், அதற்கான பொறுப்பை நீங்கள் ஏற்கத் தயாராகஇருக்க வேண்டும். அப்போது தான், தோல்விகள் ஏற்பட்டாலும், அந்த வேதனை உங்களைப் பாதிக்காது. அந்தத் தோல்விகளையே எப்படி வெற்றிக்கான பாடங்களாக மாற்றிக்கொள்ள முடியும் என்பதையும் நீங்கள் கற்க முடியும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“வாஸ்து சாஸ்திரப்படி வீட்டை மாற்றி அமைத்தால் வாழ்க்கை வளமாகுமா?”

“மலை மீது என்றால் ஒரு வகை வீடு, பள்ளத்தாக்கு என்றால் வேறு வகை வீடு, கடலோரம் என்றால் இன்னொரு மாதிரி வீடு. எங்கே குடியிருக்கிறோமோ, அதற்கேற்றபடி வீட்டைக் கட்ட வேண்டும் என்பதற்காக வாஸ்து சாஸ்திரம் சொல்லப்பட்டது. நல்ல காற்றோட்டமும் வெளிச்சமும் கொண்ட கட்டடங்களைக் கட்டுவதற்காகச் சொல்லப்பட்ட சாஸ்திரத்தை இன்றைக்கு பிஸினஸில் வெற்றி பெறுவதற்கெல்லாம் பயன்படுத்துவது நம்பமுடியாத வேடிக்கை!

சாஸ்திரங்கள் என்பவை வாழ்க்கைக்கு வழி காட்டுவதற்காக உருவாக்கப்பட்டவை. வாழ்க்கையையே தூக்கி அவற்றிடம் ஒப்படைப்பது பொறுப்பற்ற செயல்!

## அத்தனைக்கும் ஆசைப்படு!

எந்தவொரு இழப்பையும் வளர்ச்சிக்கான வாய்ப்பாகப் பார்க்க முடியும்!

அண்மையில் சமுத்திரத்தின் மடியில், உறக்கத்தில் கொஞ்சம் புரண்டு படுத்தது பூமி. அவ்வளவுதான்... கடலோரங்களில் சில நிலப் பகுதிகள் காணாமல் போயின. பல உயிர்கள் ராட்சத அலைகளால் விழுங்கப்பட்டுவிட்டன. கடலை ஒட்டி வீடுகளை அமைத்தால் பாதுகாப்பு இல்லை என்பதை அலட்சியம் செய்ததற்கு, மீண்டும் சில உயிர்கள் அபராதமாக வசூலிக்கப்பட்டுவிட்டன.

லட்சக்கணக்கில் மீன்களை வாரித் தந்தபோது நண்பனாகக் கவனிக்கப்படாத கடல், ஒருமுறை சீறியதால் உடனே எதிரியாகப் பார்க்கப்பட்டுவிட்டது.

புத்தாண்டு பிறக்கும் நேரத்தில், இந்தத் துன்பம் மக்களைத் தாக்கிவிட்டது. அடுத்தடுத்து பண்டிகைகள் வரும்போது, கொண்டாடலாமா, நாமும் துக்கம் அனுஷ்டிக்க வேண்டுமா என்பது எல்லோர் மனதிலும் உள்ள கேள்வி.

துன்பங்களை அனுபவிப்பவர்கள் மத்தியில் போய் அமர்ந்து, நாமும் துன்பத்தில் சிக்கிப் போகவேண்டும் என்ற அவசியம் இல்லை. எல்லோரும் உட்கார்ந்து அழுது கொண்டிருப்பதற்கான நேரமல்ல இது!

நோய்வாய்ப்பட்டவர்களைக் கவனித்துச் சிகிச்சை தரவேண்டுமானால், அது யாரால் முடியும்? ஆரோக்கியமானவர்களால்தானே! இழந்து தவிப்பவர்களை அந்தத் துக்கத்திலிருந்து மீட்க வேண்டுமானால் யாரால் முடியும்? ஆனந்தமாயிருப்பவர்களால்தானே!

‘என்னது..! அடுத்தவன் வருத்தமாக இருக்கும்போது நான் ஆனந்தமாக இருப்பதா? இது வக்கிரமான, குரூரமான சிந்தனை அல்லவா?’ என்ற கேள்வி பீறிட்டு எழும்.

ஏதோவொன்று கிடைத்தால்தான் ஆனந்தம் என்ற நோக்கத்தோடு வாழ்ந்து வருபவர்களுக்கு ஆயிரம் கிடைத்தாலும், கிடைக்காத ஆயிரத்து ஒன்றாவது விஷயத்தால் துக்கம் வந்து சேரும். அந்த மாதிரியான ஆனந்தத்தை நான் சொல்லவில்லை.

ஆனந்தமாயிருப்பது என்றால் பட்டாசு வெடித்து, கொண்டாட்டமும் கும்மாளமுமாக இருப்பது என்று யார் சொன்னது?

அன்பாயிருப்பது ஆனந்தம். அழுபவனுக்கு ஆறுதல் சொல்வது ஆனந்தம். பரிதவிப்பவர்களைப் பரிவோடு அணைத்துக்கொள்வது ஆனந்தம். இயலாதிருப்பவனுக்கு இதயப்பூர்வமாகச் சேவை செய்வது ஆனந்தம். சூழ்நிலைக்குத் தகுந்தவாறு, எந்தப் பாதிப்புமில்லாமல் தன்னைப் பதப்படுத்திக்கொள்வதுதான் உண்மையான ஆனந்தம்! ஆனந்தம் என்பது பெறுவதில் மட்டுமில்லை, வழங்குவ திலும் இருக்கிறது.

பசியோடு இருக்கும் ஒருவனுக்கு உணவு கிடைத்தால்தான் பலம் என்று விஞ்ஞானம் சொல்லும். ஆனால், ‘பசியோடு இருக்கும் ஒருவன் தனது உணவை அடுத்தவனுக்குக் கொடுத்தால், அதுவே அவனை மேலும் சக்தியுள்ளவன் ஆக்குகிறது’ என்கிறார் புத்தர்.

ஆற்றில் துணிகளைத் துவைத்துக் கொண்டு இருந்த சலவைக்காரன் பார்வையில், பளபளப்பான கல்ஒன்று தென்பட்டது. அதை எடுத்துத் தன் கழுதையின் கழுத்தில் அலங்காரமாகக் கட்டித் தொங்கவிட்டான் அவன். துணி களை விநியோகம் செய்ய அவன் ஊருக்குள் போனபோது, அந்தக் கல்லை ஒரு நகை வியாபாரி கவனித்தான்.

'அந்தக் கல்லை எனக்குக் கொடேன். ஒரு ரூபாய் தருகிறேன்' என்றான். 'ஐந்து ரூபாய் தந்தால் தருகிறேன். இல்லையென்றால், அது என் கழுதையின் கழுத்திலேயே தொங்கிவிட்டுப் போகட்டும்' என்றான் சலவைக்காரன். வியாபாரி இரண்டு ரூபாய், மூன்று ரூபாய் என பேரம் பேசிக்கொண்டே இருந்தான்.

அடுத்த கடையில் இருந்தவன் இதைக் கவனித்துவிட்டு, 'ஒரே விலை! ஆயிரம் ரூபாய் தருகிறேன். அதை எனக்குத் தா!' என்று பணத்தைக் கொடுத்து, அவசர அவசரமாக அந்தக் கல்லை வாங்கிக்கொண்டான்.

முதல் வியாபாரி வெறுத்துப்போய் சலவைக்காரனிடம் 'அட முட்டாளே! அது வைரக்கல்லுடா! லட்ச ரூபாய்க்கு மேல் போகும். அதைப்போய் ஆயிரம் ரூபாய்க்கு விற்று ஏமாந்துவிட்டாயே!' என்றான்.

'இருக்கலாம். ஆனால், என்னைப் பொறுத்தவரை அது சாதாரணக் கல். அதை ஆயிரத்துக்கு விற்றதில் எனக்கு லாபம்தான்! அதன் மதிப்பு தெரிந்து இருந்தும் ஐந்து ரூபாய் கொடுக்க மனமில்லாமல் பேரம் பேசி, நீதான் முட்டாள்தனமாக அதை இழந்துவிட்டாய்!' என்று சிரித்தான் சலவைக் காரன்.

மதிப்பிட முடியாத மனிதத்தன்மை உங்களுக்குள் இருப்பதை உணர்ந்திருந் தும் அதை வெளிக்கொணராமல் இருக்க, இரண்டுக்கும் மூன்றுக்கும் பேரம் பேசும் முட்டாள் வியாபாரியா நீங்கள்?

எந்த இழப்பையும் நம் வளர்ச்சிக்குப் பயன்படுத்துவதுதான் புத்திசாலித்தனம். இயந்திர வாழ்க்கையில் சிக்கி, மரத்துப் போய்விட்ட மனிதத் தன்மை மீண்டும் துளிர்த்து எழக் கிடைத்த சந்தர்ப்பமாக இதை நினையுங்கள்.

இறந்துபோன லட்சத்துக்கு மேற்பட்டவர்களின் முகங்கள் உங்களுக்குத் தெரியாது. ஆனாலும், அவர்களை உங்களுக்கு மிக நெருக்கமானவராகச் சில நிமிடங்களாவது மனதார நினையுங்கள். மரத்துப் போயிருக்கிற உங்கள் பரிவு உசுப்பி எழுப்பப்படுவதை உணர்வீர்கள். அவர்களை இழந்து பரிதவிப்பவர்களை இப்போது நீங்கள் பார்க்கும் பார்வையில் தானாகக் கருணை வரும். மிகக்குறுகிய காலத்துக்குள் இந்தத் துக்கம் களையப்பட்டு, அவர்களுக்கு ஆனந்தம் திரும்பும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“கடல் இத்தனை உயிர்களைப் பலி வாங்குவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பவரா கடவுள்?”

“தெய்வம், ஆன்மிகம் என்று தேவைக்கு அதிமாகப் பேசிப் பேசி இங்கே அடிப்படையான மனிதம் மறக்கப் பட்டுவிட்டது.

தெய்வீகம் என்பது ஒரு மலர்ச்செடி. அது பூத்துக் குலுங்கவேண்டுமானால், அதற்குத் தக்க உரம் போட வேண்டும். உண்மையான மனிதம்தான் சிறந்த உரம்.

மனிதம் மரித்துப்போன இடங்களில், எத்தனைக் கோயில்கள் கட்டினாலும் தெய்வீகமும் மரித்துப் போகும்.

இயற்கையின் சீற்றம்கூட உங்கள் மனிதம் உயிரோடு இருக்கிறதா என்று பரிசோதிக்க வைக்கப்பட்ட பரீட்சை என்றே நினையுங்கள். அத்தனையையும் இழந்துவிட்டு நிற்பவர்களை, உங்களுடன் தொடர்பில்லாத யாரோ என்று ஒதுக்கித் தள்ளாமல், உங்கள் குடும்பத்தினர் என்று உளமார அதே பரிவுடன் நேசியுங்கள்.

மனிதத் தன்மையிலிருந்து கடவுள் தன்மைக்கு உயர, உங்களுக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பமாக இதை ஏற்றுக்கொள்ளுங்கள்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

வாழ்க்கையின் வெவ்வேறு தளங்களில், நீங்கள் வெவ்வேறு விஷயங்களையும் வெவ்வேறு ஆட்களையும் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். எதற்கெல்லாம் பொறுப்பேற்றுக்கொள்வது என்ற கேள்வி எப்போதும் உங்களை அரித்துக்கொண்டே இருக்கும்.

இயற்கையின் சீற்றத்தால், குஜராத்தில் பல வீடுகள் தரைமட்டமாயின. தமிழகக் கடலோரம் பல வீடுகள் அடித்துச்செல்லப்பட்டன. அப்போதெல்லாம் யாருக்கோ, என்னவோ நடக்கிறது என்று அலட்சியமாக இருப்பீர்களா? தேசமே பொறுப்பேற்றுக்கொண்டு செயலாற்ற வேண்டிய தருணங்கள் அல்லவா அவை?

அடிபட்டு யாரோ சாகக் கிடப்பதைப் பார்க்கிறீர்கள். நீங்கள் பொறுப்புள்ளவராக என்ன செய்யமுடியும்? மருத்துவம் தெரிந்திருந்தால், அவருக்கான முதலுதவி அளிப்பீர்கள். இல்லையென்றால், உடனடியாக அவருக்கு மருத்துவ உதவி கிடைக்க ஏற்பாடு செய்வீர்கள்.

மாறாக, என்னுடன் தொடர்பு இல்லாதவருக்கெல்லாம் நான் எப்படிப் பொறுப்பேற்கமுடியும் என்று அவரைக் கவனித்தும் கவனிக்காததுபோல் கடந்து சென்றால், உங்களுக்கும் பாதையோரம் கிடக்கும் கல்லுக்கும் என்ன வித்தியாசம்?

பொறுப்பு என்றால், செயலாக எதையாவது செய்தே ஆகவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. உங்களைப் பற்றிய பொறுப்பு உணர்வு முழுமையாக இருந்தால், சூழ்நிலைக்குத் தக்கவாறுதான் நீங்கள் நடந்துகொள்ளமுடியும்.

சில சமயம் சூழ்நிலைக்குத் தக்கவாறு, உங்களால் கையாள முடியாத எதையும் செய்யாமல் இருப்பதுகூடப் பொறுப்பான செயல்தான்.

ஆனால், பொறுப்பேற்றுக் கொள்ளக்கூடிய சந்தர்ப்பங் களில்கூட, அவற்றைத் தட்டிக் கழிப்பது உங்கள் வெற்றிகளுக்கு ஒருபோதும் உதவாது.

உங்களுடையது சொந்தத் தொழிலாக இல்லாமல் இருக்கலாம். நீங்கள் உழைத்தால், யாரோ ஒரு முதலாளிதானே லாபமடைகிறான் என்று பொறுப்பற்று, கடனே என்று வேலை செய்யத் தோன்றலாம்.

உண்மையில், அந்தத் தொழிலைச் செய்ய உங்களுக்கு முழுத்திறமை இருக்கிறதா என்று இன்னொருவரின் முதலீட்டில் கற்றுக்கொள்ளக் கிடைத்திருக்கும் அற்புதமான வாய்ப்பல்லவா அது?

உங்களுடைய சொந்தத் தொழிலாகவே அதை நினைத்து, அதை வெற்றி பெறச் செய்ய என்னென்ன பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளமுடியும் என்று பார்க்கவேண்டாமா?

இங்கே நீங்கள் முழுமையான ஈடுபாட்டுடன் செயலாற்றினால், மேம்படப்போவது உங்கள் முதலாளியின் தொழில் மட்டுமல்ல... உங்களுடைய திறமையும் தான்!

மாறாக, அடுத்தவர் தொழில்தானே என்று சம்பளத்துக்கு வேலை செய்யும் அலட்சிய மனப்பாங்குடன் செயலாற்றினால், அந்தத் தொழில் விரைவிலேயே நசித்துப் போகும். உங்களுக்குக் கிடைத்த வாய்ப்பு பறிபோகும்.

பொறுப்புடன் முழுமையாக வேலை செய்த தொழிலாளர்கள்தான், பின்னாளில் பெரிய முதலாளிகளாக வளர்ந்திருக்கிறார்கள் என்று வெற்றி பெற்றவர்களின் சரித்திரங்கள் சொல்கின்றன.

முதலில் பொறுப்புகளை இன்னொருத்தர் சுமத்திய தாக நினைக்காமல், சந்தோஷமாக முழு மனதுடன் ஏற்றுக்கொள்ளப் பழகுங்கள். உங்களுடைய பிரச்னை களில் பாதி தீர்ந்துவிடும்.

ஹுய்தி என்றொரு ஜென் குரு இருந்தார். அவர் தன் தோளில் எப்போதும் ஒரு பெரிய மூட்டையைச் சுமந்து செல்வார். அதில் என்னென்னவோ விஷயங்கள் இருக்கும்.

ஒவ்வொரு ஊரிலும் குழந்தைகளைப் பார்த்தால், அதிலிருந்து இனிப்புகளை எடுத்து வழங்குவார்.

ஒருமுறை இன்னொரு ஜென் குரு எதிர்ப்பட்டார்.

“ஜென் என்றால் என்ன?” என்று அவர் கேட்டார். ஹுய்தி உடனே தன் மூட்டையைக் கீழே போட்டு விட்டு நிமிர்ந்து நின்றார்.

“ஜென்னின் நோக்கம் என்ன?” என்று அடுத்த கேள்வி வந்தது. ஹுய்தி கீழே போட்ட மூட்டையை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு நடந்தார்!

மூட்டையை அவருடையது என்று நினைக்காமல் கீழே போடவும் முடியும், சந்தோஷமாகச் சுமக்கவும் முடியும் என்பதையே அவர் குறிப்பால் உணர்த்தினார்.

வலியில்லாமல் பொறுப்புகளை ஏற்கத் தெரிந்து விட்டால், அது சுமை இல்லை.

உங்கள் வாழ்க்கைக்கு நீங்கள்தான் பொறுப்பு. எனவே, ஒருபோதும் பொறுப்பைத் தட்டிக் கழிக்கப் பார்க்காதீர்கள்.

முதலில், பொறுப்பு என்பதைச் செயலாக மட்டுமே நினைப்பதை விடுங்கள். பொறுப்பு என்பதை உணர்வாகக் கவனிக்கப் பழகுங்கள்.

முழுமையான பொறுப்புணர்வுடன் நீங்கள் இருந்துவிட்டால், அமைதியும் ஆனந்தமும் தாமாகவே உங்கள் சொந்தங்களாகிவிடும்.

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“நான் புன்னகைத்தாலே முகத்தைத் திருப்பிக்கொள்பவர்களிடத்தில் எப்படி நான் அன்பாக இருக்கமுடியும்?”

“அன்பாக இருப்பது என்பது ஒரு உள்தன்மை. அன்பாயிருப்பதாகத் தெரு எங்கும் அறிவித்துக்கொண்டே செல்ல வேண்டிய அவசியம் இல்லை.

நீங்கள் அன்பாயிருப்பதற்கு, அடுத் தவர்கள் எல்லாம் ஒத்துழைக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது, உங்களுக்கு அன்பு என்றால் என்ன என்று முழுமையாகப் புரியவில்லை என்பதைத்தான் காட்டுகிறது.

அன்பு என்பது எதிர்பார்ப்பு இல்லாதது. அடுத்தவர்களும் பதிலுக்கு அன்பாயிருக்க வேண்டும் என்ற நிபந்தனைகள் இல்லாதது.

ஆயிரம் பேருக்குச் சேவை செய்தாலும் இரண்டே பேருக்கு வீட்டில் சமைத்தாலும் நீங்கள் அதே அளவு அன்பை மனதில் உணரமுடியும்.

அன்பாக இருப்பது புத்திசாலித்தனம் என்று உங்களுக்குத் தெரிந்து இருக்கிறது. அப்புறம் என்ன? கோபத்தைத் தூண்டும் காரியத்தை ஒருத்தன் செய்தால், போட்டி போட்டுக்கொண்டு, ‘உன்னைவிட அதிக மூடனாக்கும் நான்’ என்று நிரூபித்துக்காட்ட விரும்பு கிறீர்களா?

‘முதலில் உலகமே அன்பானவர்களால் ஆகட்டும். அப்புறம், கடைசியாக நான் மாறு கிறேன்’ என்று காத்திருக்கப் போகிறீர்களா என்ன?”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

என்னிடம் தவறாமல் கேட்கப்படும் கேள்விகளுள் ஒன்று...

‘கடவுள் இருக்கிறாரா, இல்லையா?’

ஆதிமனிதன் பயத்தால் ஆட்டுவிக்கப்பட்டான். திடீரென்று வானில் வெளிச்சக் கீற்றுகள், தடதடவென்று ஓசை, பொத்துக் கொண்டு கொட்டும் தண்ணீர், அளவிட முடியாத வான்பரப்பு, கணக்கிட முடியாத நட்சத்திரங்கள், எல்லைகள் புரியாத அலைகடல்... எதற்கும் காரணம் புரியாமல் மனிதன் மிரண்டான். இந்தப் பிரபஞ்சத்தின் பிரமாண்டத்தின் முன் தன்னை ஒரு தூசுபோல உணர்ந்தான். தனக்குப் புரிபடாத சக்திக்கு முன் பணிந்து, தன்னைப் பாதுகாக்க வேண்டினான். மழையைக் கும்பிட்டான். சூரியனை வணங்கினான். அன்றிலிருந்தே அச்சத்தின் காரணமாகஏற்றுக் கொள்ளப்பட்டவரானார் கடவுள்!

பிறந்ததிலிருந்தே உங்கள் தாயும் தந்தையும் சமூகமும் கடவுள் உண்டு, கடவுள் உண்டு என்று சொல்லிவந்திருப்பதால்தான் நீங்களும் கடவுள் இருப்பதாக நம்புகிறீர்கள்! உங்கள் குடும்பத்தினர் எந்தக் கடவுளின் கட்சியைச் சேர்ந்தவர்களோ அந்தக் கடவுளை மட்டும்தான் உங்களால் ஏற்றுக் கொள்ள முடிகிறது. உங்களுக்குப் பழக்கமான ஜரிகையிட்ட உடைகளையும் ஆபரணங்களையும் அணிந்துதானே கடவுள் அருள் புரிவார்? காலண்டர்களில் அச்சிட்ட தோற்றங்களில் வராமல், வித்தியாசமாக ஜீன்ஸும் ஜிப்பாவும் அணிந்து வந்தால் அவரைக் கடவுள் என்று ஏற்றுக்கொள்வீர்களா?

யானைகள் உலகத்துக்குப்போய் கடவுள் எப்படி இருப்பார் என்று கேளுங்கள். ‘எங்களைவிடப் பெரிய உருவத்துடன், நான்கு தும்பிக்கைகளுடன் இருப்பதுதான் கடவுள்’ என்று சொல்லும். எறும்புகளைக் கேட்டால், ஆறங்குலம் உள்ள பிரமாண்டமான எறும்புதான் தங்கள் கடவுள் என்று சொல்லும்.

இந்தப் பிரபஞ்சத்தில் மனிதனைவிடப் பரிணாம வளர்ச்சி கண்டுவிட்ட வேறொரு உயிரினம் வேறெங்காவது இருக்கக்கூடும். அதனிடம் உங்கள் கடவுள்களைக் காட்டினால், ‘சீச்சீ! கேவலம் மனிதனின் தோற்றத்தையா கடவுள் கொண்டிருப்பார்?அவர் எங்களைப் போலல்லவா இருக்கிறார்!’ என்று கைகொட்டிச் சிரிக்கும்.

தங்களுடைய பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ளத் தெரியாத பலர் மற்றவர்களின் பிரச்னைகளைத் தீர்த்துவைக்கப் புறப்பட்டு விடுகிறார்கள்.

கடவுளைப் பற்றி உங்களுக்கு நேரடி அனுபவங்கள் கிடையாது. அதனால் அடுத்தவர்கள் சொன்னதை அப்படியே ஏற்று நம்பிக்கை வைத்தீர்கள். கோயிலுக்கு எதற்காகப் போகிறீர்கள்? கடவுளை உணர்வதற்காகவா?

‘அதைக் கொடுப்பா, இதைக் கொடுப்பா, காப்பாற்றுப்பா’ என்று வேண்டிக்கொள்ளத்தானே? உங்கள் கடவுள் நம்பிக்கைகள் பெரும்பாலும் பேராசை மற்றும் பயத்தின் அடிப்படையில்தானே வளர்க்கப் பட்டிருக்கின்றன?

உங்கள் வீட்டில் டஜன் கணக்கில் கடவுள் படங்களை மாட்டி வைத்திருக் கிறீர்களே, அதனால் வாழ்க்கையைப் பற்றிய உங்கள் அச்சம் விலகிவிட்டதா? கடவுளர்களையும் சேர்த்து அல்லவா வீட்டுக்குள் வைத்துப் பூட்டிவிட்டுப் போகவேண்டியிருக்கிறது?

கடவுள் என்பதே உங்கள் அச்சத்தின் அடையாளமாக இருப்பதால்தான் பயபக்தி என்று ஒரு வார்த்தையை நீங்கள் ரசிக்கிறீர்கள். கடவுள் அன்பானவர் என்றால், அவரிடம் பக்தி இருந்தால் மட்டும் போதாதா? பயம் எதற்கு?

கடவுளை உணராதவர்கள்தான் இன்றைக்குப் பக்தியைப் பற்றி அதிகம் பேசுகிறார்கள்.

அப்படியானால் கடவுள் என்பவர் கற்பனைப் பாத்திரம்தானா? அவரைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமா?

ஒரு சிறு விதை பூமிக்குள் விழுந்ததும் மிகப்பெரிய விருட்சமாக வளர்கிறதே, எப்படி? இந்த விதையில் இப்படிப்பட்ட மரம்தான் வளரும், இப்படிப்பட்ட பூதான் மலரும் என்று பதிவு செய்யப்பட்டிருக்கிறதே... இந்த விதிகளை அமைத்தது யார்? உங்களை மீறிய சக்தியை கடவுள் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

ஆக, தொடங்கிய இடத்துக்கே வந்துவிட்டோம்.

கடவுள் இருக்கிறாரா, இல்லையா?

இதைத் தெரிந்துகொள்ளும் ஆசை உங்களுக்குள் வந்துவிட்டால், நீங்கள் யாரிடம் கேட்டு அறிய முடியும்?

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"ஏன் சில கோயில்களில் மட்டும் கூட்டம் அலை மோதுகிறது? வேறு சில கோயில்களில் தீபம் ஏற்றக்கூட ஆளில்லை?"

"நீங்கள் கடவுளைத் தெரிந்துகொள்ள கோயிலுக்குப் போவதில்லை. உங்கள் பேராசைக்குத் துணை வருவார் என்று நம்பித்தான் அங்கே போகிறீர்கள். அதனால், கடவுள் என்ற சரக்கை எந்தக் கோயில் சிறப்பாக விற்பனை செய்கிறது என்பதைப் பொறுத்து அந்தக் கோயிலுக்குக் கூட்டம் சேர்கிறது.

'இந்தக் கோயிலுக்குப் போ. பத்து ரூபாய் போடு. இருபது ரூபாயாகத் திரும்பி வரும். அந்தக் கடவுளிடம் லாபத்தில் பத்து சதவிகிதம் தருவதாக வேண்டிக்கொள். கொள்ளை லாபம் உனக்கு நிற்கும்' என்று சிபாரிசு செய்யப்படும் கோயிலுக்குத் தானே மணிக்கணக்கில் கியூவில் போய் நிற்பீர்கள்!

அப்படியெல்லாம் விலைக்கு வாங்கிவிடக்கூடியவரா கடவுள்? அப்படியானால், இருபது சதவிகிதம் தருவதற்கு வேறு ஒருவன் தயாராகிவிட்டால், கடவுள் உங்களைக் கவிழ்த்து விடுவாரே? சரி, உங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளத்தான் கோயிலுக்குப் போகிறீர்கள். பரவாயில்லை. ஆனால், அதில் நேர்மையாகவாவது இருங்களேன்! கடவுளிடமே ஏன் பேரம் பேசுகிறீர்கள்?"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

கடவுள் இருக்கிறார் என்று யாரோ சொன்னதற்காக நம்புவதோ, கடவுள் இல்லை என்று யாரோ சொன்னதற்காக மறுதலிப்பதோ எப்படிப் புத்திசாலித்தனமாகும்?

கடவுளை நம்புவதும் நம்பாததும் கடவுளின் பிரச்னை இல்லை. அது முழுக்க முழுக்க உங்கள் பிரச்னை. ராமர் இருந்தாரா, கிருஷ்ணர் வந்தாரா, ஜீசஸ் இருந்தாரா, நபிகள் வந்தாரா என்பதா பிரச்னை? உங்கள் அனுபவம் என்ன? யூதர்கள் கடவுளுடன் நேரடித் தொடர்பு வைத்திருப்பதாகச் சொல்லிக் கொள்பவர்கள். அவர்களைப் பற்றி ஒரு வேடிக்கைக் கதை உண்டு.

யூதர்களின் தலைவனான ஜோஷ்வா கோல்டுபெர்க் வருடத்துக்கொரு தடவை சொர்க்கத்துக்குப் போய்க் கடவுளுடன் அமர்ந்து விருந்து உண்ணும் உரிமை பெற்றிருந்தான். அப்படியொரு முறை கடவுளுடன் விருந்துக்கு அமர்ந்திருந்த நேரம்... வருடா வருடம் மாற்றமில்லாமல் வறட்டு ரொட்டிகள்தான் விருந்துக்குப் பரிமாறப்படுவது வழக்கம்.

‘கடவுளே, ஒரு சந்தேகம் என் மனதை அரித்துக்கொண்டிருக்கிறது’ என்று கேட்டுவிட்டு, ரொட்டியைக் கஷ்டப்பட்டு மென்றான் ஜோஷ்வா.

‘கேள், மகனே!’

‘உங்கள் சாம்ராஜ்யத்தில் உங்களுக்கு நெருக்கமானவர்கள் நாங்கள் மட்டும்தானா? வேறு யாராவது உண்டா?’ என்று அடுத்த ரொட்டித் துண்டத்தை விழுங்கித் தண்ணீரைத் தொண்டையில் சரித்துக்கொண்டான்.

‘சந்தேகமே வேண்டாம். வேறு யாருக்கும் அந்தச் சிறப்புரிமை இல்லை. அதனால்தான் உன்னை மட்டும் விருந்துக்கு அழைத்தேன்’.

ஜோஷ்வா கையில் எடுத்த ரொட்டியைக் கீழே போட்டுவிட்டு எழுந்து, ‘எத்தனை நாட்களுக்கு எங்களுக்கே இந்த அவஸ்தை? வேறு யாரையாவது உங்களுக்கு நெருக்க மானவர்களாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளக்கூடாதா?’ என்றான் கோபமாக.

இப்படிக் கடவுளுக்கு நெருக்கமாக இருப்பதாகச் சொல்லிக்கொள்பவர்களுக்குதானே அதிக வேதனை?

இவர்கள் கடவுள் என்பதன் உன்னதத்தைப் புரிந்துகொள்ளவில்லை. கடவுளைப் பற்றிய உண்மையான அனுபவங்களைப் பெற்றதில்லை. ஆனாலும், கடவுளுக்கும் மற்றவருக்கும் இடையில் இடைத்தரகர்களாக இருந்து ஆதாயம் தேட, இவர்கள் போடும் நாடகங்கள் சகிக்க முடியாதவை.

கடவுளை நீங்கள் முழுமையாக நம்பி வாழ்ந்திருக்கிறீர்களா? சிலர் இருக்கிறார்கள்... நெருக்க மானவர்களுக்கு உடல்நிலை மோசமாயிருந்தால் கடவுளிடம் வேண்டிக்கொள்வார்கள். அப்படியும் அவர்கள் பிழைக்கவில்லை என்றால் 'கடவுள் என்பதெல்லாம் பொய்' என்று வீட்டில் இருக்கும் கடவுள் படங்களை எல்லாம் கழற்றி விட்டெறிவார்கள். தனக்கு ஏதாவது காரியம் ஆகவேண்டும் என்று கேட்டு நடக்கவில்லையென்றால், கடவுளே இல்லை என்று சொல்வார்கள்.

வளர்க்கப்பட்ட விதத்திலும் உங்களுக்குள் விதைக்கப்பட்ட விதத்திலும்தானே உங்களுக்குக் கடவுளை நம்பத் தெரிந்திருக்கிறது?

கடவுள் இருக்கிறார் என்பது ஒரு நம்பிக்கை. இல்லை என்பது இன்னொரு நம்பிக்கை. இருக்கிறாரா, இல்லையா என்பது உங்களுக்குத் தெரியாது என்பதே பட்டவர்த்தனமான உண்மை.

எனக்குத் தெரியாது என்று எப்போது தைரியமாக ஒப்புக்கொள்கிறோமோ, அப்போதுதானே எதைப் பற்றியும் தெரிந்துகொள்வதற்கான வாய்ப்பு முழுமையாகக் கிடைக்கும்!

வெறும் நம்பிக்கைகளை வைத்துப் பின்னப்படும் கற்பனைகளை எதற்காக ஏற்றுக்கொள்ள வேண்டும்? கடவுளைப் பற்றி அறிந்துகொள்ளும் தாகம் உண்மையிலேயே இருந்தால், மற்றவர்கள் சொல்லிக் கொடுத்ததைக் குருட்டுத்தனமாக நம்புவதை விட்டுவிடுங்கள். கடவுள் இருக்கிறாரா என்று நீங்களே தேடுங்கள். உங்கள் தேடலை உங்களிடமே ஆரம்பியுங்கள்.

எல்லையற்ற கடவுள் என்றொருவன் எல்லா இடங்களிலும் இருப்பது உண்மையானால், அவன் உங்களுக்குள்ளும் இருக்க வேண்டுமே? உருவமாகத் தேடாமல் கடவுள்தன்மை என்பதை முதலில் உங்களுக்குள் தேடிப் பாருங்கள். உங்களுக்குள் கடவுளைக் கவனித்து அனுபவித்துவிட்டால், அப்புறம் அவன் அங்கும் இங்கும் எங்கும் இருக்கலாம் என ஒப்புக்கொள்ளலாம்.

ஒரு விஷயத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள். உங்களுக்குப் புத்திசாலித்தனமாக வாழ்க்கையை நடத்தத் தெரிந்திருந்தால், கடவுள் இல்லாமலும் சுகமாகவாழலாம். வாழ்க்கையைப் பற்றிப் புரிந்துகொள்ளாமல், மூடத்தனமாக வாழ்பவ ராக இருந்தால் பூஜை அறையில் எத்தனைக் கடவுள் படங்களைத் தொங்கவிட்டாலும் புண்ணியமில்லை!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"கடவுளுக்கு உண்மையில் எத்தனை முகங்கள்?"

"கடவுள் என்பவர் உங்களைவிட பிரமாண்டமானவராக இருக்க வேண்டும் என்பதற்காக, உங்கள் கடவுளுக்கு பதினாறு கைகள்

இருப்பதாக நீங்கள்தான் உருவகப்படுத்தினீர்கள். கடவுளுக்கு நான்கு முகங்கள், ஆறு முகங்கள் என்று கொடுத்தீர்கள்.

உண்மையைச் சொல்லுங்கள்... உங்களுக்கு எத்தனை முகங்கள்? வீட்டில் ஒரு முகம், அலுவலகத்தில் ஒரு முகம், நண்பர்களிடத்தில் ஒரு முகம், பகைவர்களிடத்தில் ஒரு முகம், தெருவுக்குத் தெரு மாற்றுவதற்கு என்று எத்தனை முகங்களைச் சுமந்துகொண்டு இருக்கிறீர்கள்? முருகனைவிட உங்களுக்கு அல்லவா அதிக முகங்கள்?

முகங்களைக் கணக்கெடுத்துக் கடவுளைத் தீர்மானிப்பது என்றால், உங்கள் அரசியல்வாதிகளுக்கு எதிரில் எந்தக் கடவுளாலும் போட்டி போட முடியாதே!

நம் முன்னோர்கள் கடவுள்களுக்குத் தோற்றங்கள் கொடுத்ததற்கு வேறு பல புத்திசாலித்தனமான காரணங்கள் இருக்கின்றன. அவற்றைத் தெரிந்து கொள்ளாமல், கடவுளைத் தெரிந்து கொண்டுவிட்டதாக நினைப்பது உங்கள் மன அகங்காரத்துக்குத் தீனி போடும் சமாசாரம். அவ்வளவே!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

முதலில் ஒரு விஷயத்தைத் தீர்மானியுங்கள். உங்களுக்கு இந்த உலகை ஆள விருப்பமா அல்லது ஒரு அடிமை போல் வாழ்ந்து மடிய விருப்பமா?

யாரிடமும் கையேந்தி நிற்காமல், விரும்பியதை நீங்களே அடைவதற்கான வழிகள் என்ன?

முதலில் முழுமூச்சாக உங்களைத் தீவிரமாக ஈடுபடுத்திக்கொண்டு செயலாற்ற முன்வர வேண்டும். உங்களின் சக்தியை முழுமையாகப் பயன்படுத்தாமல், அரைகுறை மனதுடன் நீங்கள் செயலாற்றினால், உங்கள் முயற்சிகள் ஒருபோதும் வெற்றி பெறப்போவதில்லை.

உலகை ஆள விரும்புவதாகச் சொல்பவர்களில் பலர், தங்கள் முயற்சிகளில் முழுமையான மனதுடன் ஈடுபடுவதில்லை. அதனால், இவர்களின் செல்வாக்கெல்லாம் அதிகபட்சம் வீட்டில் இளைத்தவர்கள் மீதுதான் செல்லுபடியாகும்.

இரண்டாம் உலகப் போரைப் பற்றிய ஒரு திரைப்படத்தின் கதை நினைவுக்கு வருகிறது.

ஆங்கிலேயர்கள் ஆண்டுகொண்டு இருக்கும் ஒரு ஊரில் ஃபிரெஞ்ச் ராணுவத்தினர், ஒரு வெடிகுண்டைப் புதைத்துவிட்டுப் போய்விட்டதாகச் செய்தி பரவுகிறது. பிரிட்டிஷ் ராணுவத்தினரும் ஊரில் வசிக்கும் மக்களும் அவசர அவசரமாக இடத்தைக் காலி பண்ணிக்கொண்டு போய்விடுகிறார்கள்.

வெறிச்சோடிவிட்ட அந்த நகரத்தில் மிச்சமிருப்பவர்கள், யாராலும் கவனித்து அழைத்துச் செல்லப்படாத சில மூடர்கள் மட்டுமே!

புதைக்கப்பட்ட குண்டு பற்றித் தெரியாமல், அவர்கள் அங்கும் இங்கும் கவலையின்றி நடமாடுகிறார்கள். கேட்பதற்கு ஆளில்லாமல், ‘நீதான் ராஜா, நான்தான் மந்திரி... இதோ, இவன் மேயர்’ என்று ஆளாளுக்கு ஒரு பதவியைத் தீர்மானித்துக் கொண்டு, அந்த நகரத்தை அவர்களே ஆட்சி செய்ய ஆரம்பிக்கிறார்கள்.

சில வாரங்கள் ஆனதும், ‘இனி குண்டு வெடிக்காது’ என்று ஜெர்மன் ராணுவம் முதலில் நுழைகிறது. இன்னொரு புறத்திலிருந்து பிரிட்டிஷ் ராணுவமும் நுழைகிறது. அவர்கள் ஒருவரை ஒருவர் சுட்டுக்கொள்ள ஆரம்பிக்கிறார்கள்.

ராஜாவாக இருப்பவன், ‘நிறுத்துங்கள்... என்னைக் கேட்காமல் நீங்கள் சண்டை போடக்கூடாது’ என்று சொல்லிக் கொண்டே வெளியே வர, தோட்டா அவனைச் சாய்க்கிறது.

‘ராஜா இறந்துவிட்டார். அந்தப் பதவி எனக்கு’ என்று அடுத்தவன் ராஜாவாகப் போர்க்களத்துக்குள் முட்டாள் தனமாக நுழைய, அவனும் சுடப்படுகிறான்.

இதைப் பார்த்து மதகுருவாகப் பதவி ஏற்றவன், ‘என் உத்தரவு இல்லாமல் ராஜா நடந்துகொள் வதால்தான் இந்தப் பிரச்னை’ என்று சொல்லிக்கொண்டே குறுக்கிட, அவனுடைய விதியும் முடிகிறது.

‘நடப்பது உண்மையான போர்’ என்று புரியாமல், ஒவ்வொருவராக அங்கே பலியாவதும், அந்தக் கடைசி நேரத்திலும் தங்கள் பதவியைப் பற்றிப் பெருமையாக உளறிக்கொண்டு இருப்பதுமாகக் கதை தொடர்கிறது.

இது வெறும் சினிமாக் கதை மட்டுமல்ல, பலர் இப்படித்தான் உலகையே ஆளப் பிறந்தவர் கள் என்று மனதுக்குள் அகங்காரத்தை நிரப்பிக் கொள்கிறார்கள்.

திறமைகளை வளர்த்துக் கொள்ளாமல், போலியான பெருமைகளைப் பேசுகிறார் கள். தங்களையே உயர்த்திக் கற்பனைகளை வளர்த்துக் கொள்கிறார்கள். கூரை ஏறிக் கோழி பிடிக்கக்கூடத் தெரியாத இவர்கள், சொர்க்கத்தைக் கைப்பற்றப் போவதாகத் திட்டமிடு கிறார்கள்.

வீட்டில் வயதான தாயை, மனைவியை, குழந்தைகளை அதட்டி, மிரட்டி, விரட்டிக் கொண்டு இருப்பதிலேயே இவர்கள் சுகம் காண்கிறார்கள். ஆள நினைத்தது உலகை. ஆனால், அதற்கான தீவிரம் இல்லாததால், இந்த மூடர்களால் வீட்டைத் தாண்டிப் போக முடிவதில்லை.

சிலர் உலகையே வென்றுவிடும் ஆவலுடன் முயற்சிகளை ஆர்ப்பாட்டமாகத் துவங்குவார்கள். குறுக்கே இரண்டு தடைகள் வந்துவிட்டால் போதும்... 'எனக்கெங்கே இது கிடைக்கும்?' என்று அப்படியே சோர்ந்துபோய் உட்கார்ந்துவிடுவார்கள்.

உங்களுக்குத் தேவையானது எது என்பதை நீங்கள் தீர்மானித்துவிட்டால், அதற்கெதிரான எண்ணங்களையெல்லாம் முதலில் களையுங்கள். உங்கள் விருப்பத்தையும் சக்தியையும் ஒருமுகப் படுத்துங்கள்.

லென்ஸ் மூலம் ஒளியை ஒருமுகப்படுத்தும்போது, அது காகிதத்தையே பொசுக்குவதை நீங்கள் கவனித்திருக்கலாம். உங்கள் தீவிரமான எண்ணங் களும் அப்படித்தான். எப்பேர்ப்பட்ட தடையையும் துளைத்து, நீங்கள் விரும்பியதைக் கொண்டுவந்து கொடுக்கும்.

உண்மையான உழைப்பு என்பது எண்ணங்களில் தீவிரமும், செயல்களில் முழுமையான ஈடுபாடும் கொண்டது. தனக்குத் தேவையானதை அடைவதற்காகத் திட்டமிட்டுச் சலிப்பில்லாமல் செயலாற்றுவது.

நெருப்பின் சூட்டை அனுபவித்தால்தான், தண்ணீரின் குளுமையை உணர்ந்து ரசிக்க முடியும். உழைப்பின் வியர்வையை உணர்ந்தவனால்தான், ஓய்வின் அருமையை அனுபவிக்க முடியும். உழைக்காமல் எடுத்துக்கொள்ளும் ஓய்வுக்குப் பெயர் சோம்பேறித்தனம்.

அடிமையாக வாழாமல் நீங்கள் ஆள நினைத்தால், சற்றும் தளராமல் ஒவ்வொரு கணமும் முழுமையான தீவிரத்தோடு செயலாற்றத் தயாராக இருக்க வேண்டும். விழித்திருந்தாலும் உறங்கப் போனாலும் இருபத்து நான்கு மணி நேரமும் இந்தத் தீவிரம் மட்டும் குறையாமல் உங்களுக்குள் தீ போல் தகதகவென்று எரிய வேண்டும்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"பெரிதாக ஆசைப்பட்டால்தானே ஏமாற்றம்... கொஞ்சம் கொஞ்சமாக ஆசையைப் பூர்த்தி செய்தால்?"

"வான்கா என்ற மிகச் சிறந்த ஓவியர் இருந்தார். தான் அழகற்றவன் என்ற எண்ணம் அவரை வாட்டியது. அதனாலேயே ஓவியங்களையெல்லாம் மிக அழகாகத் தீட்டி மகிழ்ந்தார்.

எந்தப் பெண்ணும் அவர் தோற்றத்தை விரும்பமாட்டாள் என்பதால், அவர் பணம் கொடுத்துப் பெண்களை வரவழைத்து, உல்லாசமாக இருப்பது வழக்கம்.

அப்படி அவரைச் சந்தோஷப்படுத்த வந்த ஒரு பெண்ணுக்கு, 'இவ்வளவு பணத்தை வாங்கிக்கொண்டு, ஒரு வார்த்தைகூட இவரைப் புகழாமல் எப்படிப் போவது?' என்றொரு குற்ற உணர்வு வந்துவிட்டது.

அதனால் வான்காவிடம், 'உங்கள் காதுகள் மிகவும் அழகாக இருக்கின்றன' என்றாள்.

வான்காவுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. 'தன் தோற்றத்தைப் புகழ்ந்து முதன்முறையாகப் பேசிய பெண்ணுக்கு ஏதாவது பரிசு தரவேண்டும்' என்று விரும்பினார்.

அந்தப் பெண்ணுக்கு மறுநாள் பரிசு வந்து சேர்ந்தது. பிரித்ததும், அவள் அதிர்ந்து பதறிக்கொண்டு அதைக் கீழே எறிந்தாள்.

'நீ ரசித்த காதுகள் இதோ' என்று தன் காதுகளையே வெட்டி எடுத்து அனுப்பியிருந் தார் வான்கா.

முழுமையாக ஆசைப் படாமல், பகுதிகளாக ஆசைப்பட்டால், அவை கிடைத்ததும் அதிர்ச்சியும் ஆயாசமும்தான் மிச்சமாகும். உங்கள் ஆசை முழுமையான தாகவே இருக்கட்டும்!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

யாரோ ஒருவன் உங்களுக்கு ஒரு துன்பத்தைத் தந்துவிட்டான். அதனால், அவன் உங்களுக்கு எதிரியாகிவிட்டான். குறைந்தபட்சம் அதே அளவு துன்பத்தை அவனுக்கு நீங்கள் உண்டாக்கவில்லை என்றால், அவனிடம் தோற்றுவிட்டதாக நீங்கள் நினைக்கிறீர்கள். எனவே, அந்த அவமானத்தைக் களைய, அவனைப் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்று சபதம் போடுகிறீர்கள். அதற்காக வரிந்துகட்டிக்கொண்டு உங்கள் சக்தியைச் செலவழிக்கிறீர்கள். அதைத்தான் வீரம் என்று கொண்டாடுகிறீர்கள்.

தனி மனிதர்களிடம் ஆரம்பிக்கும் இந்த வேகம் உருண்டு திரண்டு குடும்பப் பகை, சமூகப் பகை, நாட்டுப் பகை என்று விரிவடைந்துகொண்டே போய்விட்டது. பழிவாங்குவது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட கலாசாரமாகவே இன்று மாறிவிட்டது.

இப்போது யார் அதிக சக்தியோடு விளங்குகிறார்கள்... நீங்களா, உங்களால் எதிரி என்று பார்க்கப்படுகிறவரா?

ஒரு நாளில் யாரைப் பற்றி அதிகக் கவனமாக இருக்கிறீர்கள்... உங்களுக்கு வேண்டியவரைப் பற்றியா? இல்லையே! உங்கள் எதிரியைப் பற்றித்தானே? உங்கள் சந்தோஷத்தை ஒரு கணத்தில் களவாடிக்கொண்டு போக முடிகிற அளவுக்கு நீங்களே அல்லவா அவருக்கு அந்தஸ்து தந்துவிட்டீர்கள்..!

அவரிடம் அடிமையாகிவிட்டவர் போல், உங்கள் சிந்தனை எப்போதும் அவர் பின்னால் அல்லவா போகிறது? அன்பானவர்களுக்கு உங்கள் இதயத்தில் இடம் கொடுத்தீர்களோ இல்லையோ... நீங்கள் எதிரி என்று முடிவுகட்டியவர் களைக் கூப்பிட்டு உங்கள் மனதின் உள்ளே சிம்மாசனம் போட்டு உட்காரவைத்து விட்டீர்கள்!

ஆக, உங்கள் எதிரிக்கு அதிக முக்கியத் துவம் கொடுத்திருப்பது வேறு யாரோ அல்ல. நீங்களேதான்! அவருக்கு உங்கள் இதயத்தில் இடம் கொடுத்ததன் மூலம் நீங்களே அல்லவா உங்களுக்கு மிகப் பெரிய துரோகியாக ஆகிவிட்டீர்கள்!

யாரைப் பழிவாங்க வேண்டுமென்று நினைத்தீர்களோ, அந்த நபர்தான் உண்மையில் அமைதியாக உங்களைப் பழிவாங்கிக்கொண்டு இருக்கிறார் என்பதை நீங்கள் எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா?

வெளிநாட்டுக்கு வேலை தேடிப் போன ஒரு நேபாளி, ஒரு பாகிஸ்தானி, ஓர் இந்தியன் மூவரும் ஒன்றாகக் குடியிருந்தார்கள். அந்த நாட்டில் மது அருந்தக் கூடாது என்பது கடுமையான சட்டம்! இந்த மூவரும் ரகசியமாகக் குடித்துக்கொண்டு இருந்த நேரத்தில், காவல் துறையினர் சடாரென்று சுற்றி வளைத்தனர். சட்டத்தை மீறியதற்காக ஆளுக்கு இருபது கசையடிகள் தரப்பட வேண்டுமென்று தீர்ப்பு வழங்கினார் நீதிபதி.

கூடவே, “இன்றைக்கு என் நான்காவது மனைவியின் பிறந்த நாள். அதனால், தண்டனையில் உங்களுக்கு ஏதாவது சலுகை வேண்டுமானால் கேளுங்கள், தருகிறேன்!” என்று அறிவித்தார்.

“கசையடி கொடுப்பதற்கு முன், என் முதுகில் ஒரு தலையணை கட்டிக்கொள்ள அனுமதிக்க வேண்டும்” என்று கேட்டான், நேபாளி. அப்படியே கட்டப்பட்டது. எட்டு கசையடிகள் வரை தாக்குப் பிடித்த தலையணை அப்புறம் பிய்ந்துபோனது. மிச்சமிருந்த பன்னிரண்டு கசையடிகளில் அவன் முதுகுத் தோல் உரிந்தது.

இதைப் பார்த்துவிட்டு, “என் முதுகில் இரண்டு தலையணைகள் கட்டிக் கொள்ள அனுமதியுங்கள்!” என்றான், பாகிஸ்தானி.

“உனக்கு?” என்றார் நீதிபதி இந்தியனைப் பார்த்து. “என் தண்டனையை இரட்டிப்பு ஆக்குங்கள். ஆனால், என் முதுகில் இந்த பாகிஸ்தானியைக் கட்டுங்கள்!” என்றான் இந்தியன்.

சும்மா தமாஷுக்குச் சொல்லப்பட்ட கதைதான் இது. ஆனால், அடுத்தவருக்கு வலியை ஏற்படுத்துவதுதான் சந்தோஷம் என்று குதர்க்கமாக யோசிக்கும்போது நம் வாழ்க்கையின் நோக்கம் சிதைந்து போகிறது என்பதை விளக்குவதற்காக இதைச் சொன்னேன். பழிவாங்கும் உணர்ச்சி என்பது ஒரு நோய். இது உள்ளே புகுந்துவிட்டால், உங்களையே தின்று, ஒன்றுமில்லாதவராக ஆக்கி விடும்.

எதிரி வெளியில் இருந்தாலாவது அவரைச் சமாளிப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. அவர் உங்களுக்குள்ளேயே உட்கார்ந்து ஆட்டுவிக்க ஆரம்பித்து விட்டால், அதன் பின் மலையிலிருந்து உருட்டிவிடப்பட்ட கல்லும் உங்கள் வாழ்க்கையும் ஒன்றுதான். சரசரவென விழுந்து உருண்டு முட்டி மோதி, அதல பாதாளத்துக்கு இழுத்துப் போய்விடும்.

பிறகு, உங்கள் சந்தோஷத்தை அழிப் பதற்கு வெளியிலிருந்து இன்னொரு எதிரி எதற்கு? நீங்களே போதுமே!

மாறாக, உங்கள் சந்தோஷத்தை வெளிச் சூழ்நிலைகளுக்குப் பணயம் வைக்காமல், உள்ளே அமைதியாக இருக்கக் கற்றுக்கொண்டால், உங்கள் திறமை முழுமையாக வெளிவரும். வெற்றிகள் உங்களைத் தேடி வரும்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“பிரச்னையை எதிர்கொள்ளும்போது கிடைக்காத தீர்வு பிற்பாடு யோசிக்கும்போது கிடைக்கிறதே, எப்படி?”

“எப்போது விதைக்க வேண்டும், எப்போது உழ வேண்டும், எப்போது களை எடுக்க வேண்டும், எப்போது அறுவடை செய்ய வேண்டும் என்று எல்லாவற்றுக்கும் குறிப்பிட்ட நேரம் உண்டு. அப்படி உரிய நேரத்தில் எடுக்காமல், காலம் தாழ்த்தி எடுக்கும் முடிவுகள் சரியாக இருந்தாலும் அவற்றால் பலன் இல்லை.

பிரச்னையை எதிர்கொள்ளும்போது மூளை ஸ்தம்பித்துப் போவது ஏன் என்று யோசியுங்கள்!

நீங்கள், மனம் என்றாலே சிந்திக்கும் கருவி என்று தவறாக நினைத்து, அப்படியே அதை வளர்த்துவிட்டீர்கள் சதா சர்வ காலமும் அது எதையாவது சிந்தித்துக்கொண்டே இருப்பதால், நூற்றுக்கணக்கான யோசனைகள் இங்கும் அங்குமாகப் பூச்சி பறப்பது போல் தறிகெட்டு ஓடிக்கொண்டே இருக்கின்றன.

அப்படி இல்லாமல், மனதை முழுமை யான விழிப்பு உணர்வுடன் இயங்கப் பழக்கிவிட்டீர்கள் என்றால், இந்தக் குழப்பமெல்லாம் இருக்காது.

கண்ணாடியின் மீது அழுக்கைப் பூசி விட்டுப் பார்த்தால், பிம்பம் எப்படித் தெளிவாகத் தெரியும்?

மனதைத் தெளிவாக வைத்திருக்க ஒரே வழி – முறையான தியானம்தான்!”

பெரும்பாலானவர்களைக் கவனித்து ஓர் ஆராய்ச்சி செய்ததில், அவர்கள் எட்டு மணி நேரம் வேலை செய்தால், அதில் அதிகபட்சம் இரண்டு அல்லது மூன்று மணி நேரத்துக்கான திறமைதான் வெளிப்படுகிறது என்று தெரிய வந்திருக்கிறது.

பேனாவை எடுப்பதும், திருகுவதும், கீழே வைப்பதும், தேவையில்லாமல் திரும்பிப் பார்ப்பதும், நாற்காலியை நகர்த்துவதும், விரல்களின் நுனிகளை ஆராய்ச்சி செய்வதும் போன்ற குழப்பமான செய்கைகளிலேயே பெரும்பாலோர் தங்களை அறியாமலேயே நேரத்தை வீணடிக்கிறார்கள்.

உங்களுக்குத் தெரியுமா... உடலின் இந்தக் குழப்பமான செய்கைகளெல்லாம் தெளிவற்ற மனதின் வெளிப்பாடுதான். இப்படிச் சிந்தனைகளை அலைக்கழிக்கும் செயல்களில் சக்தியைச் செலவிடாமல், அதை ஆக்கப்பூர்வமாகப் பயன்படுத்தினால், பெரும் மாற்றங்கள் நிகழக்கூடும். எந்த வேலையும் கடினமாகத் தோன்றாது. அந்தப் பணி, வழக்கத்தைவிடப் பாதி நேரத்திலேயே முடிந்துவிடக்கூடும்.

சரி, மனம் எதனால் தெளிவற்று இருக்கிறது?

கோபம், படபடப்பு, வருத்தம், சந்தோஷம் என எல்லாமே உங்கள் உணர்ச்சிகளின் வெவ்வேறு வெளிப்பாடுகள்தான். பெரும்பாலும், உங்கள் உணர்ச்சிகள் வெளிச் சூழ்நிலைகளால்தான் தூண்டப்படுகின்றன. அவற்றைக் கட்டுப்படுத்த முடியாதபோது, இந்த உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்த முடியாமல் அலைக்கழிக்கப்படுகிறீர்கள்.

பதவி உயர உயர, எதிர்பாராத வெளிச் சூழ்நிலைகளை அதிகம் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். ஒரு சாதாரண குடிமகனைவிட, தேசத்தின் முதல் குடிமகனான ஜனாதிபதியும், பிரதமரும்தான் வெளிச் சூழ்நிலைகளை அதிகம் சந்திக்கிறார்கள்.

அமைதியில்லாத மனதுக்குச் சின்ன மணல்கூடப் பெரும் பாறையாகத் தெரியும். மனம் தெளிவாக இருக்கும் போது, தடைகளைக் கூடப் படிகளாக மாற்றிக்கொண்டு மேலே உயர முடியும். இதற்கு உதாரணமாக ஒரு வேடிக்கைக் கதை சொல்லலாம்.

ஒரு குருவிடம் பல சீடர்கள் இருந்தனர். அவர்களில் இருவருக்குப் புகை பிடிக்கும் பழக்கம் இருந்தது. ஆசிரமத்தில் புகைக்க முடியாததால், தியானத்தில் மனம் செல்லாமல் அவர்கள் தவித்தார்கள்.

இப்படிக் கஷ்டப்படுவதைவிட, 'இங்கேயே நாங்கள் புகை பிடிக்கலாமா?' என்று குருவிடமே கேட்டுவிட்டால் என்ன என்று இருவரும் யோசித்தார்கள்.

மறு நாள், நண்பர்களில் ஒருவன் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு தோட்டத்தில் உட்கார்ந்திருந்தான். அடுத்தவன் புகை பிடித்தபடி வந்தான். அவனைப் பார்த்ததும் இவன் பதறி எழுந்தான்.

"அதெப்படி நீ புகை பிடிக்கிறாய்? நான் கேட்டபோது குரு அனுமதி மறுத்தாரே?"

"நீ அவரிடம் என்ன கேட்டாய்?"

"தெளிவாகவே கேட்டேனே... 'தியானம் செய்யும்போது சிகரெட் பிடிக்கலாமா?' என்று கேட்டேன். 'கூடவே கூடாது!' என்றாரே?"

"நான் அதையே கொஞ்சம் மாற்றிக் கேட்டேன். 'புகை பிடிக்கும்போது தியானம் செய்யலாமா?' என்று கேட்டேன். 'தாராளமாக!' என்று அனுமதி அளித்துவிட்டார்" என்று சிரித்தான் அடுத்தவன்.

மனம் அமைதியாக இருந்தால் எதுவுமே பிரச்னையாகத் தெரியாது.

எப்போதெல்லாம் அமைதியை உணர்ந்திருக்கிறீர்கள்?

வயிறார உண்டு முடித்தவர்களைப் பாருங்கள். களைப்பில் படுத்திருப் பார்கள். 'நிம்மதிக்காகக் குடிக்கிறேன்' என்று சிலர் மது அருந்திவிட்டு நினைவில்லாமல் கிடப்பார்கள். இந்த மாதிரி செயலற்று இருப்பதல்ல அமைதி.

உள்ளே அமைதியாக இருந்தால், மனம் முழு விழிப்பு உணர்வுடன் எதையும் சந்திக்கத் தயாராயிருக்கும்.

பச்சைப் பசேலென்ற ஒரு மலையைப் பார்த்துக்கொண்டு இருக்கிறீர்கள். அப்போது மனம் அமைதியாக இருக்கும். ஆனந்தமாக இருக்கும். திடீரென்று மரங்களின் மறைவிலிருந்து நீண்ட தந்தங்களுடன் ஒரு யானை வெளிப்பட்டால், அத்தனை அமைதியும் போய், படபடப்பு ஏறும். என்ன செய்வது என்று புரியாமல் தடுமாறுவீர்கள் அல்லவா?

ஆனால், உள்ளே நீங்கள் அமைதியாக இருந்தால், யானையைப் பார்த்தவுடன் மனம் ஸ்தம்பித்து நிற்காது. உடனடியாக உங்களைக் காப்பாற்றிக் கொள்ளச் செயல்படுவீர்கள். பொதுவாக எப்போதெல்லாம் உங்கள் அமைதி கலைக்கப்படுகிறது?

நீங்கள் எதிர்பார்த்தபடி மற்றவர்கள் நடந்துகொள்ளாதபோது, கோபம் வருகிறது. ஆத்திரம் வருகிறது. எங்கே மனிதர்கள் எதிர்த்துக் கேள்வி கேட்காமல், உங்களுக்குப் பணிந்து உங்கள் செய்கைகளைச் சகித்து ஏற்றுக்கொள்கிறார் களோ, அங்கே அமைதியாக உணர்கிறீர்கள். அதாவது, நீங்கள் அமைதியாக இருக்க வேண்டுமென்றால், உங்கள் அகங்காரத்துக்குத் தீனி போட வேண்டி இருக்கிறது.

புரிந்து கொள்ளுங்கள்... உங்கள் அகங்காரத்தையும் ஆணவத்தையும் ஆதரிப்பவர் கள் உண்மையில் உங்கள் நண்பர்கள் அல்ல. உங்களை அறியாமையிலேயே வைத்திருந்து, உங்கள் வளர்ச்சிக்குத் தடை போடும் மோசமான எதிரிகள்!

நீங்கள் உள் சூழ்நிலையை அமைதியாக வைத்திருக்கத் தவறியதால்தான் இத்தனைக் குழப்பங்களும்! உங்களுக்குள் இருக்கும் சக்தியை ஒழுங்காகக் கட்டுப்படுத்தி உங்கள் விருப்பப்படி செயல்படுத்தக் கற்றுக்கொள்ளாததால்தான் இத்தனை அவதிகளும்!

நீங்கள் உள்ளே முழு அமைதியாகவும், வெளியே வெகு சுறுசுறுப்பாகவும் இருக்க முடியும்.

உள்ளே அமைதியாக இருக்க என்ன செய்ய வேண்டும்? முறையான யோகாவாலும், தியானத் தாலும் உங்கள் சக்தியைச் சிதறாமல், கட்டுக்கோப்பில் வைத்திருக்க முடியும். மனதை அப்படி ஒரு கட்டுக்கோப்பில் வைத்திருந்தால்தான், உங்கள் திறமை முழுமையாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும்!.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“எதிரியைச் சமாளிப்பது எப்படி?”

“ஓர் இரும்புத் துண்டத்தை வளைக்கப் பார்க்கிறீர்கள். இயலவில்லை. அதை வலுவானது என்று சொல்கிறீர்கள். உங்களைவிட வலுவுள்ள வேறு யாராவது அந்த இரும்பை வளைக்க முடியும். இயந்திரத்தில் கொடுத்தால் அதைத் துண்டம் துண்டமாக உடைக்கக்கூட முடியும்.

எதிர்ப்பால் பலம் காட்டுகிற எல்லா விஷயங்களுமே இப்படித்தான். அதற்கும் மேலே இன்னொரு பலம் இருக்கும். ஆனால்,

எதிர்க்காத ஒன்றை எப்பேர்ப்பட்ட சூப்பர்மேன் வந்தாலும் எப்படி வளைக்க முடியும்? எப்படி உடைக்க முடியும்?

எனவே, எதிரி என்று நினைப்பவரைவிட நீங்கள் சக்தி மிகுந்தவராக வேண்டுமென்றால், அவரையும் அன்போடு ஏற்றுக் கொள்ளப் பழகுங்கள். அது மேன்மையானது. உன்னதமானது. எதிர்ப்பதைவிட சக்தி மிகுந்தது!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

### சத்குரு ஜக்கி வாசுதேவ்

உங்கள் ஊரில் பகவத் கீதையையோ, பைபிளையோ, குரானையோ யாராவது எரித்துவிட்டால், என்ன நேரும்? பதிலுக்கு நகரத்தையே சிலர் எரித்துவிடுவார்கள்.

உங்கள் கடவுள் சொன்னதாக நீங்கள் கொண்டாடும் ஒரு அச்சிட்ட புத்தகம், அதே கடவுளால் படைக்கப்பட்ட சக மனிதனை விட மேலானதாகத் தோன்றிவிடுகிறது... ஏன்?

உங்களிடம் கடவுள்களைப் பற்றிப் பேசியவர்கள் உணர்ச்சிகரமாக அந்தப் புத்தகங்களைப் பற்றி சொல்லிச் சொல்லி, அவற்றைப் புனித நூல்கள் என்று உங்களை நம்ப வைத்திருக்கிறார்கள்.

கடவுள்கள் சொல்லிவிட்டுப் போனதாக எழுதப்பட்டிருக்கும் அந்த நூல்களில் புனிதம் இல்லை என்று நான் சொல்லவில்லை. அவை உண்மையில்லை என்றும் நான் மறுக்கவில்லை. ஆனால், அவற்றிலிருந்து ராமனையோ கிருஷ்ணனையோ ஏசுவையோ நீங்கள் ஒரு முன்னோடியாக வைத்து, வாழ்க்கையை முழுமையாகத் தெரிந்துகொள்ளும் உங்கள் ஆர்வத்தை வளர்த்துக்கொள்ளலாம். அவ்வளவுதான்!

மற்றபடி, அவர்கள் சொன்னதை வாசித்துவிட்டாலே நீங்கள் உயர்ந்து விடுவீர்கள் என்ற நம்பிக்கை மூடத்தனமானது என்றுதான் சொல்கிறேன். அப்படியென்றால், அவர்கள் எதற்காக அவற்றைச் சொன்னார்கள்?

ஒரு நல்ல ஜோக்கைக் கேட்கிறீர்கள், ஒரு நல்ல புத்தகத்தைப் படிக்கிறீர்கள், ஒரு சுவாரஸ்யமான சினிமாவைப் பார்க்கிறீர்கள்... உடனே என்ன செய்வீர்கள்? நீங்கள் ரசித்ததை யாரிடமாவது பகிர்ந்துகொள்ள வேண்டுமென்ற தாகம் உங்களுக்குள் எழுகிறது அல்லவா? ஆனந்தமானதோர் அனுபவத்தைப் பெறும்போது, அதை நெருக்கமானவர்கள் யாரிடமாவது பகிர்ந்து கொள்ளும் தவிப்பு உண்டாகிறதல்லவா? உங்கள் மதப் புத்தகங்களும் அப்படி உருவானவைதான்.

யாரோ சிலர், மிக அற்புதமான அனுபவங்களைப் பெற்றார்கள். அதை உங்களுடன் பகிர்ந்துகொள்ள விரும்பினார்கள். அவற்றைப் புத்தகமாக

எழுதினார்கள். சுலோகமாகச் சொல்லி வைத்தார்கள். அல்லது வேறு ஏதோ ஒரு வடிவத்தில் அதைப் பதிவு செய்தார்கள்.

அவை உங்கள் உயிரும் வாழ்க்கையும் எவ்வளவு மேன்மையாக அமைய வேண்டும் என்றுதான் சொல்ல முற்பட்டிருக்கின்றன.

அதை மறந்துவிட்டு, அடிப்படை நோக்கத்தையே செயலிழக்கச் செய்யும் விதமாக, உடன் வாழும் மனிதரையே எரித்து விடுகிறீர்களே... இது எப்பேர்ப்பட்ட முட்டாள்தனம்?

ராமனோ, கிருஷ்ணனோ, நபிகளோ, ஏசுவோ தங்கள் புத்திசாலித்தனத்தைப் பயன்படுத்தி ஆழமான உண்மைகளை அனுபவங்களால் உணர்ந்துகொண் டார்கள். ஆனந்த வாழ்க்கையை வாழ்ந்தார்கள். அதனால்தான் உயர்ந்த நிலைக்குப் போனார்கள்.

ஆனால், நீங்கள்? பகவத்கீதையைப் படித்து முடித்த துமே, ஞானம் பெற்றுவிட்டதைப் போல நினைத்துக்கொள்கிறீர்கள். உண்மையைப் புரிந்துகொண்டவர் போல் கதை அளக்கிறீர்கள். இது எப்படி இருக்கிறது தெரியுமா?

சங்கரன் பிள்ளை வெளியூரில் ஒரு கடற்கரைக்குப் போயிருந்தார். அங்கே அற்புதமான தென்றல் வீசிக்கொண்டு இருந்தது. வேறெங்கும் அவருக்கு அத்தனை சந்தோஷம் கிடைத்ததில்லை. தனக்குக் கிடைத்த அனுபவத்தைத் தன் மனைவியிடம் உடனே பகிர்ந்து கொள்ள விரும்பினார் அவர்.

ஆனால், அவர் மனைவி அப்போது சிகிச்சைக்காக மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டிருந்தாள்.

சங்கரன் பிள்ளை ஒரு சவப்பெட்டியை வாங்கினார். அதில் கொஞ்சம் கடற்கரை மணலை நிரப்பி, காற்றையும் அப்படியே பிடித்து பெட்டியை மூடி சீல் வைத்தார்.

‘நான் அனுபவித்த தென்றலை நீயும் அனுபவிக்க, உனக்கு இதைக் காதலுடன் அனுப்பி வைக்கிறேன். இந்தப் பெட்டிக்குள் படுத்து, அழுத்தமாக மூடிக்கொள். கடற் கரையில் அமர்ந்து காற்றை ரசிக்கும் அனுபவம் உனக்கும் கிடைக்கும்’ என்று ஒரு குறிப்பை எழுதி, அந்தப் பெட்டியை தன் மனைவிக்கு அனுப்பினார்.

அப்புறம் அவர் என்ன கதி ஆகியிருப்பார் என்று சொல்ல வேண்டுமா?

புனிதப் புத்தகங்களைப் படித்துவிட்டதாலேயே அதே அனுபவங்கள் உங்களுக் குக் கிடைத்துவிட்டதாக நீங்கள் அறிவித்துக்கொள்வதற்கும், சங்கரன் பிள்ளை அனுப்பிய பெட்டிக்குள் போய்ப் படுத்துக்கொண்டு கடற்கரைத் தென்றலை அனுபவிப்பதற்கும் பெரிய வித்தியாசம் இல்லை.

அவருக்குக் கிடைத்த அனுபவத்தை உண்மையில் அனுபவிக்க வேண்டுமானால், அந்தக் கடற்கரைக்கு எப்படிப் போவது என்பதை அல்லவா

நீங்கள் தெரிந்துகொள்ள முற்பட வேண்டும்?

மகான்கள் தங்கள் வாழ்க்கையில் நேர்ந்த அற்புதமான அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ள பதிவுசெய்துவிட்டுப் போயிருப்பவையே மறை நூல்கள்.

அந்தப் புனித நூல்களை மனப்பாடம் செய்து ஒப்பிப்பதல்ல வளர்ச்சி! அவர்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பதை உங்கள் அனுபவத்தால் உணர முயலுங்கள்.

உங்கள் வாழ்க்கையை நீங்களே வாழ ஆரம்பியுங்கள். உண்மையை நீங்களே உய்த்து உணர முற்படுங்கள்.

சரி, உண்மையைப் புரிந்துகொள்ள முதலடியை எங்கே வைப்பது?

சொல்கிறேன்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“ஆசையினால்தானே பிரச்னைகள்?”

“எதற்காவது ஆசைப்பட்டீர்களென்றால் அது தடையில்லாமல் கிடைக்க வேண்டும் என்ற அச்சம் உங்களைச் செலுத்துகிறது. உங்களால் கையாள முடியாத சூழ்நிலைகளை எதிர்கொண்டால், அவற்றைப் பிரச்னைகள் என்று முத்திரை குத்திவிடுகிறீர்கள். உண்மையில் பிரச்னை என்பது வெளியில் இல்லை. உங்கள் மனதில்தான் இருக்கிறது.

உணவு கிடைக்கவில்லையா? இன்றைக்கு ஏகாதசி என்று நினைத்துக் கொள்ளுங்கள். அப்புறம் ஏது பிரச்னை?

தடைகளே இல்லை என்றால், வாழ்க்கை சப்பென்று அல்லவா இருக்கும்.

ருசியே தெரியாமல், உணவையெல்லாம் நேரே வயிற்றுக்குள் செலுத்துவதையா விரும்புவீர்கள்?

வாழ்க்கையை ருசித்து அனுபவிக்காமல், பலன்களை மட்டும் பரிசாகக் கேட்பது என்ன நியாயம்?"

## அத்தனைக்கும் ஆசைப்படு

உண்மையைப் புரிந்துகொள்ள முதலடியை எங்கே வைப்பது?

நீங்கள் பக்கத்துத் தெருவுக்குப் போக விரும்பினாலும் சரி, நிலவுக்கே போக விரும்பினாலும் சரி... உங்கள் பயணத்தை எங்கே துவக்க முடியும்? இப்போது நீங்கள் இருக்கும் இடத்திலிருந்துதானே? அங்கிருந்து முதலடி, அதற்கப்புறம் அடுத்த அடி என்றுதானே பயணப்பட முடியும்?

ஆன்மிகப் பயணத்துக்காக இருக்குமிடத்தை விட்டு எழுந்து நிற்கும் போதே, சொர்க்க வாசலில் நின்றிருப்பதாக நீங்களாக நினைத்துக்கொண்டால், அது உங்களையே ஏமாற்றிக்கொள்ளும் கற்பனையாக இருக்க முடியுமே தவிர, உங்கள் பயணம் துவங்கவே துவங்காது.

உங்களுக்குத் தெரியாததைத் தெரியாது என்று தைரியமாக ஒப்புக்கொள்ளுங்கள். வேதாந்தங்கள் புரிந்துவிட்டதாக வீணான கற்பனைகளை வளர்த்துக்கொள்ளாதீர்கள்.

எந்த வண்ணங்களை அணிய வேண்டும், எந்த குணங்களைக் கொண்டிருக்க வேண்டும், எந்த வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்துப் பேச வேண்டும், எந்த உயரத்தைத் தொட வேண்டும்... இப்படி உங்களுக்கான ஒவ்வொன் றையும் உங்கள் ஆசைதான் முடிவு செய்கிறது.

எட்டிப் பிடித்து விட்டால் வெற்றியைக் கொண்டாடுவீர்கள். முடியவில்லையென்றால், வேதாந்தம் பேசுவீர்களா?

சங்கரன் பிள்ளை வேதாந்த வகுப்புகளுக்குத் தொடர்ந்து போய் வந்தார். 'எல்லாமே மாயை. நீ என்றும், நான் என்றும், அவன் என்றும் எந்த வித்தியாசமும் கிடையாது. எல்லாமே ஒன்றுதான். நீதான் நான்... நான்தான் நீ!' என்றெல்லாம் கேட்டுக் கேட்டு தான் முற்றும் கற்றுத் தெளிந்துவிட்டதாக நினைத்தார் சங்கரன் பிள்ளை. தெருவில் நடக்கும் போது, தன்னை ஒரு வேதாந்தியாக நினைத்து, தலையைச் சற்று தூக்கி வைத்தே நடந்தார்.

பசித்தது. சிற்றுண்டிச் சாலைக் குச் சென்றார். வேண்டியதை எல்லாம் வாங்கிச் சாப்பிட்டார். ஏப்பம் விட்டார். கல்லாவில் உட்கார்ந்திருந்தவரைப் பார்த் தார். 'அவன்தானே நான்.. நான் தானே அவன்!' என்று பில்லைக் கொடுக்காமல் நடந்தார்.

அவரைத் துரத்திப் பிடித்தார் கள். நீதிமன்றத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள். 'ஐயா, நீதிபதியே! எல்லாமே நான். எதுவுமே நான் இல்லை. நீங்களும் என்னுடன்வேதாந்த வகுப்புகளுக்கு வந்திருந்தால் இதைப்புரிந்துகொண்டு இருப்பீர்கள். இந்த வழக்கே வந்திருக்காது. நான்

சாப்பிட்டதற்கு எனக்கு நானே எதற்குக் காசு கொடுக்க வேண்டும்?'

சங்கரன் பிள்ளை இந்த வழக்கைக் குழப்பப் பார்ப்பதாகச் சொல்லி, 'இந்த ஆளுக்குப் பத்துக் கசையடி கொடுங்கள்' என்று உத்தரவிட்டார் நீதிபதி.

கசையடி விழ ஆரம்பித்ததும், சங்கரன் பிள்ளை வலியில் துள்ளினார்.

'உங்களுக்கு வேதாந்தமே புரியவில்லை. செய்யாத தவறுக்காக என்னை ஏன் அடிக்கிறீர்கள்?' என்று புலம்பினார்.

'உங்களை யார் அடித்தார்கள்? கசையடி கொடுப்பவன் வேறு, நீங்கள் வேறு அல்லவே? அவன் தன்னைத் தானே அடித்துக் கொள்கிறான்!' என்றார் நீதிபதி. 'இல்லை, நான் வேதாந்தி இல்லை. சாப்பிட்டதற்குக் காசு கொடுத்துவிடுகிறேன். கசையடிகளை நிறுத்துங்கள்' என்று மண்டியிட்டார், சங்கரன் பிள்ளை.

இப்படித்தான் மனதைத் தெளிவாக வைத்துக்கொள்ளத் தெரியாதவர்கள் தங்களின் நினைவாற்றல், சிந்தனை, கற்பனை, கவனம், உறக்கம், வக்கிரம், படித்தது, புரிந்தது, புரியாதது என்று மனதின் வெவ்வேறு அடுக்குகளை எல்லாம் ஒன்றாகப் போட்டுக் குழம்பிக் கொள்கிறார்கள்.

இந்த பூமியில் கடவுள் ஒன்பது முறை அவதரித்தாகச் சொல்கிறோம். ஆனால், உங்களைச் சுற்றிக் கவனியுங் கள். அவர் வருகைகளால் ஏதாவது உபயோகமான மாற்றங்கள் நிகழ்ந்திருக் கின்றனவா? யார் வந்தாலும், போனாலும் நீங்கள் வளரத் தயாராக இல்லாதவரை உங்கள் வாழ்க்கையை யாராலும் மாற்ற முடியாது.

மகான்களின் வருகைகள் மட்டும் முழுமையான விழிப்பு உணர்வைக் கொண்டு வர முடியாது. நீங்களாக மாற விரும்பினால் மட்டுமே மாற முடியும். உங்கள் வாழ்க்கையை நீங்களாக வாழக் கற்றுக்கொள்ளாவிட்டால், பத்தாவது முறை கடவுள் வந்தாலும் அர்த்தமில்லை. பத்தாயிரம் முறை மகான்கள் வந்தாலும் புண்ணியமில்லை.

கடவுளுக்காகக் காத்திருக்காதீர்கள். யாரோ சொன்ன வேதாந்தங்களை அப்படியே ஏற்காதீர்கள். மகான்களைப் பற்றிய புத்தகங்களாக இருந்தால்கூட, அவற்றை உந்துசக்தியாக மட்டுமே பயன்படுத்துங்கள். அவற்றையே உங்கள் படிப்பினைகளாக நினைத்து ஓய்ந்து விடாதீர்கள்.

தேவையின்றிச் சேர்ந்திருக்கும் குப்பைகளை விலக்கினால்தான், அங்கே பொக்கிஷங்களை நிரப்ப முடியும். தெரியாது என்று ஒப்புக்கொள்ளும் போதுதான், அகங்காரம் விலகி, தெரிந்து கொள்வதற்கான வாய்ப்பைப் பெற முடியும்!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“மிகைப்படுத்தும் விளம்பரங்கள் இல்லாமல் வியாபாரம் செய்ய முடியாதா?”

“ஒரு குறிப்பிட்ட உணவு விடுதி. பளபள மேஜை. சீருடை அணிந்த பணியாளர்கள். சீரியல் பல்புகள். ஆனால், அங்கே சமைய லில் ஈடுபட்டிருப்பவரோ, சாப் பிடுபவர்களைப் பற்றிய கவலை இன்றி, தரமற்ற பொருட்களை உணவில் சேர்ப்பவர்.

இன்னொரு விடுதி. மின் அலங்காரங்கள் இல்லை. கவர்ச்சிகரமான வார்த்தைகள் இல்லை. ஆனால், அங்கே சமைப்பவரோ, சாப்பிடுபவர்களின் உடல் நலத்தைப் பற்றிய அக்கறை கொண்டவர். தரமற்ற பொருட்களை ஒருபோதும் உணவில் சேர்க்க மாட்டார்.

இரண்டில் எந்த உணவு விடுதிக்கு நீங்கள் போவீர்கள்?

வாடிக்கையாளர் மீது உண்மையான அக்கறையுடன் செயல்படும் விடுதிக்கா? பகட்டான வார்த்தைகளைச் சொல்லி தரமற்ற உணவுகளை விற்கும் விடுதிக்கா?

தரமில்லாத பொருளைத் தயாரித்து, விளம்பரத்தால் ஏமாற்றி, அதை வாடிக்கையாளர் தலையில் கட்டுவது மொத்த உலகத்தையும் கொள்ளையடிப் பதற்குச் சமம்.

விளம்பரம் என்பது உண்மையைச் சொல்வதாக, இன்ன இடத்தில் இன்னது கிடைக்கிறது என்பதை ஜனங்களுக்குத் தெரியப்படுத்தும் அறிவிப்பாக மட்டுமே இருக்க வேண்டும். மக்களை ஏய்த்து விற்பனை செய்வதற்காக இருக்கக்கூடாது. வாடிக்கையாளரையும் தன்னைப்போலவே மதித்தால், குற்ற உணர்வுகள் சேராது. தானாக வியாபாரம் பெருகும். தொழில் நீண்ட காலமும் நிலைத்து நிற்கும்!”

அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

மனவளம்

ஒருவன் தன்னுடைய உண்மையான, முழுமையான திறமையைப் பயன்படுத்தத் தவறுவது சமூகத்துக்கு இழைக்கும் மாபெரும் குற்றம்!

கலைத் துறையைச் சேர்ந்த ஒருவர் என்னைச் சந்தித்தார். ‘ஒரு செல்வந்தனுக்குக் கிடைக்கும் மரியாதையும் மதிப்பும், பிரம்மாவுக்கு இணையான ஒரு படைப்பாளிக்குக் கிடைப்பதில்லையே... ஏன்?’ என்று வருத்தத்துடன் கேட்டார்.

உண்மையில் யார் படைப்பாளி?

படைப்பு ஏற்கெனவே கச்சிதமாக நிகழ்ந்து முடிந்துவிட்டது. இருப்பதையெல்லாம் நீங்கள் இப்படியும் அப்படியுமாக மாற்றி அமைத்துக் கொண்டு இருக்கிறீர்களே தவிர, புதிதாக எதைப் படைத்தீர்கள்? ஒரு விஞ்ஞானக் கதை தெரியுமா?

இன்றைக்கு ஐம்பது வருடங்களுக்குப் பிறகு ஒரு தினம்... உலகத்தின் முக்கிய விஞ்ஞானிகள் எல்லோரும் கடவுளின் முன் ஒன்று கூடினர்.

“மரணத்தைத் தள்ளிப்போடும் மருந்துகளைக் கண்டுபிடித்துவிட்டோம். உயிரை உருவாக்கக் கற்றுவிட்டோம். உணவையும் தண்ணீரையும் தேவையான அளவுக்குத் தயாரித்துவிட்டோம். உலகத்தின் எந்த மூலையில் நடப்பதையும் உடனடியாகக் கவனிக்கும் திறமை பெற்று விட்டோம். கடவுளே, உன் எல்லா வேலைகளையும் இப்போது நாங்களே செய்துகொண்டு இருக்கிறோம். இனிமேல் நீ எதற்கு? பேசாமல் ரிட்டையராகிவிடு!” என்றனர்.

கடவுள் சிரித்தார். “ஏதாவது ஒன்றைப் படைத்துக் காட்டுங்கள். நான் ஓய்வெடுக்கப் போய்விடுகிறேன்’ என்றார்.

விஞ்ஞானி தன் பக்கத்தில் இருந்த களிமண்ணை எடுத்துக் காட்டி, “இதை ஓர் உயிராக்கிக் காட்டட்டுமா?” என்று தலையை நிமிர்த்திக் கேட்டார்.

“அந்தக் களிமண் நான் கொடுத்த தாயிற்றே! முதலில் உங்கள் களிமண்ணை உருவாக்கிக் காட்டுங்கள்” என்றார் கடவுள். விஞ்ஞானிகள் தலை குனிந்தனர்.

இயற்கை கொடுத்ததை ஆதிமனிதன் தனக்குத் தெரிந்தவரை பயன்படுத்தினான். கற்களை ஆயுதங்களாக்கினான். மண்கலங்கள் தயாரிக்கக் கற்றுக் கொண்டான். மரங்களால் வீடுகளை அமைத்தான்.

நீங்கள்? அதே இயற்கை தந்த வேறு பொருட்களை வைத்து வெடிகுண்டுகளையும், அணுமின் நிலையங்களையும் உருவாக்கு கிறீர்கள். ராக்கெட்டுகளாகவும், விண்வெளிக் கலங்களாகவும் அவற்றை மாற்றிப் பயன்படுத்துகிறீர்கள்.

நீங்கள் கண்டுபிடிக்காமல் விட்ட உபயோகங் களை அடுத்து வரும் தலைமுறைகள் கண்டுபிடிக்கும். அவ்வளவுதான்!

பூமி உருவான தினத்திலிருந்தே காற்று இருக்கிறது. பல்வேறு அலைவரிசைகளைத் தனித்தனியே கொண்டு சேர்க்கும் அதிசய குணத்தை

அன்றிலிருந்தே அது தனக்குள் வைத்துக்கொண்டுதான் இருக்கிறது. அதைக் கவனித்துத் தனக்கு உபயோகமாக தொலைக் காட்சியையோ, செல்போனையோ தயாரித்துக்கொள்ள மனிதனுக்குத்தான் பல கோடி வருடங்களாயிற்று!

ஏற்கெனவே இருப்பதைத்தான் உங்களுக்கு வசதியாக விதம்விதமாகத் திருத்துகிறீர்கள். மாற்றி அமைக்கிறீர்கள். பயன்படுத்துகிறீர்கள். மற்றபடி, நீங்கள் புதிதாக எதைப் படைத்துவிட்டதாகப் பெருமை கொள்ள முடியும்?

நீங்கள் ஓவியராக இருக்கலாம். எழுத்தாளராக இருக்கலாம். பாடகராக இருக்கலாம். எந்தக் கலைத் துறையிலும் இருக்கலாம்.

நீங்கள் செய்வது முதலில் உங்களுக்கு ஆனந்தம் தர வேண்டும். அப்போதுதான் உங்கள் திறமையை உங்களுக்கு விருப்ப மான விதத்தில் வெளிப்படுத்த முடியும்.

அப்படி வெளிப்படுத்தும் விதத்தில், மற்றவர்கள் மகிழ்ச்சியோடு இருப்பதற்கும் நீங்கள் உபயோகமாக இருக்கிறீர்களா? பாரமாக அழுத்தும் பிரச்னைகளை மறந்துவிட்டு, சில மணி நேரமாவது அவர்கள் அமைதியாக இருக்க நீங்கள் பயன்படுகிறீர்களா? அது போதும். நீங்கள் சிறந்த படைப்பாளி என்று கொண்டாடப்படுவதை விட அது மேன்மையானது!

உங்களைவிட அடுத்தவர் செல்வாக்கோடு இருந்தால், இருந்துவிட்டுப் போகட்டுமே? உங்களைக் குறைத்து மதிப்பிட்டு விட்டுத்தான் போகட்டுமே?

நீங்கள் எந்த மதத்திலிருந்து வந்தாலும், உங்கள் கடவுள் எப்படி இருக்கிறார்? அவர் மீது பூச்சொரிந்து பூஜிப்பதால், உடனே சலுகைகள் காட்டுவதுமில்லை; அவர் மீது காறித் துப்புவதால், உடனே தண்டனை கொடுப்பதும் இல்லை. போற்றலையும், தூற்ற லையும் பொருட்படுத் தாமல்,அவருடைய செயலை நூறு சதவிகித ஈடுபாட்டோடு தொடர்ந்து செய்கிறார். உண்மையான படைப் பாளிக்கு அதுதானே அழகு?

கலைத்துறை என்றில்லை. எந்தத் துறையானாலும், உங்களுக்கு மட்டுமல்லாது, சுற்றியுள்ளவர்களுக் கும் ஆனந்தமான சூழ்நிலையை உருவாக்கித் தாருங்கள். அன்பைக் குழைத்து முழுமையான ஈடுபாட்டுடன் உங்கள் திறமையை வெளிப்படுத்துங்கள்.

புகழும், செல்வாக்கும் தாமாகவே வந்து சேரும்!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“தெய்வத்தை எங்கே தரிசிக்க முடியும்?”

“ரவீந்திரநாத் தாகூர் சிறந்த கவிஞர். இயற்கையைப் பற்றி, அழகைப் பற்றி, தெய்விகத்தைப் பற்றி மிக அற்புதமான கவிதைகள் எழுதியவர்.

ஒருநாள் அவருடைய மூத்த உறவினர் ஒருவர் தாகூரிடம், ‘மொழியின் மீது உள்ள ஆளுமையால் வார்த்தைகள் உனக்கு வந்து விழுகின்றன. ஆனால், நீ எழுதும் அதே உணர்வுகளை உண்மையிலேயே நீ அனுபவித்திருக்கிறாயா?’ என்று கேட்பார். தாகூர் பதில் சொல்ல இயலாமல் தலை குனிந்தார்.

‘அதற்கு வாழ்க்கையை நீ இன்னும் தீவிரமாக வாழப் பழக வேண்டும்’ என்று அந்த உறவினர் சொல்லிச் சிரித்துவிட்டுப் போய்விட்டார்.

மழை பெய்து ஓய்ந்திருந்த ஒரு மாலை நேரம். சூரிய அஸ்தமனத்தை ரசிக்க, தாகூர் கடற்கரை நோக்கிச் சென்றுகொண்டு இருந்தார். தெருவோரங் களில் ஆங்காங்கே தண்ணீர் அழுக்குக் குட்டைகளாகத் தேங்கிக் கிடந்தது. அதில் கால் வைத்துவிடக்கூடாது என்பதற்காகக் குனிந்து பார்த்தபடி, நடந்து போய்க் கொண்டு இருந்தார் தாகூர்.

திடீரென்று பிரமித்துப் போனார். கடற்கரையில் போய் அவர் கவனித்து ரசிக்க நினைத்த சூரிய அஸ்தமனம் அங்கே ஒரு அழுக்குக் குட்டையில் நிகழ்ந்துகொண்டு இருந்தது. தாகூரின் கண்கள் உணர்ச்சிப் பெருக்கால் ததும்பின. அந்தக் கணமே பிரபஞ்சத்தின் மேன்மையான அர்த்தத்தை உணர்ந்துவிட்ட பரவசம் அவர் முகத்தில் பிரதிபலித்தது. தன் உறவினரின் வீட்டுக்கு ஓடினார். தாகூரைப் பார்த்ததுமே அந்த உறவினருக்குப் புரிந்துவிட்டது. ‘உண்மையை நீ தரிசித்துவிட்டாய். அதை உன் முகத்தில் காண முடிகிறது’ என்றார் அவர்.

இப்படி ஒவ்வொரு சின்ன விஷயத்துக்குள்ளும் தெய்விகம் புதைந்துள்ளது. வாழ்க்கையை முழுமையான தீவிரத்தோடு வாழாததால், நீங்கள்தான் அதைக் காணத் தவறுகிறீர்கள்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

### சத்குரு ஜக்கி வாசுதேவ்

வாழ்க்கையின் ஒவ்வொரு கோணத்தையும், படைப்பின் ஒவ்வொரு ரகசியத்தையும் நுணுக்கமாகக் கவனித்து உருவான கலாசாரம், இங்கு போல் வேறெங்குமில்லை. வாழ்க்கையின் பூரணத்துவத்தை வேர் வரை உய்த்து உணரக்கூடிய கலாசாரத்தில் பிறந்தும், உலகில் நாம் கோமாளிகளாகத் தோற்றமளிக்கக் காரணம் என்ன?

அடிப்படையான பிழைப்புக்குக்கூட நம்மை நம்புவதைக் குறைத்துக்கொண்டு, கடவுளை நம்பி இருப்பதுதான்!

இந்த உலகில் தங்களுக்குத் தேவையானதைத் தேடிப் பெற, மண்புழுவிலிருந்து மாபெரும் யானை வரை யாவும் தங்கள் திறமையைத்தான் நம்பி

இருக்கின்றன. யாரிடமும் போய் உதவி கேட்பதில்லை.

அவற்றையெல்லாம் விட மிக அதிகமான புத்திசாலித்தனம் கொண்ட மனிதன் மட்டும்தான் தனக்குத் தேவையானதைக் கடவுளிடம் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான்.

நீங்கள் பிழைத்திருக்க உங்களுக்குக் கொடுக்கப்பட்ட கைகளும், கால்களுமே போதும்! உங்கள் உடலையும், மனதையும் எப்படித் திறம்படப் பயன்படுத்துவது என்பதற்கான பயிற்சிகள் கொடுத்தால் போதும். அதை விட்டுவிட்டு, கடவுளை உங்கள் பிழைப்புக்கு உதவுவதற்காக அழைப்பது கேவலம். ஆம், தினப்படி வாழ்க்கைக்குக் கடவுள் தேவை இல்லை!

பல லட்சம் கோயில்கள் இருந்தும், எங்கு திரும்பினாலும் ஏன் வேதனை மிகுந்த முகங்களைப் பார்க்கிறோம்? உண்மையையும், உபதேசத்தையும் போட்டுக் குழப்பிக் கொண்டதால் வந்த பிரச்னை இது.

கடவுள் உங்களை விட மிக சக்தி வாய்ந்தவர்; அவர் இல்லாமல் ஓர் அணுவும் அசையாது என்பீர்கள். ஆனால், அவரை நம்பி உண்மையிலேயே உங்களை ஒப்படைப்பீர்களா? மாட்டீர்கள்!

அவரின் புத்திசாலித்தனத்தின் மீது சந்தேகம்கொண்டு, தினம் தினம் அவர் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று அவர் முன் நின்று கண்களை மூடியபடி, நீங்கள் அல்லவா அவருக்குச் சொல்லிக் கொடுக்கிறீர்கள்?

உழைக்காமல் சாப்பிடவும், படிக்கா மல் தேர்வுகளில் பாஸ் செய்யவும், உங்கள் தவறுகள் கவனிக்கப்படாமல் போகவும் கடவுளைத் துணையிருக்கச் சொல்கிறீர்கள். வாழ்க்கை திடுமெனப் புரண்டுவிட்டால் என்ன செய்வது என்று கடவுளை ஒரு இன்சூரன்ஸாக வைத்திருக்கிறீர்கள். கோயில் கோயிலாக அதற்கான பிரீமியம் கட்டுகிறீர்கள்.

'இதையெல்லாம் கொண்டு வா!', 'இதிலிருந்தெல்லாம் காப்பாற்று!' என்று உங்கள் சேவகனாகவும், பாதுகாப்புச் சிப்பாயாகவும் கடவுளை நியமிக்கப் பார்க்கிறீர்கள். வாழ்க்கையைப் பற்றிய அச்சம் மட்டுமே கடவுளைப் பற்றிய நம்பிக்கைகளை வளர்த்திருந்தால் உங்களிடம் தெய்வமும் தங்காது... வாழ்க்கையும் மிஞ்சாது!

சங்கரன்பிள்ளையிடம் ஒரு வேலைக்காரன் இருந்தான். ஒரு முறை உப்பும், சர்க்கரையும் வாங்கி வர அவனை சங்கரன்பிள்ளை கடைத் தெருவுக்கு அனுப்பினார்.

வேலைக்காரன் முதலில் பை நிறைய சர்க்கரை வாங்கினான். அடுத்ததாக உப்பு வாங்கப் போனபோது, 'இரண்டையும் கலந்து வாங்கி வந்து விடாதே' என்று சங்கரன்பிள்ளை எச்சரிக்கை செய்திருந்தது நினைவுக்கு வந்தது. பையை உள்ளும் வெளியுமாகப் புரட்டிவிட்டால் வேறொரு

பையாகி விடுமே என்று புரட்டினான். சர்க்கரையெல் லாம் தெருவில் கொட்டி வீணானது. பையில் உப்பை நிரப்பிக்கொண்டு வீடு திரும்பினான்.

‘உப்பு இருக்கிறது. சர்க்கரை எங்கே?’ என்று சங்கரன்பிள்ளை கேட்டார். அந்த புத்திசாலி வேலைக் காரன், ‘பையின் அந்தப் பக்கம் இருக்கிறது’ என்று பையை மறுபடி உள்ளும் வெளியுமாகப் புரட்டினான். உப்பும் பூமியில் கொட்டி மண்ணில் கலந்தது.

அச்சமும், கடவுள் நம்பிக்கையும் இப்படித்தான். இரண்டையும் குழப்பிக்கொண்டால் எதற்கும் உதவாது. இதற்குப் ‘பக்தி’ என்று பெயர் சூட்டி ஏமாற்றிக் கொள்ளாதீர்கள்.

உண்மையில் கடவுளை உங்களுக்கு மேலானவராக நினைத்தால், உங்கள் வாழ்க்கை எதிர்பார்த்தபடி நடக்காதபோது, ‘ஆஹா, கடவுள் விருப்பப் படி நடக்கிறதே!’ என்று சந்தோஷம் அல்லவா கொள்ள வேண்டும்!முடிகிறதா?

மாறாக, வாழ்க்கையை எப்படி நடத்தித் தர வேண்டும் என்று, பிரார்த்தனை என்ற பெயரில் கடவுளுக்கு உத்தரவுகள்தானே கொடுத்துக்கொண்டு இருக்கிறீர்கள்?

சந்தேகம் இருக்கும் மனதில் பக்தி நிகழ்வதில்லை. கடவுளிடம் பணிவது போன்ற பாசாங்குதான் நிகழ்கிறது. பக்தி என்பது உங்கள் அடையாளங்களை இழந்து எதன் மீது பக்தி கொண்டீர்களோ, அதனுடன் இரண்டறக் கரைவது.

உங்கள் தவறுகளுக்கான பழியை ஏற்றுக்கொள்ள சக மனிதர்கள் தயாராக இல்லாதபோது, தெய்வச் செயல் என்று அவற்றைச் சுமத்த வசதியான தோள் களாகக் கடவுளை வைத்திருக்கிறீர்கள். அதன் பெயர் பக்தி இல்லை. போலித்தனம்!

உங்கள் வாழ்க்கையை, கடவுளின் உதவியைக் கோராமல் நீங்களாக வாழக் கற்றுவிட்டீர்களென்றால், உங்கள் வாழ்க்கை மேன்மையாகிவிடும்.

உங்களுக்குத் தேவையான உணவு கிடைத்துவிட்டது. விரும்பிய துணை, குழந்தைகள், வசதிகள் அனைத்தும் கிடைத்துவிட்டன. இருந்தாலும், இன்னும் எதற்காகவோ உள்ளம் ஏங்குகிறதே, அதன் பெயர் என்ன?

இந்தப் படைப்பின் வேர் என்ன என்று அறிந்துகொள்ளும் ஆர்வம் அப்போதுதான் தலையெடுத்திருக்கிறது என்று அர்த்தம். அதுதான் உண்மையான ஆன்மிகம்!

அப்போதுதான் கடவுளைப் பார்க்க நீங்கள் தயார். அதுவரை அவரைத் துரத்தாதீர்கள்... விட்டுவிடுங்கள்!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“ஆனந்தம் தரும் செயலையே செய்யச் சொல்கிறீர்கள். வன்முறையை ஆனந்தமாக நினைப்பவர்களை என்ன செய்வது?”

“நீங்கள் படைப்போடு விளையாடுகிறீர்கள். துக்கத்தையும், துன்பத்தையும் தரும் எந்த விளையாட்டையும் விளையாடுவதில் அர்த்தமில்லை. உங்களுக்கும் மற்றவர்களுக்கும் ஆனந்தமாக இருக்கும் விதத்தில் விளையாடுங்கள் என்றுதான் சொன்னேன்.

போர்தான் உங்களுக்கு ஆனந்தம் தருகிறதா? ஆயுதங்களைப் பயன்படுத்துவதில்தான் மகிழ்ச்சி கொள்கிறீர்களா? குற்றமேயில்லை. அடுத்தவர் உங்களால் சுட்டு வீழ்த்தப்படும்போது கிடைக்கும் அதே ஆனந்தம், அவரால் நீங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டாலும் உங்களுக்குக் கிடைக்கும் என்றால், அந்த விளையாட்டும் தவறேயில்லை. ஆனால், நீங்கள் மட்டுமே சுட்டு வீழ்த்த நினைப்பது நியாயமற்ற ஆசை அல்லவா?”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

எது நல்லது... எது கெட்டது? உண்மையில் இதை உங்கள் உள்ளுணர்வுதான் முடிவு செய்ய வேண்டும். ஆனால், இன்றைக்கு யார் முடிவு செய்கிறார்கள்?

உங்கள் மீது சமூகத்தாலும், குடும்பத்தாலும், சுற்றியுள்ளவர்களாலும் நிறைய எதிர்பார்ப்புகள் வைக்கப்படுகின்றன. அவற்றை நிறைவேற்றினால் நீங்கள் நல்லவராகவும், நிறைவேற்றாவிடில் கெட்டவராகவும் கருதப்படுகிறீர்கள்.

சூதாடுவது கெட்ட பழக்கம் என்று சிறு வயதிலிருந்தே கற்பிக்கப் பட்டிருந்தால், வீட்டில் அதைப் பற்றிப் பேசுவதுகூடக் குற்றமாகத்தோன்றும். அதே சமயம், சூதாட்ட கிளப்பில் போய் உட்கார்ந்துகொண்டால், அந்தக் குற்ற உணர்வு மாயமாய் மறைந்துவிடும். சூதாடாமல் இருந்தால்தான், அங்கே பலவீனமானவராகக் கருதப்படுவீர்கள்.

சில கொள்ளைக்காரச் சமூகங்களில் சிறு வயதிலிருந்தே திருடுவதற்கும், கொள்ளையடிப்பதற்கும் சொல்லித் தரப்படுகிறது. அந்தக் கலையில் மேன்மை பெற, அதற்கென்று இருக்கும் கடவுள்களை வேண்டிக்கொள்ளும் பழக்கம்கூட அங்கே இருக்கிறது. அங்கு பிறந்து வளர்ந்தவராயிருந்தால், திருட்டுத் தொழிலின் சூட்சுமங்களைக் கற்றுத் தேர்ச்சி பெற்றால்தான் நீங்கள் வல்லவர், நல்லவர்!

வளர்க்கப்பட்ட விதத்தில், மறுபடி மறுபடி சொல்லிக் கொடுத்ததை வைத்துதான் நல்லது, கெட்டது என்று பிரித்துக்கொண்டீர்கள். சமூகத்தின் பார்வையில் உங்களை நல்லவராகக் காட்டிக்கொள்ள, இயல்பை மறைத்து வாழத் துவங்கினால்தான் பிரச்னை!

இப்படித்தான்... நல்லது செய்பவனே சொர்க்கத்துக்குப் போவான் என்று மற்றவர்கள் சொல்லிச் சொல்லி சங்கரன்பிள்ளை மிகக் கவனமாக

வாழ்ந்தார். ஒரு நாள் அவர் வாழ்க்கை முடிந்தது.

அடுத்த காட்சி, சொர்க்கத்தின் வாசலில் அரங்கேறியது. அவரைக் காக்க வைத்துவிட்டு, அங்கிருந்த தேவதைகள் கூடிக் கூடிப் பேசினர். பின்பு அவரிடம் வந்தனர்.

“ஒரே ஒரு கெட்டது செய்திருந் தால் முதல் மாடி, இரண்டு கெட்ட காரியங்கள் செய்தால் இரண்டா வது மாடி என்று சொர்க்கத்தில் வெவ்வேறு மாடிகள் இருக்கின்றன. ஒரு பாவம்கூட செய்யாமல் உங்களைப் போல் இதுவரை யாரும் வந்ததில்லை. உங்களை எங்கே அனுப்புவது என்று குழப்பமாக இருக்கிறது!” என்றனர்.

சங்கரன்பிள்ளை அதிர்ந்தார். “என்னது... நல்லவனாயிருந்ததால் பூமியில்தான் என்னை யாரும் சேர்த்துக்கொள்ளவில்லை. இங்கேயுமா?”

“ஆமாம், மிஸ்டர் பிள்ளை! அடுத்த மூன்று மணி நேரத்துக்கு உயிரைத் திருப்பித் தருகிறோம். சீக்கிரம் போய் ஏதாவது தப்பைச் செய்துவிட்டு வாருங்கள்.”

பூமியில் சங்கரன்பிள்ளையின் உடல் உயிர்த்து எழுந்தது. அவசரத்துக்கு என்ன பாவம் செய்வது? யோசித்தார்.

பக்கத்துத் தெருவில் இருந்த ஒரு முதிர்கன்னி எப்போது அவரைப் பார்த்தாலும், கண்களால் அழைப்பாள். மனைவி இருக்கும்போது அடுத்த பெண்ணைப் பார்ப்பதே பாவம் என்று அவளைத் தவிர்த்து வந்திருந்தார். இப்போது அங்கே விரைந்தார். “உன்னோடு சந்தோஷமாக இருக்கவே வந்தேன்” என்றார். அவளும் ஆச்சர்ய மாகி, விருப்பத்தோடு இணங்கினாள்.

எல்லாம் முடிந்து புறப்பட்டபோது, “அப்பாடா! ஒரு கெட்ட காரியம் செய்துவிட்டேன். சொர்க்கத்தில் இடம் உண்டு” என்று சங்கரன்பிள்ளை நிம்மதியானார். அவளோ, அவரது கரங்களைப் பற்றிக்கொண்டு நன்றியுடன் சொன்னாள்... “இன்பத்தையே அனுபவித்திராத ஒரு பெண்ணுக்கு நீங்கள் எப்பேர்ப்பட்ட நல்ல காரியம் செய்திருக்கிறீர்கள், தெரியுமா?’

சொர்க்கத்தின் கதவுகள் அறைந்து மூடப்படும் சத்தம், இங்கேயே சங்கரன் பிள்ளையின் காதுகளில் விழுந்தது.

நல்லவர்களாகத் தங்களை நினைத்துக்கொள்பவர்கள் இப்படித் தான் இங்கேயும் வாழாமல், அங்கேயும் இடமில்லாமல் அல்லாடுகிறார்கள். உலகில் பெரும்பாலான துன்பங்கள் தங்களை நல்லவர்கள் என்று நினைத்துக் கொள்பவர்களால்தான் நிகழ்கின்றன. உண்மையில் நல்லது, கெட்டது என்பது செயலில் இல்லை. எண்ணத்தில் இருக்கிறது. ராமகிருஷ்ணர் வழக்கமாகச் சொல்லும் ஓர் அற்புதமான கதை நினைவுக்கு வருகிறது.

வாரக் கடைசியில் விலைமகளைத் தேடிப்போகும் இரு நபர்கள் இருந்தார்கள். ஒரு முறை அந்த ஊரில் பகவத்கீதை பற்றிய சொற்பொழிவு

நடந்தது. ஒரு நண்பன் அதற்குப் போவதென்று முடிவு செய்தான். அடுத்தவனோ வழக்கம்போல் விலை மகளைத் தேடிப் போனான்.

சொற்பொழிவில் உட்கார்ந்திருந் தவனுக்கு மனதில் பதற்றம்... 'முட்டாள் தனமாக இங்கே வந்து சிக்கிக்கொண் டோமே. அங்கே நண்பன் ஜாலியாக இருப்பானே?'

விலைமகளிடம் போயிருந் தவனுக்கோ, 'அடடா, வாழ்க்கையில் வளர்ச்சிக்கு முக்கியமாகத் தேவை யானது பகவத் கீதையல்லவா? நண்பனுக்கு இருந்த தெளிவு எனக்கில்லையே?' என்று வருத்தம். இதில் யார் நல்ல வன்... யார் கெட்டவன்?

கீதையைக் கேட்டாலே புண்ணியம் என்று தன்னை ஏமாற்றிக்கொண்டு, விலை மகளைப் பற்றியே நினைத்துக் கொண்டு இருந்தவனைவிட, விலைமகளுடன் இருந்தா லும் கீதையை நினைத்தவன் மேலல்லவா?

வஞ்சமோ, வேதனையோ இன்றி, அன்போடு செய்யும் எந்தக் காரியமும் நல்ல காரியம்தான்.

ஒரு மானை புலி வேட்டை யாடுவது அதன் மீது உள்ள வஞ்சத்தால் அல்ல... பசியால்! சக மனிதனிடம் கோபமாகப் பேசி வருத்தும் ஒருவன் செய்யும் பாவமல்லவா அதைவிடக் கொடியது?

மற்றவர்கள் கண்களில் நல்லவராகத் தெரிய வேண்டும் என்று முயற்சிப்பதை விட்டுவிட்டு, உண்மையானவராக... தூய்மையானவராக வாழப் பழகுங்கள்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"வாழ்க்கையில் அடுத்த கட்டத்துக்குப் போக வேண்டுமானால், என்ன செய்ய வேண்டும்?"

"தொழிலில் இருந்தாலும் சரி, ஆன்மிகப் பாதையில் இருந்தாலும் சரி... நீங்கள் புதிதாக எந்த வேலையைச் செய்ய முனைந்தாலும், அதில் தீவிரமான கவனமும், முழுமையான ஈடுபாடும் செலுத்திச் செயலாற்றுங்கள். எடுத்துக்கொண்ட காரியத்தை வெற்றிகரமாகச் செய்து முடிக்க, உங்களுடைய முழுத் திறனையும் பயன்படுத்துங்கள். பழகிய வேலையாக இருந்தாலும் அசிரத்தையாகவோ, கடனே என்றோ செய்யாமல், ஒவ்வொரு கணமும் புதிய வேலையை ஏற்றிருப் பதாகவே நினைத்துச் செய்யுங்கள். உங்கள் முழுத் திறனையும் வெளிக் கொணர்ந்து, புதிய ஆர்வத்தோடு இதயப்பூர்வமான ஈடுபாட்டையும் செலுத்தி, முழு விருப்பத்தோடு செய்து பாருங்கள்.

அடுத்தடுத்த புதிய கட்டங்களைச் சுலபமாகச் சென்றடைவீர்கள்!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

பல திறமையாளர்களை நீங்கள் கவனித்திருக்கலாம். கிடு கிடுவென்று உயர்ந்து வருவார்கள். சடாரென்று ஒரு கட்டத்தில் நிலைகுத்தி நின்றுவிடுவார்கள். அதன்பின், அவர்களிடம் புதிதாக எதையும் எதிர்பார்க்க முடியாது!

ஏன்? அதற்குப் பிறகும் வளர வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு இருக்காதா என்ன? இருக்கும். ஆனாலும், கிடைத்திருப் பதை விட்டுவிடக் கூடாது என்று, அச்சத்துடன் கெட்டியாகப் பிடித்துக் கொண்டுவிடுவார்கள். அதற்கு அப்புறம் எப்படி வளர்ச்சி இருக்கும்?

குட்டி மண் தொட்டியில் வேரோடு வைத்து விற்கப்பட்ட ஒரு செடியை வாங்கு கிறீர்கள். பத்திரமாக நிழலில் வைத்துப் பார்த்துக்கொண்டால், தொட்டியில் செடி வேகமாக ஓரளவுக்கு வளரும். பிறகு ஒரு கட்டத்தில் போதிய இடமின்றி, அது தன் வளர்ச்சியைக் குறுக்கிக்கொள்ளும். அதே செடியை பூமியில் எடுத்து நட்டிருந்தால், அது பெரிய விருட்சமாக வளர்ந்திருக்கும். கடைசி வரை புதிது புதிதாகக் கிளைகளை எல்லாத் திசைகளிலும் அனுப்பிக் கொண்டு இருக்கும். உங்கள் வாழ்க்கையும் அப்படித்தான்!

வளர வேண்டும் என்ற முனைப்பு உங்களுக்குள் தகதகத்துக்கொண்டு இருக்கிறது. இப்போதிருக்கும் மண் தொட்டியை உடைத்துப்போட நீங்கள் தயங்குவதால், வளர முடியாமல் தவிக்கிறது. உங்களைச் சுற்றி நீங்களே பின்னிக்கொண்டு இருக்கும் வலைகளிலிருந்து விடுபட்டால்தான் வளர்ச்சி என்பது சாத்தியம்!

அரசனைத் தேடி ஓர் இளைஞன் அவ்வப்போது அரண்மனைக்கு வருவான். அவனுக்கு ராஜ மரியாதை தந்து நிறைய செல்வங்கள் கொடுத்து அனுப்புவான் அரசன். அத்தனையையும் தொலைத்துவிட்டு அவன் மீண்டும் வந்து நிற்பான். அரசனும் முகம் கோணாமல் மறுபடி அவனுக்கு வாரி வழங்குவான்.

ஒரு முறை தலைமை அமைச்சர் அரசனிடம் மெள்ளக் கேட்டார்... “மன்னா, நீங்கள் கொடுக்கும் செல்வத்தை இவன் பொறுப்பில்லாமல் தவறான நண்பர்களோடு சேர்ந்து வீணடித்துவிட்டு வருகிறான். எதற்காக மீண்டும் மீண்டும் அவனுக்கு வழங்கு கிறீர்கள்?”

“அமைச்சரே! நான் பிறந்தபோதே என் தாய் இறந்துபோனாள். அரண்மனைப் பணியில் இருந்த இவன் தாய்தான் இவனுடன் சேர்த்து எனக்கும் தாய்ப்பால் கொடுத்து வளர்த்தாள். அதனால், இவனை என் சகோதரனாகவே நினைக்கிறேன்” என்றான் அரசன்.

அடுத்த முறை அந்த முட்டாள் பையன் வந்தபோது, வேறொரு விபரீத கோரிக்கையை முன் வைத்தான். “உன்னைச் சுற்றி புத்திசாலிகள் இருப்ப

தால்தான் என்னைவிட மேன்மையாக இருக்கிறாய். உன் அமைச்சர் என்னுடன் இருந்தால், என்னாலும் ராஜ்யத்தை ஆள முடியும். அவரை என்னுடன் அனுப்பு!" என்று மன்னனிடம் கேட்டான் அவன். என்ன செய்வது என்று புரியாமல் அரசன் திணறினான்.

"மன்னா... உங்களுடன் பால் குடித்து வளர்ந்த சகோதரனுக்கு உதவ, என்னுடன் பால் குடித்து வளர்ந்த என் சகோதரனை அனுப்புகிறேனே!" என்றார் அமைச்சர்.

மறு நாள், அரசவைக்கு அமைச் சர் வந்தபோது, ஒரு எருமைக் கடாவைக் கயிற்றில் கட்டி இழுத்து வந்தார். "ஏன் சிரிக்கிறீர்கள்? இவனும் நானும் ஒரே எருமைத் தாயின் பாலைத்தான் குடித்தோம். மன்னனின் சகோதரனுக்கு அமைச்சராக இருக்க இந்தச் சகோதரனை அனுப்புகிறேன்" என்றார்.

நாம் ஒரே தாயிடம் பால் குடித்து வளர்ந்திருக்கலாம். ஆனால், நம் உடலை, மனதை, உணர்ச்சிகளை, சக்தியை எப்படித் திறம்படப் பயன் படுத்துகிறோம் என்பதைப் பொறுத்து தானே நம் வளர்ச்சி அமையும்!

பொதுவாக, உங்கள் நண்பர்களைச் சந்திக்கும்போது என்னவெல்லாம் பேசுவீர்கள்? பட்ஜெட்டில் வரிகளை எப்படி விதிக்க வேண்டும்... எந்தெந்தக் கட்சிகள் கூட்டணி வைத்துக்கொண் டால் தேர்தலில் வெற்றி பெற முடியும்... அரசாங்கம் எப்படி நடக்க வேண்டும் என்றெல்லாம் விவாதிப்பீர்கள். முஷ்ரப் பற்றியும், பின்லேடன் பற்றியும், ஜார்ஜ் புஷ் பற்றியும் எல்லா விவரங்களும் வைத்திருப்பீர்கள். இப்படி உலக நடப்புகள் எல்லாவற்றையும் விரல் நுனியில் வைத்திருக்கிறீர்களே, உங்களைப் பற்றி நீங்கள் அறிந்திருக்கிறீர்களா? உங்களுடைய திறமையின் வீச்சு பற்றி உங்களுக்கு முழுமையாகத் தெரியுமா?

கண்ணாடி அணிபவர்களுக்கு முதன் முதலாக அதை அணியும்போது, வேண்டாத பாரமாக இருக்கும். பழக்கமான பின் அதைப் பற்றிய கவனமே இருக்காது. கவனிக்கப்படாவிட்டாலும், அது தன் வேலையைத் திறம்படச் செய்துகொண்டு இருக்கும். அதேபோல்தான் உங்கள் திறமையும்!

இருபத்து நான்கு மணி நேரமும் அதனைக் கூர்மையாக வைத்திருக்க, முதலில் கவனத்துடன் பயிற்சி செய்யுங்கள். பழக்கவசத்தால், அது உங்கள் இயல்பான குணமாகிவிடும். பிறகு, எந்தச் சந்தர்ப்பத்திலும் அது பயன்படத் தயாராக இருக்கும். சாலையில் வண்டி ஓட்டிப் பழகும்போது, உங்கள் மொத்த கவனமும் அதிலேயே இருக்கும். நல்ல பயிற்சி பெற்ற பிறகு, அது பற்றிய பயமோ, பதற்றமோ இல்லாமல் மிக இயல்பாக வண்டியில் பயணம் செல்ல ஆரம்பிப்பீர்களே, அது போல!

மோட்டார் வாகனத் தொழிலில் பெரும் சாதனை புரிந்த ஹென்றி ஃபோர்டு பற்றித் தெரியும்தானே! "நீங்கள் பெரிய ஜீனியஸ்" என்று புகழப்பட்டபோது, அவர் என்ன சொன்னார் தெரியுமா?

'அதிமேதாவித்தனமாவது, மண்ணாங் கட்டியாவது! உங்களிடம் இருக்கும் அதே புத்திசாலித் தனம்தான் என்னிடமும் இருக்கிறது. விடாமுயற்சி

யுடன் உழைத்து, நான் அதைப் பயன்படுத்தினேன். அவ்வளவுதான்!” என்றார்.

கிடங்கில் குவித்துவைக்கப் பட்டு இருக்கும் தானியம் விநியோகம் செய்யப்படாத வரை, யாருக்கும் உபயோகம் இல்லை. வீணாக மக்கி குப்பைக்குத்தான் போய்ச் சேரும். திறமைகளையும் தேக்கி வைத்திருக்காதீர்கள். அவற்றைப் பயன்படுத்திக் கொண்டே இருந்தால்தான் பலன்!

புதிய வாய்ப்புகளைத் துணிச்சலோடு எதிர் கொள்ளப் பழக்கினால்தான், உங்கள் திறமையும் முழுமையாகப் பரிமளிக்கும். அது உங்களை அடுத்தடுத்த தளங் களுக்கு உயர்த்திக்கொண்டே இருக்கும்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“தோற்றுப் போகும் போதெல்லாம் கடலின் ஆழத்துக்கே போய்விட்டது போல் உணர்கிறேனே?”

“கடலின் ஆழத்துக்குப் போன பிறகு, அதற் கும் கீழே போக முடியாதல்லவா? அங்கே இருந்து மேலே மட்டும்தானே வர முடியும்? அப்படியானால், தோல்விக்குப் பிறகு வெற்றிக்கு மட்டும்தானே வாய்ப்பு!

தோல்வியால் துவண்டு அங்கேயே நிலை குத்தி நிற்காமல், எட்டி உதைத்து மேலே வருவது எப்படி என்று பாருங்கள். மனம் என்பது மகத்தான சக்தி கொண்ட ஓர் அற்புத ஆயுதம். உடலால் செய்ய இயலாததைக்கூட பல விதங்களில் மனம் சாதித்துக் காட்டும்.

துணிச்சலுடன், முழுமையான கவனத்துடன், விடா முயற்சியுடன், எல்லாத் திறமைகளையும் பயன்படுத்தி, ஆர்வத்துடன் உழைத்துப் பாருங்கள். அடுத்தது வெற்றிதான்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

மனிதராகப் பிறந்தவர் எவருமே தவறுகளுக்கு அப்பாற்பட்டவர் அல்ல. ஆனால், தவறு என்று உணர்ந்த பின், அந்தத் தவற்றை ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறீர்களா என்பதுதான், உங்களை மற்றவர்களிடமிருந்து வித்தியாசப்படுத்தும்.

செய்தது தவறா, தவறில்லையா என்பது கூடப் பிரச்னை அல்ல... அதை ஒப்புக்கொள்வதாவது என்கிற அகங்கார நினைப்புதான் பிரச்னை!

குழந்தையாக இருந்தபோது எவ்வளவு வளைந்து கொடுத்தீர்கள்? உங்களை அடித்தவரிடமே கூட எந்த வன்மமும் இல்லாமல் மறுபடி செல்வீர்களே... அப்போது அந்தச் சந்தோஷம் எப்படி இருந்தது?

வளர வளர, உடல் அளவிலும் மனதளவிலும் இறுகி விட்டீர்கள். சமூகத்தில் உங்களுக்கென்று ஒரு அடையாளத்தை உருவாக்கிக்கொண்டீர்கள்.

அந்த அடையாளத்தின் கௌரவத்தை நிலைநிறுத்தும் முயற்சியில், உங்கள் நேர்மையையே பலி கொடுக்கத் தயாராகிவிட்டீர்கள். அதனால்தான், தவறுகளை ஏற்றுக்கொள்ளும் அடிப்படை குணத்தைக்கூட இழந்துவிட்டீர்கள்!

“மன்னித்துவிடு! தெரியாமல் நடந்துவிட்டது! அறியாமல் செய்துவிட்டேன்! அடுத்த தடவை திருத்திக்கொள்கிறேன்!’ என்று பணிந்து சொல்வதால், என்ன குறைந்துவிடுவீர்கள்? தவற்றை உணர்ந்த பின்னும், வெளிப்படையாக ஏற்கத் துணிவில்லாமல், அதை நியாயப் படுத்திக்கொண்டே இருப்பதுதான் மாபெரும் தவறு!

ஒருமுறை சங்கரன்பிள்ளை, இன்னொருவர் தோட்டத்தில் கனிந்த பழங்கள் தொங்குவதைக் கண்டார். ஒரு கோணிப் பை எடுத்து வந்தார். வேலி தாண்டிக் குதித்தார்.

மரத்திலிருந்து பழங்களைப் பறித்தார். கோணியில் நிரப்பித் தோளில் போட்டுக்கொண் டார். வேலி தாண்டி வெளி யேறப் பார்த்தபோது, தோட்டத்தின் சொந்தக்காரன் கையில் சிக்கினார்.

“யார் அனுமதியுடன் இவற்றைப் பறித்தாய்?”

“நான் பறிக்கவில்லையே! பெரும் காற்று வீசியது. காற்றில் இவை கீழே உதிர்ந்தன!” என்றார் சங்கரன் பிள்ளை.

“அப்படியானால், இந்தக் கோணியை எதற்காக எடுத்து வந்தாய்?”

“ஓ... இதுவா? இதுவும் காற்றில் எங்கிருந்தோ பறந்து வந்தது!”

“காற்றிலேயே பழங்கள் உதிர்ந்திருக்கட்டும்... கோணியும் பறந்து வந்திருக்கட்டும்! பழங்களைக் கோணியில் நிரப்பியது யார்?” என்று சொந்தக்காரன் உறுமினான்.

சங்கரன்பிள்ளை கலங்காமல், அப்பாவிபோல் முகத்தை வைத்துக் கொண்டு, “அதுதான் எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது!” என்றார்.

தவறு செய்பவர்கள் பலரும் சங்கரன்பிள்ளை போல்தான்... கையும் களவுமாகப் பிடிபட்டாலும், தவற்றை ஒப்புக்கொள்ளாமல், அதை நியாயப்படுத்த மேலும் மேலும் வார்த்தைகளை அடுக்கிக்கொண்டே போவார்கள்.

இந்த மனப்பான்மை மிகவும் அபாயகரமானது!

நண்பர்களிடம், சக ஊழியர்களிடம், மேலதிகாரியிடம், உங்களுக்குக் கீழ் பணிபுரிபவரிடம், முன்பின் அறிமுகம் இல்லாதவரிடம் என்று பாகுபாடு பார்க்காதீர்கள். என்ன தவறு செய்தாலும், அதை நேர்மையாக ஒப்புக் கொள்ளுங்கள். அது உங்களைப் பற்றிய நன்மதிப்பைத்தான் கூட்டும்.

தவறு என்றே உணராமல், சிலர் வார்த்தைகளாலும் செயல்களாலும் அடுத்தவரைக் காயப்படுத்திவிடுவார்கள். அதைச் சுட்டிக் காட்டினால், ‘உனக்கு வேதனை ஏற்படுத்த வேண்டும் என்பது என் நோக்கமல்ல’ என்பார்கள்.

பழைய ஜோக் ஒன்று நினைவுக்கு வருகிறது.

பஸ்ஸில் ஒருவன், தன் பக்கத்தில் நின்றவனின் காலை அழுத்தமாக மிதித்துவிட்டான். பின்பு, ‘கவனிக்கலே!’ என்று சொல்லி, காலை எடுத்துக்கொண்டான்.

மிதிபட்டவன் குனிந்து தன் காலைப் பார்த்து, ‘ஏ... காலே! அவர்தான் காரணத்தைச் சொல்லிவிட்டாரே! இன்னும் ஏன் வலிக்கிறாய்?’ என்று அதட்டினான்.

வேண்டுமென்றே மிதித்தாலும், தெரியாமல் மிதித்தாலும் வலி, வலிதானே?

மன்னிப்புக் கேட்பதை விடுத்து, ‘வேண்டுமென்றா மிதித்தேன்?’ என்று விவாதிப்பது எப்படி நியாயமாகும்?

கவனமற்று இருப்பதே ஒரு தவறு என்று புரிந்துகொள்ள மறுக்கலாமா? கவனிக்காதவரை, அதே வேதனையை இன்னும் பல நூறு நபர்களுக்குக் கொடுக்க நேரலாம் அல்லவா?

கவனமில்லாமல் ஒருமுறை தவறு செய்யலாம். ஆனால், தவறு பற்றிய கவனமில்லாமல்தான் தொடர்ந்து இயங்குவேன் என்பது வளர்ச்சிக்கு எதிரானது.

சிலர் உங்கள் தவற்றைப் பூதக் கண்ணாடியால் பார்க்கக்கூடும். பார்த்துவிட்டுப் போகட்டுமே!

நீங்கள் மன்னிப்புக் கேட்டால், யுத்தம் அங்கேயே முடிந்து, குற்றம் சுமத்தியவர் அல்லவா குற்ற உணர்வைச் சுமப்பார்?

புரிந்துகொள்ளுங்கள்... இது விட்டுக் கொடுப்பதோ, தோற்றுப் போவதோ அல்ல! உங்கள் மனம் பக்குவப்பட் டிருக்கிறது என்பதன் அடையாளம்!

வியாபாரம் செய்தாலும், விளையாட்டில் ஈடுபட்டாலும் உங்கள் தவறுகளை ஏற்றுக்கொள்வதைப் பொறுத்துதான் வாழ்க்கையில் உங்கள் வெற்றி அமைகிறது.

தவற்றை ஒப்புக்கொள்ளாதவரை, மனதுக்குள் சிலுவைபோல் குற்ற உணர்வைத் தேவையின்றிச் சுமக்க நேரிடும்.

தவறுகளை ஒப்புக்கொள்வது என்பது, எதிரிகளையும் நண்பர்களாக்கித் தரும் பலம். எதிர்த்து வீழ்த்த முடியாத பலம். வாழ்க்கையில் உங்களை அடுத்த உயரத்துக்கு அழைத்துச் செல்லும் பலம்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை...

"அடுத்தவருக்குப் பணிந்து போவது பலவீனமல்லவா?"

"பணிவு என்பது தலைக் குனிவு அல்ல... மேன்மையான கௌரவம்!

கோவைச் சிறையில் நான் வகுப்பு எடுத்தபோது, ஒரு கொலைக் குற்றவாளி யைக் காட்டினார்கள்.

'சிறையில் அவன்தான் தாதா. மற்றவர்கள் உணவைப் பறித்துத் தின்பான். எதிர்ப்பவர் களின் கையைக் காலை முறிப்பான்' என்றெல்லாம் சொன்னார்கள்.

விருப்பமில்லாமல் தான் வகுப்புக்கு வந்தான். ஆனால், ஒரு வாரத்துக்குள் அவன் முற்றிலும் கரைந்துவிட்டான்!

அதன்பின், சிறையில் ஒரு முறை கைகலப்பு நடந்தது. அவன் தன் பலத்தைப் பிரயோகித்திருக்கக்கூடிய சந்தர்ப்பத்திலும் அமைதியாக இருந்தான். உடலில் சில காயங்களுடன் என் எதிரில் வந்து நின்றான்.

'இத்தனை நாட்கள் எதிர்ப்பவரை எல்லாம் அடித்துத் துவம்சம் செய்திருக் கிறேன். அப்போதெல்லாம் என்னை விடப் பலசாலி வந்துவிடுவானோ என்ற அச்சம் இருந்தது. இன்றைக்கு எதிர்ப்புக் காட்டாமல் நின்றபோது, முன்னெப்போதையும்விட மிகச் சக்தி வாய்ந்தவனாக உணர்ந்தேன்!'

என்றான்.

பணிவு ஒருபோதும் பலவீனம் அல்ல... அதுதான் பலம்! உங்கள் பலத்தைக் காட்ட நினைப்பதுதான் பலவீனம்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

அண்மையில் ஒரு கல்லூரிக்குச் சென்றிருந்தபோது, ‘வெற்றிக்குக் குறுக்கு வழி என்ன?’ என்று சில மாணவர்கள் என்னிடம் கேட்டார்கள்.

குறுக்கு வழி பற்றி எதற்காகச் சிந்தனை வந்தது? ஆசைப்பட்டது உடனே கிடைத்துவிட வேண்டும் என்று இளைஞர்கள் ஏன் பொறுமை இல்லாமல் தவிக்கிறார்கள்?

உலகத்தைச் சுற்றி வர ஆசைகொண்டு காரை எடுக்கிறீர்கள். பெட்ரோல் இருக்கும் அளவுக்குத்தானே வாகனம் போகும்? பெட்ரோல் தீர்ந்துபோனால் வண்டி நின்றுவிடுமல்லவா? அப்படித்தான் உங்கள் ஆசைகளும்! உங்களிடம் திறமை எவ்வளவு இருக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் நீங்கள் ஆசைப்பட்டதை அடைய முடியும்.

ஓர் இளம் பெண்ணுக்கு விரைவில் பணக்காரியாக வேண்டும் என்ற தவிப்பு இருந்தது. இதை அறிந்துகொண்ட இளைஞன் ஒருவன் அவளிடம் கேட்டான்... “ஒரு மணி நேரத்தில் பத்தாயிரம் ரூபாய் சம்பாதிக்க ஆசையா?”

அவள் கண்கள் பளிச்சிட, “ஆமாம்” என்றாள் அவசரமாக.

“என்னை ஒரு டஜன் தடவை நீ முத்தமிட்டால், நான் உனக்குப் பத்தாயிரம் ரூபாய் தருகிறேன்!”

அவள் யோசித்தாள். ‘வெறும் முத்தம்தானே... என்ன பெரிதாகக் கெட்டுவிடப் போகிறது’ என நினைத்துச் சம்மதித்தாள்.

அவனைத் தனியறைக்கு அழைத்துப்போனாள். கதவைச் சாத்தினாள். அவனை முத்தமிட்டாள். “பயமாயிருக்கிறது” என்றான் அவன். எங்கே அவன் பின்வாங்கிவிடப் போகிறானோ என்று அவளுக்குக் கவலை. “இதற்கென்ன பயம்? வா!” என்றாள். அடுத்தடுத்து அவள் அவனை

ஒவ்வொரு முறை முத்தமிடும்போதும் அவன் பயம் பற்றி பேசுவதும், அவள் தைரியமூட்டுவதும் தொடர்ந்தது.

பன்னிரண்டாவது தடவையும் அவள் அவனை முத்தமிட்டு முடித்த பின், "இப்போது என் பயம் இன்னும் அதிகமாகிவிட்டது!" என்றான் அவன்.

"நமக்குள் ஒப்பந்தம் முடிந்துவிட்டது. நீ பணம் தரப்போகிறாய். அடுத்த நிமிடத்திலிருந்து நீ யாரோ, நான் யாரோ! பயம் எதற்கு?" என்று அவள் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"உனக்குத் தருவதாகச் சொன்ன பத்தாயிரம் ரூபாயை எப்படிப் புரட்டப் போகிறேன் என்பதை நினைத்தாலே பயமாக இருக்கிறது!" என்றான் அவன்.

குறுக்கு வழிக்காரர்களுக்கு இந்த விபத்து சுலபமாக நடக்கும். 'சும்மா சைக்கிளில் உட்கார்! பெடல்கூட செய்ய வேண்டாம். உலகத்தைச் சுற்றி வரலாம்' என்று யாராவது ஆசை காட்டினால், நீங்கள் அவரிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்! வெற்றியை எதற்காக விரும்புகிறீர்கள்? அது உற்சாகம் தரும் என்றுதானே? கூடவே, ஆசைப்பட்டதை அடையத் தேர்ந்தெடுக்கும் பாதையும் உற்சாகமாக அமைந்துவிட்டால், வெற்றியின் உற்சாகத்தை வெற்றி கிடைப்பதற்கு முன்பாகவே அனுபவிக்கலாம் அல்லவா? குறுக்கு வழிக்கு ஆசைப்பட்டு அதை ஏன் இழக்கப் பார்க்கிறீர்கள்?

தென்னங்கன்றை நட்டுவிட்டு, அதன் கீழே உட்கார்ந்து தேங்காய், தேங்காய் என்று கூப்பாடு போட்டால், தேங்காய் விழுமா? அது வளர்வதற்குத் தேவையானதையெல்லாம் குறைவில்லாமல் வழங்கிப் பாருங்கள்... செழிப்பாக மரம் வளர்ந்து, நீங்கள் வேண்டாம் என்றாலும், தேங்காய் கொத்துக் கொத்தாகக் காய்க்கும்!

சங்கரன்பிள்ளையிடம் ஒரு சாரட் வண்டி இருந்தது. ஒரு நாள் வீட்டிலிருந்து பூனைக் குட்டியை இழுத்து வந்து, சாரட் வண்டியில் அதைப் பூட்டினார்.

'இழு இழு' என்று பூனைக் குட்டியை விரட்டினார். சாட்டையால் விளாசி னார். அக்கம்பக்கத்தவர்கள் 'என்ன மடத்தனம் இது?' என்றார்கள்.

'ஏன்... பெரிய ரதங்களையே குதிரை இழுக்குமே?'

'ஆனால், இது குதிரை அல்லவே! பூனை ஆயிற்றே? உங்களிடம் இருக்கும் குதிரையைப் பயன்படுத்தினாலாவது அர்த்தமிருக்கிறது!' 'பூனை இருக்கும்போது குதிரை எதற்கு என்று விற்றுவிட்டேன். ஆனால், அதை அடிப்பதற்கு நான் வழக்கமாகப் பயன்படுத்துவது இந்தச் சாட்டை தானே?' என்றார் சங்கரன்பிள்ளை.

முழுத் திறமையைக் காட்டினால் மட்டுமே வெற்றி பெறக்கூடிய விஷயங்களைக் குறுக்கு வழியில் அடைய விரும்புவது, சாரட் வண்டியில் பூனையைப் பூட்டி இழுக்கச் சொல்வது போல்தான். வெற்றியின் உண்மையான அர்த்தத்தைப் புரிந்துகொள்ளாத வர்கள்தான் குறுக்கு வழியில்

வெற்றிக்கு ஆசைப்படுகிறார்கள்.

மலை முகட்டை நோக்கிப் பயணம் செய்கிறீர்கள்... உங்கள் அடுத்த அடி கல் மீது பதிகிறதா, பள்ளத்தில் பதிகிறதா என்று கவனிப்பீர்களா? மலை உச்சியை மட்டுமே அண்ணாந்து பார்த்துக்கொண்டு போவீர்களா?

மெத்தென்ற புல், சலசலக்கும் நீரோடை, பாதையின் இருபுறமும் பூத்துக் குலுங்கும் வண்ணவண்ண மலர்கள். புதிது புதிதான பட்சிகள்... நீங்கள் போகும் பாதையில் சந்தோஷப்பட இதைப் போல் ஆயிரம் விஷயங்கள் இருக்கின்றன.

எங்கேயோ தூரத்தில் ஒளிந்திருக்கும் முகட்டை மட்டுமே வெறித்துக்கொண்டு பயணம் செய்தால், நூறடி போவதற்குள் களைத்துவிடுவீர்கள். அதேபோல், செய்யும் செயலை ஆனந்தமாகச் செய்யத் தெரியாமல், வெற்றியை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டாலும் போராட்டம்தான். திறமையை வளர்த்துக்கொண்டு, செய்வதைச் சந்தோஷமாகச் செய்துகொண்டு இருந்தால், வெற்றி என்பது செல்லக் குழந்தை போல உங்களிடம் தாவி வரும்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"எப்போதும் சந்தோஷமாகவே இருக்க என்ன வழி?"

"வாழைப்பழத் தோல் சறுக்கி யாரோ விழுகிறார்கள். சிரிக்கிறீர்கள். அதே இடத்தில் நீங்கள் விழுகிறீர்கள். வருத்தம்கொள்கிறீர்கள். ஒரே செயலுக்குச் சந்தோஷப்படுவதும், வருத்தப்படுவதும் யார் கையில் இருக்கிறது? உங்கள் கையில்தானே?

பொதுவாகவே உங்கள் மனதில் சந்தோஷமான தருணங்களைவிட, வேதனையான தருணங்கள்தான் அழுத்தமான நினைவுகளாகப் பதிகின்றன. சந்தோஷமற்றிருந்த கணங்களை மனதில் ஏன் மறுபடி மறுபடி அசை போடுகிறீர்கள்? வேலைக்குப் போனால், கல்லூரியில் பாடச் சுமையோடு இருந்த நாட்கள்... கல்லூரியில் இருந்தால், பள்ளியில் ஆசிரியரிடம் தண்டனை பெற்ற சம்பவங்கள் என எப்போதும் கடந்து போனதையே நினைத்துக் கொண்டு இருப்பதால், நிகழும் கணத்தைக் கவனிக்கத் தவறி விடுகிறீர்கள்.

ஒவ்வொரு கணத்தையும் முழுமையாக எதிர்கொள்ளக் கற்றுக்கொண்டு விட்டால், எப்போதுமே சந்தோஷம்தானே?"

சத்குரு ஜக்கி வாசுதேவ்

## அத்தனைக்கும் ஆசைப்படு!

இப்போது அமெரிக்காவில் மிகவும் பிரபலமாக விளங்கும் இரண்டு சொற்கள்... ஷி□கூஷீமீ□□ (மன அழுத்தம்), விணீஸீணீரீமீனீமீஸீ□ (நிர்வாகம்).

நிர்வாகம் பற்றி பேசும் எல்லா இடங்களிலும், மன அழுத்தத்தை எப்படிக் கையாள்வது என்பது பற்றி சொல்லித் தர, மனவியல் நிபுணர்கள் தலையெடுத்துவிட்டார்கள்.

உங்கள் தொழிலை, குடும்பத்தை, செல்வத்தையெல்லாம் நிர்வகிப்பது எப்படி என்று கற்றுக்கொள்ள விரும்புவதில் அர்த்தம் இருக்கிறது. மன அழுத்தம் என்பது விட்டுத் தொலைக்க வேண்டிய விஷயம் அல்லவா? அதைக் கூடவே வைத்துக்கொண்டு நிர்வகிப்பது எப்படி என்று எதற்காகக் கற்றுக்கொள்ள வேண்டும்?

நவீன வாழ்க்கையில் மன அழுத்தம் என்பது தவிர்க்கவே முடியாதது என்றாகிவிட்டது. காரணம், வளர்ச்சி என்றாலே அதிக செல்வம் என்று நினைத்துவிட்டதால் வந்த குழப்பம் இது. வாழ்வின் மற்ற பல முக்கிய அம்சங்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு, பணமே மனிதனை முழுமையாக ஆக்கிரமித்துக்கொண்டதால் ஏற்பட்ட ஆபத்து இது. நிர்வாகம் என்றாலே, அதைப் பொருளாதாரத்துடன் தொடர்புபடுத்தும் அவலத்தால் வந்த நிலை இது.

யார் சிறந்த நிர்வாகியாக இருக்க முடியும்?

ஒரு வாகனத்தை ஓட்டுவது எப்படி என்று முதலில் உங்களுக்குத் தெரிந்திருந்தால்தானே, அதை நீங்கள் அடுத்தவருக்குச் சொல்லித் தர முடியும்? சங்கரன் பிள்ளை தன் மகனை அழைத்தார். “நீ மேஜராகப் போகிறாய். எனக்குப் பிறகு நிர்வாகத்தை நீதான் கவனிக்க வேண்டும். ஒவ்வொன் றாகக் கற்றுக்கொள்!” என்றார்.

அன்று மாலை, மகனை கிளப்புக்கு அழைத்துப் போனார். அங்கே எல்லோரும் மது அருந்திக் கொண்டு இருந்தனர். சங்கரன் பிள்ளையும் ஒரு மதுக் கோப்பையை எடுத்துக் கொண்டார். “நீயும் எடுத்துக் கொள்” என்று மகன் கையிலும் ஒரு கோப்பையைக் கொடுத்தார். சிலரை அறிமுகம் செய்து வைத்தார்.

“பெரிய மனிதர்களிடம் காரியம் சாதித்துக்கொள்ளும் இடம் இதுதான். மற்றவர்களைக் குடிக்கவிடு. நீ நிதானம் இழப்பதற்கு முன்னால் குடிப்பதை நிறுத்தி விடு. இதுதான் முதல் பாடம்” என்றார்.

அதற்கு முன் குடித்துப் பழக்கம் இல்லாததால், மகன் சற்றுப் பதற்றமாக இருந்தான். சங்கரன் பிள்ளையோ, கோப்பைக்குப் பிறகு கோப்பை என்று நிறுத்தாமல் குடித்துக் கொண்டே இருந்தார். ஒரு கட்டத்தில் மகன் அவரை நிறுத்தினான்.

“அப்பா...” “என்ன மகனே?”

“நிதானம் இழந்து விட்டேனா என்று எப்படித் தெரிந்துகொள்வது?”

சங்கரன் பிள்ளை பக்கத்து மேஜையைக் காட்டினார். “அங்கே உட்கார்ந்திருக்கும் நான்கு பேர் உனக்கு எட்டுப் பேராகத் தெரிந்தால், நிதானம் இழந்து விட்டாய் என்று அர்த்தம். அதற்கு மேல் ஒரு சொட்டுகூட குடிக்காதே!”

மகன் பதறினான்... “ஆனால், அங்கே இரண்டு பேர்தானே இருக்கிறார்கள் அப்பா?”

சங்கரன் பிள்ளையின் நிர்வாகம் எப்படி இருக்கும் என்று யோசியுங்கள். மற்றவர்களை நிர்வகிக்கும் திறனை நீங்கள் முழுமையாகப் பெற வேண்டுமென்றால், அடிப்படையில் உங்களை அல்லவா முதலில் நிர்வகிக்கத் தெரிந்திருக்க வேண்டும்?

உங்கள் உடலை, மனதை, உணர்ச்சிகளை எல்லாம் திறமையாகக் கையாளக் கற்றுக்கொண்ட பின்தானே, நீங்கள் மற்றவர்களை நிர்வகிக்க முனையலாம்?

ஓய்வாக இருந்தபோது, வேலை கிடைக்காதா என்று ஏங்கினீர்கள். கிடைத்தவுடன் சந்தோஷத்தையெல்லாம் இழந்து, படபடப்புடன் ரத்த அழுத்த நோயை வரவழைத்துக் கொள்கிறீர்கள்!

பதவி உயர்வு கிடைக்கும்வரை, அதற்காகப் போராடினீர்கள். இப்போது நிமிடத்துக்கு நிமிடம் டென்ஷன் என்கிறீர்கள். இன்னும் உயரத்துக்குப் போனால், என்ன சொல்வீர்களோ? ‘முன்னால் நிம்மதியாக இருந்தேன். இப்போது அமைதியே போயிற்று’ என்பீர்களா? வாழ்க்கையைத் தொலைத்துவிட்டு வசதிகளைப் பெருக்கிக்கொள்வது, செத்த கிளிக்குத் தங்கக் கூண்டு செய்து கொடுப்பது போல்!

தோல்வியால் உண்டான துன்பத்துக்காவது அர்த்தம் கற்பிக்கலாம். ஆனால், வெற்றி என்பது நீங்கள் வியர்வை சிந்தி, கடுமையாகப் போராடி உங்களால் எவ்வளவு கடினமாக ஈட்டப்பட்டது? அந்த வெற்றியாலும் துன்பம் வந்தால், உங்கள் அடிப்படையிலேயே தவறு இருக்கிறதே!

உங்களால் கையாள முடியாததை எதற்காக விரும்பினீர்கள்?

நீங்கள் கடைநிலைத் தொழிலாளியானால் என்ன, கட்டுப்படுத்தும் முதலாளியானால் என்ன? உங்களை நிர்வகித்துக்கொள்ளும் முழுமையான திறனின்றி, நீங்கள் மேல்நிலைக்கு வர முனைந்தால், அது ஒரு விபத்தாகவே முடியும்.

வெளிச் சூழ்நிலைகளால் பாதிக்கப்படாமல், உங்கள் உள்தன்மையை நிர்வகிக்க முதலில் தெரிந்துகொள்ளுங்கள். சுற்றியிருப்பது சகதியாக இருந்தாலும் அதையே தன் உரமாகக்கொண்டு, தாமரை தன் பூரண அழகை வெளிப்படுத்துகிறது அல்லவா! நறுமணத்தைப் பரப்புகிறது

அல்லவா? உங்கள் வாழ்க்கையும் அப்படித்தான் அமைய வேண்டும். சுற்றுப்புறம் எப்படி இருந் தாலும், உறுதியோடு செயல்பட்டு, அதிலிருந்து உங்களுக்கான உரத்தை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள்.

மன அழுத்தம் இல்லாமல், உங்களை ஆனந்தமாக நிர்வகிக்கக் கற்றுக்கொண்டுவிட்டால், நம்பமுடியாதவற்றைக் கூட நிகழ்த்திக் காட்டலாம்.

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“எதைச் செய்தால் எனக்குச் சந்தோஷம் கிடைக்கும்?”

“ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன்னால் ஒரு காரை கிளப்ப வேண்டுமானால், தள்ளிவிட இரண்டு வேலைக்காரர்கள் வேண்டும்.

அதற்கப்புறம், ஒரு நீளமான கம்பியை முன்புறம் வைத்துச் சுழற்றித் திருப்ப, ஒருத்தர் இருந்தால் போதும் என்ற நிலைமை வந்தது.

இப்போது அடுத்தவர் உதவியின்றி, பாட்டரி சக்தியில் கிளம்பும் அளவுக்கு கார் தயாரிப்பில் முன்னேற்றம் வந்துவிட்டது.

ஆனால், கார் மீது கவனம் இருந்த அளவுக்கு, மனிதனுக்குத் தன்னைப் பற்றிய கவனம் வரவில்லை. அவன் சந்தோஷப்பட வேண்டுமானால்,அதற்கு வேண்டிய ‘செல்ஃப் ஸ்டார்ட்’ அவனிடம் இல்லை. பங்களா, குழந்தை, பிரமோஷன், பிஸினஸ் என்று வெளியிலிருந்து ஏதாவது உந்துதல் அவனுக்குத் தேவைப்படுகிறது. அவை கிடைத்தாலும், வேறு விதத்தில் மன அழுத்தம் கூடிவிடுகிறது.

வாழ்க்கையின் அழகு, நீங்கள் என்ன செயலைச் செய்கிறீர்கள் என்பதைப் பொறுத்து அமைவதில்லை. செய்கிற காரியத்தில் உங்களை எந்த அளவுக்கு இதயப்பூர்வமாக அர்ப்பணித்துக்கொள்கிறீர்கள் என்பதைப் பொறுத்தே அமைகிறது.

எனவே, நீங்கள் எதைச் செய்தாலும், அதை முழுமையான ஈடுபாட்டுடன் செய்யுங்கள். நிச்சயம் சந்தோஷம் கிடைக்கும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

தெருவோர பிச்சைக்காரனைப் பாருங்கள். துருத்திய எலும்புகளுடன் அசைய முடியாமல் ஓய்ந்து படுத்திருப்பான். அடுத்த பிச்சைக்காரன் இவன்

இடத்தில் வந்து உட்கார்ந்துவிட்டால், காச்மூச்சென்று கத்தி, சண்டை போடுவான்.

இது எதனால்? உடலிலும், மனதிலும் வலு இல்லாதவர் களுக்குக்கூட கோபமோ, வெறுப்போ, ஆத்திரமோ, முழு வேகத்துடன் வெளிப்படுகிறது. தன் சக்தியைச் சரிவரப் பயன்படுத்திக்கொள்ளத் தெரியாத மனிதனுக்கு உணர்ச்சி வசப்படுவது மட்டுமே சுலபமாகச் சாத்தியப்படுகிறது.

அதனால்தான், பல நூறு மைல்களுக்கு அப்பால் உள்ளதைக் கைப்பற்ற ஆசைப்படும் பெரும்பாலான மனிதர்களுக்கு, அடுத்த மூன்று அடிகளைத் தாண்டி யோசிக்கத் தெரிவதில்லை. திட்டமிட்டுத் திறமைகளைப் பயன்படுத்தத் தெரிவதில்லை.

எடுத்ததற்கெல்லாம் அச்சம் கொள்வார்கள். ஒவ்வொரு அடியையும் சந்தேகத்துடன் எடுத்து வைப்பார்கள். உணர்ச்சிவசப்படுவதில் இருக்கும் தீவிரம், வலுவான எண்ணங்களை உருவாக்கிக்கொள்வதில் அவர்களுக்குக் கிடையாது.

அதனால், வெற்றியை நினைக்கும் போதெல்லாம், கூடவே தோல்வி பற்றிய சந்தேகமும் அலை மோதுகிறது.

நசிகேதனைப் பற்றிக் கேள்விப் பட்டு இருப்பீர்கள். ஐந்து வயதானபோதே மரணத்தைப் பற்றி அறிந்துகொள்ளும் ஆர்வம் அவனுக்கு வந்துவிட்டது.

மரணத்தின் தலைவன் எமன் என்பதைப் புரிந்துகொண்டு, அவன் இருப்பிடத்தின் வாசலில் போய் அமர்ந்தான். எமன் வந்தான். சாப்பாடு, தண்ணீர் இல்லாமல் ஒரு சிறுவன் பல நாட்களாக அங்கே அமர்ந்திருப்பது கண்டு நெகிழ்ந்தவன், ‘என்ன வரம் வேண்டுமோ, கேள்!’ என்றான்.

‘மரணத்துக்குப் பிறகு என்ன நடக்கும்? அதை அறிந்து கொள்ள வேண்டும்’ என்றான் நசிகேதன்.

‘தேவர்களுக்குத் தருவதெல் லாம் தருகிறேன். வேறென்ன வேண்டுமோ, கேள். தருகிறேன். ஆனால், மரணத்தைப் பற்றி மட்டும் கேட்காதே’ என்று சொன்னான் எமன்.

நசிகேதன் மசியவில்லை.

நசிகேதனைத் தவிர்ப்பதற்காக எமன் பல மாதங்கள் தன் இருப்பிடத்துக்கே திரும்பாமல்கூட இருந்து பார்த்தான். சிறுவன்தானே, எப்படியும் பசி தாங்காமல் புறப்பட்டுப் போய்விடுவான் என்று எமனுக்கு நம்பிக்கை. நீண்ட காலம் கழித்துத் திரும்பி வந்து பார்த்தால், நசிகேதன் அதே இடத்தில் பசி, தூக்கம் பாராமல் காத்திருந்தான். எமன் திகைத்தான்.

‘தேவர்களுக்கும், கடவுள்களுக்கும் கூடத் தெரியாத ரகசியம் அது. நீ ஐந்து வயது பாலகன். அதை உனக்கு எப்படிச் சொல்ல முடியும்?’ என்றான்

எமன். ஆனால், விடை தெரிந்துகொள்ளாமல் போவதில்லை என்ற தீர்மானத்தோடு நசிகேதன் அங்கேயே விடாப்பிடியாக நின்றான்.

அவனுடைய எண்ணத்தின் தீவிரம் காரணமாக, எமனுலகத்தின் வாசலி லேயே அவனுக்கு ஞானம் கிடைத்து விட்டது. அவன் தெரிந்துகொள்ள வேண்டிய அனைத்தையும் அங்கேயே தெரிந்துகொண்டுவிட்டான்.

கடைசி வரை எமன் பதில் சொல்லாமல் போய்விடு வானோ என்று அந்த ஐந்து வயது பாலகனுக்குச் சந்தேகம் வரவில்லை. அவனிடமிருந்த தீவிரம் உங்களிடம் இல்லாத தால்தான் அச்சமும், சந்தேகமும் கூடவே வருகின்றன.

எண்ணங்களால் ஆட்டுவிக்கப் படுகிறீர்கள். ஆனால், அவற்றை எப்படிக் கையாள்வது என்று தெரியாமல் தவிக்கிறீர்கள்.

உங்கள் மீது நம்பிக்கை இல்லாதபோதுதான், முடிவைப் பற்றிய கவலை வருகிறது.

எதைத் திட்டமிட்டாலும், அது நிறைவேறுமா என்ற சந்தேகமும் கூடவே துரத்து கிறது. அதற்காக ஜாதகங்களைத் தூக்கிக்கொண்டு ஜோசியர் களிடம் போகிறீர்கள். நாள், நட்சத்திரம் சரியாக இல்லை என்று ஆசைகளை தள்ளிப் போடுகிறீர்கள்.

கிருஷ்ண தேவராயர் ஒரு முறை எதிரியைத் தாக்கப் படையோடு புறப்பட்டுப் போனார். ஓர் ஆற்றங்கரையைக் கடக்க வேண்டிய நேரத்தில், அரசவை ஜோசியர், ‘மன்னா, இன்றைக்கு நாள் நன்றாக இல்லை. அடுத்த திங்கள்கிழமை போருக்குப் போனால் வெற்றி நிச்சயம்’ என்று சொன்னார். கிருஷ்ணதேவராயர் குழம்பினார். அவ்வளவு நாட்கள் கொடுத்தால், எதிரி உஷாராகிவிடுவான். அவன் எதிர்பாராத நேரத்தில் உடனே தாக்கினால்தான் வெற்றி. ஆனால், ஜோசியர் சொன்ன பின் சந்தேகம் வந்துவிட்டது. தெனாலிராமனிடம் ஆலோசனை கேட்டார்.

தெனாலிராமன் ஜோசியரை அழைத்தான். ‘எல்லோருக்கும் ஆரூடம் சொல்கிறீர்களே, நீங்கள் இன்னும் எத்தனை வருடம் உயிரோடு இருப்பீர்கள் என்று சொல்ல முடியுமா?’ என்று கேட்டான். ‘இன்னும் இருபது வருடங்கள் வாழ்ந்திருப்பேன்’ என்றார் ஜோசியர். தெனாலிராமன் சடக்கென்று வாளை உருவி அவர் கழுத்தில் பதித்து, ‘இந்த விநாடியே உங்கள் ஆரூடத்தை என்னால் பொய்யாக்க முடியுமா, முடியாதா?’ என்று கேட்டான். ஜோசியரின் விழிகள் அச்சத்தில் பிதுங்கின. ‘முடியும்... முடியும்’ என்று அலறினார்.

‘அவ்வளவுதான் மன்னா ஜோசியம்! உங்களுக்கு எதிரான எந்த ஜோசியத்தையும் உங்களால் பொய்யாக்க முடியும்’ என்று புன்னகைத்தான் தெனாலிராமன். கிருஷ்ண தேவராயர் ஆற்றைக் கடந்தார். எதிரியை வெற்றிகொண்டார்.

நீங்கள் தீர்மானமாக இருந்தால், கோள்களால் உங்களை எதுவும் செய்ய முடியாது. வீண் சந்தேகங்களை விலக்கி, உங்கள் மீது நம்பிக்கை வைத்துத் திறமைகளை வளர்த்துக்கொள்ளுங்கள். முழுமையான ஈடுபாட்டுடன் செயல்படுங்கள். தானாகக் கனிந்து வரும் வெற்றிக்கனி!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“எவ்வளவு முயன்றும் சிகரெட் பழக்கத்தை என்னால் கைவிட முடியவில்லையே?”

“எதையாவது வற்புறுத்தி வேண்டாம் என்று சொன்னால், அதுதான் மூளை பூராவும் வியாபித்து நிற்கும். அடுத்த ஐந்து நிமிடங்களுக்குக் குரங்கு என்ற வார்த்தையே எண்ணத்தில் வரக் கூடாது என்று உத்தரவிட்டுப் பாருங்களேன்... ஐந்து நிமிடங்களுக்கு குரங்குகள்தான் உங்கள் எண்ணத்தை ஆக்கிரமிக்கும்.

புகைப்பதையோ, குடிப்பதையோ விட்டொழிக்க முயற்சி செய்வது நல்லதே. அதற்காக வலுக்கட்டாயமாக முயற்சி செய்வதை விடுங்கள். சிகரெட் பிடித்தாலும், மது அருந்தினாலும் அது உங்கள் உடலிலும், குடும்பத்திலும், சமுதாயத்திலும் என்னென்ன கெடுதிகளை உண்டுபண்ணு கிறது என்று அந்தக் கணங்களில் முழுமையான விழிப்பு உணர்வோடு இருங்கள். தேவையற்ற பழக்கங்கள் தாமாகவே உதிர்ந்துபோகும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

வெற்றியைப் பற்றிக் கவலைப்படாமல், செய்வதைத் தீவிரமான விருப்பத்துடன் செய்யுங்கள் என்று ஏன் சொல்கிறேன்?

வெற்றியை எதிர்பார்க்கும்போதே, அது கிடைக்காமல் போய்விடுமோ என்ற அச்சமும் நிழல் போலத் தொடர்ந்து வரும்.

ஒவ்வொரு மனிதனும் தனித்தனியாக மாறினால்
மட்டுமே உலகம் மாற வழி பிறக்கும்!

எதிர்பார்ப்பு எங்கே இருந்தாலும், அங்கே ஏமாற்றத்துக்கும் தயாராக இருக்க வேண்டும். எங்கே ஏமாற்றம் இருக்கிறதோ, அங்கே எரிச்சல் தானாகவே வேகத் தடையாகக் குறுக்கிடும். காத்திருக்கப் பொறுமையில்லாமல் கவனம் சிதறும்.

வெற்றிக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் தருகிறீர்கள் என்று யோசியுங்கள். எதைச் செய்ய வேண்டியிருந்தாலும், இதனால் எனக்கு என்ன பலன் கிடைக்கும் என்றுதான் மனம் முதலில் கணக்குப் போடுகிறது. வெற்றி போல் ஏதாவது ஒன்று வசீகரித்து உங்களை முன்னால் இழுக்க வேண்டும். அல்லது, தோல்வி போல் ஏதாவது ஒன்று பயமுறுத்திப் பின்னாலிருந்து உந்தித் தள்ள வேண்டும்.

கவனமாகப் பாருங்கள். வெற்றியும் தோல்வியும் ஒரே நாணயத்தின் இரு வேறு பக்கங்கள்தான். தனித்தனியே பிரிக்க முடியாதவை. சுண்டி விட்ட நாணயத்தின் எந்தப் பக்கம் விழப்போகிறது என்பது புரியாமல் அந்தப் பதற்றத்தில் வாழ்க்கையை நடத்துவது உங்களுக்குப் பழக்கமாகிவிட்டது. அந்தப் படபடப்பை ரசிக்கக் கற்றுக்கொண்டுவிட்டீர்களே தவிர, முடிவு எப்படியிருந்தாலும் ரசிக்க நீங்கள் கற்றுக்கொள்ளவில்லை.

நீங்கள் நெருக்கமாக நினைப்பவருடன் வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ளக்கூடத் தயாராகத்தான் இருப்பீர்கள். ஆனால், பதிலுக்கு அவர் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று உங்களுக்கு எதிர்பார்ப்புகள் இருந்தால், அங்கே ஏமாற்றத்துக்கான வாய்ப்புகள் அதிகம்.

ஒரே ஒரு காரியம் உங்களுக்குத் தெரியாமல் மறைத்து அவர்செய்வதைக் கவனித்துவிட்டால், அவர் மீது வைத்த நம்பிக்கை போய், மனதில் படக்கென்று சந்தேகம் முளைவிட்டு விடும். எனவே, உங்களுக்கு மிக நெருக்கமானவர்களிடம்கூட எதிர்பார்ப்புகளைவளர்த் துக்கொள்ளாதீர்கள். அதற்காக நம்பிக்கையும், எதிர்பார்ப்பும் இல்லாமல் வாழ்க்கையை எப்படி நடத்த முடியும்? அதுவும் தீவிரமாக!

ஒரே வழிதான் இருக் கிறது... அதன் பெயர் அன்பு!

ஒரு தாய் குழந்தையிடம் காட்டும் பிரியத்தில் முழுமையான தீவிரம் இருக்கும். ஆனால், எதிர்பார்ப்பு இருக்காது.

இரண்டாம் உலகப் போர் நடந்த நேரம். ஜெர்மனியில் சிறைகள் நிரம்பி வழிந்தன. ஒரு குறிப்பிட்ட சிறை முகாமில், கூடுதலாக இருக்கும் கைதிகளில் சிலருக்கு மரண தண்டனை கொடுத்து, எண்ணிக்கையைக் குறைக்க முடிவானது. கைதிகள் எல்லோருக்கும் எண்கள் கொடுக்கப் பட்டன. தினமும் சில எண்கள் அழைக்கப்பட்டன. அந்த எண்களுக்குரியவர்கள் மரண மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டு, சுட்டுக் கொல்லப்பட்டார்கள்.

அப்படியொரு நாள், ரிச்சர்டு என்ற ஒரு கைதியின் எண் அழைக்கப்பட்டது. அவன் சாக விரும்பவில்லை. எனவே, நடுக்கத்துடன் ஒளிந்திருந்தான். அவனுக்குப் பக்கத்தில் கைதியாக வந்திருந்த ஓர் இளம் பாதிரியார் இருந்தார்.

‘உனக்குச் சாக விருப்பம் இல்லையென்றால், நம் எண்களை மாற்றிக்கொள்வோம். உன் இடத்தில் நான் போகிறேன்’ என்றார், அவர் புன்னகையுடன்.

அதற்குச் சம்மதிப்பது ரிச்சர்டுக்கு உறுத்தலாக இருந்தாலும், உயிர் மீது இருந்த ஆசை உடன்பட வைத்தது.

பாதிரியார் மரண மேடைக்கு எந்தத் தயக்கமும் இல்லாமல் போனார். சுட்டுக் கொல்லப்பட்டார். அன்றைக்கு ராத்திரியே அந்தப் பகுதியில் ஜெர்மனி போரில் தோற்றது. கைதிகள் அனைவரும் விடுவிக்கப் பட்டனர். ரிச்சர்டு அதற்குப் பின் பல வருடங்கள் உயிர் வாழ்ந் தான். அவனுடைய உயிர் இன்னொருத்தர் போட்ட பிச்சை என்ற எண்ணம் அவன் மனதை வாட்டியது.

அந்தப் பாதிரியார் அவனுடைய நண்பர் அல்ல. உறவினர் அல்ல. அவர் பெயர்கூட ரிச்சர்டுக்குத் தெரியாது. எந்த எதிர் பார்ப்பும் இல்லாமல் அடுத்தவருக்காகத் தன் உயிரையே விருப்பத்துடன் கொடுக்க அவரால் எப்படி முடிந்தது? ‘அந்தப் பாதிரியார் இறந்துவிட்டாலும், வாழ்க் கையை முழுமையாக வாழ்ந்து விட்டார். தான் உயிருடன் பிழைத்திருந் தாலும் முழுமையாக வாழவில்லை’ என்று ரிச்சர்டு உள்ளுக்குள் உணர்ந்தான்.

இதைச் சொன்னதால், உங்களை இதே போல் யாருக்காகவாவது உயிரைத் தியாகம் செய்யுங்கள் என்று நான் சொல்லவில்லை.

அந்தப் பாதிரியார் தியாகம் என்று நினைத்து எதையும் செய்யவில்லை. அன்பின் அர்த்தத்தை உணர்ந்திருந்தார். அடுத்தவரின் அச்சத்தையும், துன்பத்தையும் களைய அந்தச் சந்தர்ப்பத்தில் செய்யக்கூடியதை எதிர்பார்ப்பில்லாமல் செய்தார்.

எதிர்பார்ப்பு இல்லாமல் எதையாவது தீவிரமாகச் செய்ய வேண்டும் என்றால், அதன் மீது பிரியம் வைக்க வேண்டும். நீங்கள் கவனித்திருக்கலாம்... மிகுந்த அறிவாளி களாக இருப்பவர்களுக்கு அடுத்தவரிடத்தில் அன்பாகச் சிரித்துப் பேசக்கூடத் தெரியாது. அன்பாக இருக்கச் சொன்னால் எதற்காக என்று கேட்பார்கள். பலனைத் தெரிந்து கொள்ளாமல் செயல்பட மறுப்பார்கள். அன்பாக இருப்பதுதான் அடிப்படை புத்திசாலித்தனம் என்பதுகூட அவர்களுக்குத் தெரிவதில்லை.

முடிவைப் பற்றிய சிந்தனை இல்லாமல், செய்வதை முழுமையான பிரியத்துடன் செய்து பாருங்கள். வெற்றியை நினைக்காமல், முழு அர்ப்பணிப்புடன் செய்து பாருங்கள்.

வெற்றியை எதிர்பார்க்காததால், தோல்வி பற்றிய பயம் வராது. பயம் இல்லாத இடத்தில் பதற்றம் இருக்காது. பதற்றமில்லாத இடத்தில் கவனம் சிதறாது. கவனம் சிதறாதபோது, செய்வதிலேயே மகிழ்ச்சி கிடைக்கும். மகிழ்ச்சியுடன் செயல்படும்போது முழுத்திறமையும் வெளிப்பட்டால், வெற்றி நிச்சயம்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“ஆசைப்பட்டது கிட்டத்தட்ட கிடைத்த பின்பும் எனக்குத் திருப்தி இல்லையே?”

“காரணம், நீங்கள் கேட்டதற்கும் கையில் கிடைத்ததற்கும் வித்தியாசம் இருக்கிறது. கனவு காண்பது சுலபம். அதற்குப் போராட்டம் தேவையில்லை. வலியில்லை. வேதனையில்லை. எந்த விலையும் கொடுக்கத் தேவையில்லை.

ஆனால், அதை நிஜமாக்கிப் பார்க்க பலவற்றை இழக்கத் தயாராயிருக்க வேண்டும். வலிகளையும் வேதனைகளையும் தாங்கும் துணிச்சல் வேண்டும். அத்தனை விலை கொடுக்கும்போது எதிர்பார்ப்புகள் இல்லாமல் போகுமா?

எதிர்பார்ப்புகள் இருப்பதால், கேட்டதே கிடைத்தாலும், நாம் கேட்ட மாதிரியே கிடைக்கவில்லையே என்ற ஏமாற்றம் தாக்குகிறது. உங்கள்

வேதனை அதிகமாகிறது.

எதிர்பார்ப்புகள் இல்லாமல் செய்வதை சந்தோஷமாகச் செய்து பாருங்கள். கிடைப்பது எதுவானாலும், அது திருப்தி தரும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

சில சமயம் நீங்களே உணர்ந்திருக்கலாம். எதைப் பார்த்தாலும் வெறுப்பாக இருக்கும். யாரைப் பார்த்தாலும் எரிச்சல் வரும். மனதுக்குள் தோற்றுவிட்டது போல் ஒரு வெறுமை உண்டாகும். அப்படியானால், மனச்சோர்வு என்ற எதிரியை உள்ளே அனுமதித்துவிட்டீர்கள் என்று அர்த்தம்!

மனச்சோர்வு எதனால் வருகிறது... அடிப்படையில் உங்களுக்கு என்ன நிகழ்கிறது?

நீங்கள் விரும்பியபடி யாரோ நடக்கவில்லை. எதிர்பார்த்தபடி எதுவோ நிகழவில்லை. ஆசைப்பட்டபடி வாழ்க்கை அமையவில்லை. சுருக்கமாகச் சொன்னால், உங்களுக்கு என்ன கிடைத்திருக்கிறதோ, அதை ஏற்றுக்கொள்ள முடியாமல், நீங்கள் தவிக்கிறீர்கள். அதை எதிர்க்கிறீர்கள்.

நீங்கள் மனச்சோர்வுடன் இருக்கும்போது எல்லாம், மற்றவர்கள் உங்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள். உங்களுடன் உட்கார்ந்து மற்றவர்களும் அழ வேண்டும் என்று விரும்புகிறீர்கள். இரக்கத்தை யாசிக்கிறீர்கள். என்ன பைத்தியக்காரத்தனம் இது?

உங்கள் விருப்பப்படி எல்லாம் உலகம் ஏன் நடக்க வேண்டும்? நீங்கள் விரும்பியபடியெல்லாம் தங்களை ஏன் மற்றவர்கள் ஏய்த்துக்கொள்ள வேண்டும்?

அகங்காரம் எங்கே இருந் தாலும், அதற்கு அடி விழத்தான் செய்யும். அப்போது, மனச்சோர்வு முளைத்து எழும். அது உங்களைப் பற்றிய நம்பிக்கைகளைத் தகர்த்துவிடும்.

வெளியே இருந்து ஆயுதங்களால் தாக்குபவர்களைக்கூடச் சரியாகக் கையாண்டால், சமாளித்துவிடலாம். மனச்சோர்வு என்பது உள்ளிருந்து கொண்டே, கீறிக் கிழித்துக் குடைந்து உங்களை உபயோகமில்லாமல் அழித்து விடும் விஷ ஆயுதம். உங்களை நீங்களே தாக்கி அழித்துக்கொள்வதைப் போன்ற முட்டாள்தனம் அது!

எதை நினைத்தும் சும்மா வருத்தப் பட்டுக்கொண்டு இருப்பதால், எந்தப் பலனும் இல்லை. வருத்தம் என்பதும், துக்கம் என்பதும் ஆளுக்கு ஆள் மாறுபடும். ஒருவர் தீக்குச்சி பற்றவில்லை என்றாலே துக்கமாகிவிடுவார். இன்னொருவர் வீடே தீப்பற்றி எரிந் தாலும், அலட்டிக்கொள்ள மாட்டார்.

இரண்டாம் உலகப் போர் முடிந்த பின்னர் ஒரு நாள், ஜெனரல் ஐஸனோவர் சொர்க்கத்துக்குப் போனார்.

“வாரக் கடைசியில் நரகத்தைச் சுற்றிப் பார்க்க எனக்கு அனுமதி வேண்டும்” என்று கடவுளிடம் அவர் கோரினார்.

“நரகத்தில் இருப்பவர்கள் சொர்க்கத்தைப் பார்க்க விரும்பினால் அர்த்தம் இருக்கிறது. உனக்கு நரகத்தைப் பார்க்கும் ஆசை எதற்கு?” என்று கேட்டார், கடவுள்.

“அங்கே ஹிட்லர் என்ன வேதனைகளை அனுபவிக்கிறார் என்று பார்க்க வேண்டும்” என்றார் ஐஸனோவர். கடவுள் நரகத்துக்கான பாஸ் கொடுத்தார்.

நரகத்தில் ஹிட்லர் சித்ரவதை செய்யப்படும் முகாமுக்கு ஐஸனோவர் அழைத்துச் செல்லப்பட்டார். அங்கே அசிங்கங்களால் நிரப்பப்பட்ட இரண்டு ஆள் உயரத் தொட்டி ஒன்றில், ஹிட்லர் அமிழ்த்தப்பட்டிருந்தார். தொட்டிக்கு வெளியே தெரிந்த அவருடைய முகத்தில், பிரகாசமான புன்னகையைப் பார்த்து ஐஸனோவர் ஆச்சர்யம் அடைந்தார்.

“சகிக்க முடியாத நாற்றத்தில், அருவருப்பான அசிங்கத்தில் அழுத்தியபோதும், எதைப் பற்றி நினைத்து இப்படி வெட்கமில்லாமல் சிரிக்கிறாய்?” என்று ஹிட்லரிடம் கேட்டார்.

“எனக்குக் கீழே சிக்கிக்கொண்டு இருப்பது யார் தெரியுமா? முசோலினி! அவன் தோள்களில்தான் நான் நிற்கிறேன். அவன் நிலைமையை நினைத்துப் பார்!” என்று ஹிட்லர் பொங்கிப் பொங்கிச் சிரித்தார்.

துக்கம் என்பதும், வருத்தம் என்பதும் ஒருவருக்கொருவர் மாறுபடும். மற்றவருடன் ஒப்பிட்டுப் பார்த்தால் வருத்தம் கூடும் அல்லது குறையும் என்றால், அவை வெளியிலிருந்தா வருகின்றன? இல்லை. உங்கள் மனதுக்கு உள்ளேயேதான் உற்பத்தியாகின்றன.

உங்கள் மனத்தைச் சந்தோஷமாக வைத்துக்கொள்வதோ, சோர்வாக வைத்துக்கொள்வதோ உங்கள் கையில்தான் இருக்கிறது.

நீங்கள் நினைத்தபடி உலகம் நடக்க வேண்டும், மற்றவர்கள் இயங்க வேண்டும் என்று எதிர்பார்க்கும் உங்கள் அகங்காரம் வீண் சுமை. அதைக் காலடியில் போட்டு நசுக்கி விட்டு மேலே தொடரவில்லை என்றால், நீங்கள் வைக்கும் ஒவ்வொரு அடியும் வலிக்கும். ஒவ்வொரு திருப்பத்திலும்

அச்சம் வரும். நம்பிக்கை குறைந்து, மனச்சோர்வு எழும்.

மனச்சோர்வு வரும்போதெல்லாம் மற்றவர்கள் மீது எரிச்சல் கொள்வதை நிறுத்திவிட்டு, அதற்குக் காரணம் நீங்கள்தான் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

உலகத்தின் மீது கோபம் கொள்ளாதீர் கள். உங்கள் குறைகளை உணர்ந்து அவற்றை மாற்றிக்கொள்ளக் கிடைத்த அற்புதமான வாய்ப்பு இது என்று உணருங்கள். வலிகளும், வேதனைகளும் நிரம்பிய அனுபவங்களையே வாழ்க்கைப் பாடங்களாக ஏற்று, உங்களைப் பக்குவப் படுத்திக்கொள்ள வழங்கப்பட்ட வரம் இது!

எதிர்பார்ப்பை வளர்த்துக்கொண்டதால்தான் ஏமாற்றங்கள் என்பதை உணருங்கள். அகங்காரத்தை விட்டொழி யுங்கள். மாற்றுக் கருத்துக்களையும் எதிர்க் காமல் ஏற்கப் பழகுங்கள். அவற்றையே உங்களுக்குச் சாதகமாக மாற்றிக்கொள்வது எப்படி என்று திட்டமிடுங்கள். கிடைக்கும் அனுபவங்களை உங்களுக்குப் பயனுள்ளதாக மாற்றிக்கொள்ளுங்கள்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"நான் கேட்பது எதுவுமே கிடைப்பதில்லையே?"

"ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள். படைப்பில் எந்தச் சக்தியும் உங்களுக்கு எதிராக இல்லை. அதை நீங்கள் கையாள் வதில்தான் அது ஆக்கப்பூர்வமாகவோ, அழிவுப்பூர்வமாகவோ மாறுகிறது.

ஒரு நாள் அதிகாலையில் சூரியன் உதிப்பதைப் புகைப்படம் எடுக்க நினைக் கிறீர்கள். அன்று பார்த்து வானம் பொத்துக் கொண்டு மழை பெய்கிறது. உங்கள் எண்ணம் ஈடேற முடியாமல் போனதை நினைத்து, உலகத்தின் மீதே கோபித்துக் கொண்டு சோர்வாக அறை மூலையில் முடங்கிக்கிடந்தீர்கள் என்றால்,உங்களுக்காகப் பரிதாப்பட்டு இயற்கை தன்னை மாற்றிக்கொள்ளுமா?

அதை விடுத்து, மழையை ஆர்வத்துடன் கவனியுங்கள். ஒருவேளை, அற்புதமான வானவில்லைப் பார்க்கக்கூடிய வாய்ப்பு கிடைக்கலாம். கிடைத்தற்கரிய புகைப் படமாகவும் அது அமையலாம். அப்படியே இல்லையென்றாலும், குவிந்து போயிருக்கும்

வீட்டு வேலைகளைச் செய்து முடிக்க உங்களுக்குக் கொடுக்கப்பட்ட நேரமாக அதை ஏற்றுக்கொள்ளலாமே!

உங்களை மீறிய சக்திகளால், நீங்கள் செய்ய நினைத்ததைச் செய்ய இயலாமல் போகலாம். ஆனால், செய்யக் கூடியதையும் செய்யாமல் சோர்ந்து கிடப்பது, பைத்தியக் காரத்தனம் அல்லவா?"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

ஒரு தூய ஒளியின் வெவ்வேறு தோற்றங்களே,
வானவில்லின் வண்ணங்கள். ஒரு தூய தெய்வத்தின்
வெவ்வேறு வெளிப்பாடுகளே, உலகின் மதங்கள்!

'உலகில் எந்த மதம் உயர்ந்தது?' என்று என்னிடம் கேட்டார்கள்.

உண்மையில், இப்போது மதங்கள் எங்கே இருக்கின்றன? மதங்களின் பெயரால் நடத்தப்படும் கட்சிகள்தானே இருக்கின்றன?

ஒவ்வொரு மதமும் தனி மனிதன் தன்னை உணர, அவன் கவனத்தை உள்நோக்கித் திருப்புவதற்காக உருவானது. ஆனால், மனிதனை மேன்மையுறச் செய்வதைத் தவிர, மற்ற எல்லாவற்றையும் செய்வதுதானே இன்று மதக்கட்சிகளின் நோக்கமாக இருக்கிறது?

தனித்துவிடப்படக் கூடாது என்று நீங்களும் அப்படியொரு கட்சியைச் சேர்ந்தவராகிவிடுகிறீர்கள். அது பிறப்பால் இருக்கலாம். அல்லது நீங்கள் விரும்பித் தேர்ந்தெடுத்ததால் இருக்கலாம்.

எப்படியானாலும், ஒரு பிரிவினரோடு உங்களை அடையாளப்படுத்திக்கொண்டதும், 'உன் கட்சி பெரிதா, என் கட்சி பெரிதா?' என்ற தகராறுக்கு நீங்களும் தயாராகிவிடுகிறீர்கள்.

உண்மையில், மதம் என்பது உலகுக்கு எந்தத் தீங்கையும் சொல்லித் தரவில்லை. எல்லாத் தளைகளிலிருந்தும் விடுபட்டு, உண்மையான சுதந்திரத்துடன் வாழ்க்கையை வாழ்வதற்கான வழிமுறைகளைத்தான் எல்லா மதங்களும் சொல்ல முற்படுகின்றன. ஆனால், அதற்கு நேர்மாறாக

அல்லவா நடக்கிறது! மதம் என்ற பெயரால், ஒரு குறிப்பிட்ட கட்சியோடு உங்களை விலங்கிட்டுக் கொண்டு சுதந்திரத்தை அல்லவா இழக்கிறீர்கள்?

சங்கரன்பிள்ளைக்கு ஆன்மிகப் பாதையில் போக ஆசை வந்தது. இருப்பதிலேயே எந்த மதம் உயர்ந்தது என்று கண்டுபிடித்து, அந்த மதகுருவிடம் சீடராகச் சேர முடிவு செய்தார். நண்பர்களிடம் விசாரித்தார்.

ஒரு நண்பர், தன் மதகுருவிடம் அனுப்பினார். அங்கே போனதும், முதலில் தலைமுடியை மழித்துவிட்டு வரச் சொன்னார்கள். வலதுகாதில் வலிக்க வலிக்க ஓர் ஓட்டை போட்டு, பெரிய வளையம்ஒன்றை மாட்டினார்கள். ஆரஞ்சு நிற உடைகளை அணியச் சொன்னார்கள். அங்கே ஒரு மாதம் தங்கியிருந்தும், தனக்குள் எந்தவொரு மாற்றமும் நிகழவில்லை என்பதை சங்கரன்பிள்ளை உணர்ந்தார்.

இடம் மாற விரும்பி, அடுத்த நண்பரிடம் போனார். அவர் சங்கரன்பிள்ளையைக் காட்டுக்குள் அழைத்துப் போய், அங்கே தன் மதகுருவிடம் விட்டார். 'இங்கே பச்சைத் துணிகளை மட்டுமே அணிய வேண்டும். முடியை வெட்டவே கூடாது. எவ்வளவு நீண்ட தாடி வளர்கிறதோ, அவ்வளவு நல்லது. அப்புறம் ஆபரணங்களே கூடாது!' என்றார் அந்த மதகுரு.

காதில் பழைய புண்ணே ஆறவில்லை. அங்கிருந்து வளையம் நீக்கப்பட்டது. அவர்கள் மத வழக்கப்படி, வேறு இடத்தில் சதையைக் கீறி எடுத்தார்கள். அங்கேயும் புண்ணானது. அந்த மதகுருவிடமும் ஒரு மாதத்துக்கு மேல் தாக்குப்பிடிக்க முடிய வில்லை.

'மலை மேலே இருக்கும் ஆசிரமத்துக்குப் போ. அங்கே இருப்பவர்தான் சிறந்த குரு!' என்று அடுத்த நண்பர் சொன்னார். சங்கரன்பிள்ளை அந்தப் புதிய மதகுருவைக் காண, கால் வலிக்க மலை ஏறினார். ஆசிரமத்தை அடைந்தார்.

அங்கே சீடர்கள் மொட்டை அடித்திருந்தார்கள். தாடி மட்டும் வளர்த்து, இரண்டு காதுகளிலும் வளையங்கள் மாட்டி, மூக்கிலும் துளையிட்டிருந்தார்கள். சங்கரன்பிள்ளை மயங்கி விழுந்தார்.

மதங்கள் மாறினால், ஒவ்வொரு மதகுருவும் உங்களில் ஒரு துளையிட்டு விட்டுப் போவதுதான் நிகழும். வேறெந்த உயர்வும் கிடைக்காது. மதங்களால் பிரச்னை இல்லை; மதக்கட்சிகளை நடத்துபவர்களால்தான் அத்தனை பிரச்னையும்! அரசியல் கட்சி நடத்துபவர்களுக்குத் தான் எத்தனை ஆட்கள் தங்கள் கட்சியில் இருக்கிறார்கள் என்ற எண்ணிக்கை முக்கியம். மதத்துக்கு எங்கே அந்த அவசியம் வந்தது?

மதம் என்ற முகமூடியை அணிந்து கொண்டு, தன் அகங்காரத்தை நிலை நிறுத்தப் பார்க்கும் மனிதர்களுக்குத்தான் எண்ணிக்கைகள் அவசியமாகின்றன.

உள்நோக்கித் தன்னைக் கவனிக்காமல், வெளியே எத்தனை எண்ணிக்கை கிடைத்தது என்று எப்போது கவனம் போகிறதோ, அப்போதே அந்த

மதம் செத்துப்போகிறது.

உங்கள் கடவுள் மேன்மையானவர் என்பதை உலகுக்கு நிரூபிக்க, உங்களை நீங்களே ஏன் நியமித்துக்கொள்கிறீர்கள்? உங்கள் கடவுளுக்கு அதிக சக்தி இருக்கிறது என்று நீங்கள் மனதார நம்பவில்லையா?

உங்கள் பலத் தையும் வற்புறுத் தலையும் வன்முறையையும் சார்ந்துதான் அவருடைய புகழ் பரவும் என்றால், அவர் உங்களைவிடப் பலவீன மானவராக, உங்களைவிடத் தாழ்ந்தவராக அல்லவா ஆகிவிடுகிறார்?

உங்களுக்கு வேண்டியதைச் சாதித்துக்கொள்ள, அவரை ஏன் உங்கள் கட்சி வேட்பாளராக முன்னிறுத்தப் பார்க் கிறீர்கள்?

நீங்கள் கடவுள் பெயரில் நடத்தும் ரசிகர் மன்றங்களுக்கு அவர் துணை இருப்பார் என்று எதிர்பார்ப்பது கேவலம் இல்லையா?

ஆன்மிகம் உன்னதமானது. மனிதனை உய்விக்கப் பிறந்தது. தனக்குப் பின்னால் ஒரு கோடி ஆட்கள் இருந்தால் என்ன, ஒரு ஆள்கூட இல்லாவிட்டால்என்ன?

உண்மையான ஆன்மிகத்தை நினைப்பவனுக்கு எந்த வித்தியாசமும் கிடையாது.

உண்மையில், உங்கள் மதத்தின் அடிப்படை நோக்கத்தைப் புரிந்து கொள்ளுங்கள். அது, உங்களைத்தான் முதலில் கவனிக்கச் சொல்கிறது.

உங்கள் மாற்றத்துக்கு வழி தேடாமல், மற்றவர்களை உங்கள் பக்கம் மாற்றுவதற்கு முயற்சி செய்வது, உங்கள் மதத்தின் குறிக்கோளையே அவமதிப்பதாகும்!

ஒவ்வொரு தனிமனிதனும் மேன்மையானவனாக மாறினால் மட்டுமே ஒட்டுமொத்த உலகமும் மேன்மையடைய முடியும்.

அதனால், எந்தக் கட்சியிலும் சிக்கிக்கொள்ளாமல், உங்கள் மதம் மூலம் உண்மையை உணருங்கள். உயர்வடையலாம்!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

"இத்தனை மதங்கள் இருப்பதால்தானே மனிதர்களுக்குள் போராட்டங்கள்... பேசாமல், எல்லா மதங்களையும் தடை செய்துவிட்டால் என்ன?"

“மதம் சொல்லிக் கொடுப்பதும், மதத் தலைவர் சொல்லிக் கொடுப்பதும் நேர் எதிர் துருவங்களாக இருப்பதுதான் அடிப்படைக் கோளாறு.

ஏதாவது ஒன்றைத் தடை செய்ய முயன்றால், அது தலைமறைவாகச் செயல்பட்டு, இன்னும் தீவிரமாகிறது. அதிக பலத்துடன், அதிக வன்முறையுடன் வெளிப்படுகிறது என்பதைத்தான் உலக வரலாறு சொல்கிறது.

அதனால், ‘மதத்தைத் தடை செய்ய வேண்டும்’ என்று நான் நினைக்கவில்லை. சொல்லப் போனால், ஒவ்வொரு தனிமனிதனுக்கும் பிரத்யேகமானதொரு மதம் இருந்தால் கூடத் தப்பில்லை.

தன் புத்திசாலித்தனத்தை முழுமையாகப் பயன்படுத்தி, மதத்தின் உண்மை யான நோக்கத்தைப் புரிந்துகொண்டால், அவன் தன்னை உணரத் தலைப் படுவான். அடுத்தவருடன் சண்டை பிடித்துக்கொண்டு இருக்கமாட்டான்!”

## சத்குரு ஜக்கி வாசுதேவ்

ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பு வேதங்கள் தழைத்த காலத்தில், இந்தச் சமூகத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் பெரிய அளவில் வித்தியாசங்கள் இல்லை. இருவரும் எல்லாவற்றிலும் சமமாகப் பங்குகொள்ள முடிந்தது.

ஜனகரின் சபையில் யக்ஞவாக்கியர் என்ற பெரும் பண்டிதருக்கும், மைத்ரேயி என்ற பெண்ணுக்கும் ஆன்மிகம் தொடர்பாக வாக்குவாதம் சில நாட்கள் தொடர்ந்து நடந்தது. யக்ஞவாக்கியரின் அத்தனை கேள்விகளுக்கும் மைத்ரேயியால் விடை சொல்ல முடிந்தது. ஆனால், மைத்ரேயியின் சில நுட்பமான கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் யக்ஞவாக்கியர் திணறும் நிலைமை வந்தது. அவமானத்துடன் அவள் பாதங்களில் வீழ்ந்து யக்ஞவாக்கியர் தன்னை அவளுடைய சீடராக ஏற்கும்படி கோரினார் என்று புராணம் சொல்கிறது. அந்த அளவுக்குப் பெண்களின் பெருமை ஓங்கியிருந்த காலம் உண்டு.

ஓர் ஆணால் உணர முடியாத சில நுட்பமான உணர்வுகளை ஒரு பெண்ணால் உணர முடியும். ஆண் தன்னுடைய புத்தியால் செலுத்தப்படுகிறான். பெண்ணோ தன்னுடைய உள்ளுணர்வால் செலுத்தப்படுகிறாள்!

புத்தி என்பது வெளியிலிருந்து சேகரித்தது. எந்தத் தரத்தில் கிடைத்ததோ, அந்தத் தரத்தில்தான் செயல்படும். உள்ளுணர்வு வெளி அழுக்குகளால் அசிங்கப்படாதது, தூய்மையானது. புத்தியைவிட உயர்வானது. அதனால், பெண்கள் ஆண்களைவிட உணர்வுகளில் மேம்பட்டிருக்கிறார்கள்.

அப்புறம் பெண்களுக்கு ஏன் மரியாதை மறுக்கப்படுகிறது?

எந்தக் காலகட்டத்திலும், உடல்ரீதியாக ஆண் என்பவன் பெண்ணைவிட பலம் மிகுந் தவனாக விளங்குகிறான். ஒரு தேசத்துக்குள் வெளியார் படையெடுத்து வர ஆரம்பித்ததும், முதலில் பெண்களைத்தான் குறி வைத்தார்கள். உடலளவில் பலம் குறைந்தவர்களாக இருந்த பெண்களை அந்நியரிடமிருந்து காப்பாற்றும் பொறுப்பு ஆண்களுக்கு வந்தது. பெண்களை வெளியே நடமாடவிடாமல் வீட்டுக்குள் அடைத்துவைக்கும் வழக்கம் அப்போதுதான் ஆரம்பித்தது.

ஆணை முன்னிலைப்படுத்தி சமூக விதிகள் வகுக்கப்பட்டன. அதிகாரத்தை ருசிகண்ட பின் இன்று வரை அதை மாற்ற ஆண் வர்க்கம் விரும்பவில்லை.

ஒரு பெண் பிறக்கும் முன்பே அவளுடைய சுதந்திரத்தைப் பறிக்கவல்ல சாஸ்திரங்களை ஆண் எழுதிவைத்தான். பாரத தேசத்தில் மட்டுமல்ல, உலகின் பல பாகங்களில் ஆண் தன்னை முன்னிலைப்படுத்திக்கொள்ளச் செய்த இந்த தந்திரங்களுக்குப் பெண் பலியானாள். நூறு வருடங்களுக்கு முன்பு, சில ஆசிய நாடுகளில் ஆணைக் கொன்றால் மரண தண்டனை, பெண்ணைக் கொன்றால் பாவ மில்லை என்ற அளவில்கூட சட்டங்கள் அமைக்கப் பட்டி இருந்தன.

இந்தச் சட்டங்களை ஆண்கள் இயற்றியது ஏன்?

அடிப்படையில் பெண்ணை தன்னைவிடத் தாழ்ந்தவளாக அவன் நினைத்துவிட்ட தைரியத் தால் அல்ல. பெண் தன்னைவிட மேன்மையானவள் என்பதைப் புரிந்துகொண்ட ஆழமான அச்சத்தால்.

எதற்காகப் பெண்ணைப் பார்த்து ஆண் பயப்படுகிறான்?

மாபெரும் அறிவாளியாக இருந்த ஒருவனுக்கு, பள்ளிக்கூடம் ஒன்றில் குழந்தைகளுக்கான வகுப்பை எடுக்கும் ஆசிரியர் வேலைதான் கிடைத்தது.

வகுப்பில் ஒரு நாள் ‘இந்த பூமி உருண்டையின் பாரம் எவ்வளவு என்று யாருக்காவது தெரியுமா?’ என்று கேட்டான். மாணவக் குழந்தைகள் பெற் றோர்களைப் போய்க் கேட்டுத் தொந்தரவு செய்தன. பாதிப் பெற்றோருக்குச் சரியான பதில் தெரியவில்லை. குத்துமதிப்பாக ஒரு பதிலைச் சொல்லி அனுப் பினார்கள்.

மறுநாள் வகுப்பில் குழந்தை கள் ஆளாளுக்கு ஒவ்வொரு பதில் சொன்னார்கள்.

“எல்லாமே தப்பு” என்றான் அறிவாளி. கரும்பலகையில் பல இலக்க எண் ஒன்றை எழுதி “இதுதான் பூமியின் உண்மையான எடை” என்றான்.

“சார், எனக்கு ஒரு சந்தேகம்…” என்று ஒரு குழந்தை எழுந்தது. “நீங்கள் சொன்ன எடை பூமியில் வசிக்கும் மக்களோடு சேர்த்தா, மக்கள் இல்லாமலா?”

அறிவாளி பதில் இல்லாமல் திக்கினான். திணறினான். தலைகுனிந்தான்.

எப்பேர்ப்பட்ட அறிவாளியாக இருந்தா லும் புரிந்துகொள்ள முடியாத சில விஷயங்கள் பூமியில் இருக்கின்றன. அவற்றில் முக்கிய மானது பெண்!

உலகின் பல விஷயங்களை விஞ்ஞானப் பூர்வமாக பகுத்துப் புரிந்துகொள்ள ஆணுக்குத் தெரிந்திருந்தது. ஆனால், அவனுக்கு அருகிலேயே இருந்த பெண்ணின் நுட்பமான உணர்வுகளைப் புரிந்துகொள்ள முடியாமல் போனது. புரிந்துகொள்ள முடியாததின் மீது இயல்பாகவே அச்சம் வரும்!

அச்சத்தால் பெண்ணை ஏறிட்டுப் பார்க்க விடாமல், தன் முரட்டுத்தனத்தால் தாழ்த்தி வைத்தான். தன் உடல் வலுவைப் பிரயோகித்து, புத்தியின் தந்திரங்களைப் பயன்படுத்தி, அவளைத் தன் நிழலில் வைத்திருக்க… செய்ய வேண்டியதை எல்லாம் அவன் செய்து முடித்தான்.

பெண்களாவது துணிச்சலுடன் எழுந்து இந்த நிலையை வளரவிடாமல் தடுக்கப் பார்த்தார்களா? இல்லை!

தீவிரமான வாழ்க்கை வாழ்வதை நிறுத்திக்கொண்டு, ஆண்களின் நிழலில் வசதியாக வாழ்வதை அவர்களும் ஏற்றுக்கொண்டார்கள். உண்மையில், ஆணுக்குப் பெண்ணோ, பெண்ணுக்கு ஆணோ தாழ்ந்தவர் இல்லை!

ஆண், பெண் என்று இருவரையும் வித்தியாசப்படுத்திப் பார்க்க வேண்டிய அவசியமே இல்லை. இரண்டு பேரும் இல்லாமல் குடும்பமோ, சமூகமோ, உலகமோ, எதுவுமே முழுமையடையாது!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“மாமியார்–மருமகள் பிரச்னைகளுக்குத் தீர்வே கிடையாதா?”

“பெண்களுக்குத் தங்கள் மதிப்பு புரியாததால்தான் இந்தப் பிரச்னை.

சமூகத்தில் இன்றைக்கு நீங்கள் எப்படிப்பட்ட அந்தஸ்தை அனுபவித்துக்கொண்டு இருந்தாலும், தெருவில் இறங்கி சச்சரவு செய்ய ஆரம்பித்தால் உங்கள் மதிப்பு என்ன ஆகும்? உங்களை நீங்களே தாழ்த்திக்கொள்ளத்தான் முடியுமே தவிர, மேன்மை எப்படிக் கிடைக்கும்?

பெண்கள் தங்களை நடத்திக்கொள்வதில்தான் அவர்களுக்கான மரியாதை கிடைக்கும். முக்கியமாக, ஒரு பெண் அடுத்த பெண்ணை மதிப்புடன்

நடத்தக் கற்றுக்கொள்ளவில்லை என்றால், தனக்கு மட்டும் மதிப்பு கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதில் அர்த்தமில்லை.

உங்கள் மகள்களையும், மருமகள்களையும் நீங்கள் இந்த அபத்தங்களிலிருந்து விடுவிக்கவில்லை என்றால், நாளைய தலைமுறையும் உயரப்போவதில்லை!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

வளைகுடா நாடுகளுக்கு வந்திருந்த ஒரு அமெரிக்க வீரன் அங்கே ஒரு வித்தியாசமான காட்சியைப் பார்த்தான்.

உள்நாட்டைச் சேர்ந்த ஒருவன் தெருவில் நடந்து வர, இருபதடி இடைவெளிவிட்டு நான்கு பெண்கள் அவனைத் தொடர்வதைக் கவனித்தான். விசாரித்தான்.

"நான்கு பேரும் என் மனைவிகள்" என்றான் அவன்.

"என்னது... நான்கு மனைவிகளா? கொடுத்துவைத்தவன் நீ" என்று பொருமிய அமெரிக்கன் கேட்டான்... "அழகாக அவர்கள் புடைசூழ நடக்காமல், ஏன் தனியே முன்னால் நடக்கிறாய்?"

"இங்கே ஆண்களுக்குச் சமமாகப் பெண்கள் உடன் வர முடியாது. பின்னால்தான் தொடர வேண்டும்."

சில நாட்களில் அமெரிக்காவுக்கும் அந்த நாட்டுக்கும் போர் வெடிக்கும் அபாயச் சூழல் வந்தது.

அப்போது, அதே ஆசாமி வெளியே வந்தபோது, அவனுக்கு இருபதடி முன்னால் அந்த நான்கு மனைவிகளும் நடந்து சென்றனர். அமெரிக்க வீரன் ஆச்சர்யமானான்.

"அட, எப்போதிலிருந்து பெண்களுக்கு முன்னுரிமை அளிக்க முடிவு செய்தாய்?" என்று கேட்டான்.

அவன் சிரித்தான். "முன்னுரிமையாவது, மண்ணாங்கட்டியாவது! இந்த அமெரிக்க ராஸ்கல்கள் எங்கெங்கே கண்ணிவெடிகளைப் புதைத்து வைத்திருக்கிறார்களோ? தெரியாமல் மிதித்துத் தொலைத்து விட்டால்? அதனால்தான் பெண்களை முன்னால் அனுப்புகிறேன்."

இதை ஜோக்காகக் கேட்டுவிட்டு சிரிக்கலாம். ஆனால், பெண்களுக்கு எதிராக இதில் ஒளிந்திருக்கும் அநியாயத்தை நீங்கள் தவறவிட மாட்டீர்கள்.

ஆண்கள் வகுத்த சாஸ்திரங்கள், சம்பிரதாயங்களைக் குருட்டுத்தனமாக நம்பி தன்னை மூழ்கடித்துக்கொள்ளும் எந்தப் பெண்ணுக்கும் முழுமையான சுதந்திரம் என்பதன் ருசியே கிடைக்காது.

இன்னொரு பக்கம், ஆண்களைப் போல் உடுத்திக் கொள்வதாலோ, அதிகாரம் செய்வதாலோ, முரட்டுக் காரியங்களில் ஈடுபடுவதாலோ, சுதந்திரம் கிடைத்துவிடுவதாக சில பெண்கள் நினைத்துக் கொள்வதைப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கிறது.

ஆண்களுடைய போலி களாக, பிம்பங்களாக நடந்து கொள்வதில் பெண்களுக்கு என்ன பெருமை இருக்க முடியும்? அவர்கள் தங்களைவிட ஆண்களை உயர்வாக நினைத்து, அந்த உயரத்தை எட்டிப் பிடிக்கப் பார்க்கிறார்கள் என்றல்லவா ஆகிவிடும்?

உண்மையில், வாழ்க்கையை அறிவுப்பூர்வமாக வாழ முற்பட்டு, அதை விட்டு வெகுதூரம் ஆண் விலகி வந்துவிட்டான். வாழ்க்கையை உணர்வுப் பூர்வமாக வாழத் தெரிந்திருப்பதால், பெண்ணின் அனுபவங்களே ஆழமானவை. அது ஆணுக்கு சுலபத்தில் கிடைக்காத ஒன்று. அதனால் ஒரு பெண்ணைத் தன் அருகிலேயே வைத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தை ஆண் புரிந்துகொண்டான். இது புரியாமல், ஆண்களின் நிழலில் இருப்பதைப் பெண்கள் ரசித்தார்கள்.

பெண்ணை மதிக்காத எந்தக் குடும்பமும் உயரப்போவதில்லை. பெண்கள் எந்தத் தரத்தில் வைக்கப் பட்டு இருக்கிறார்களோ, அதைப் பொறுத்துதான் அந்த சமூகத்தின் தரமும் அமையும்.

கோயில்களுக்குள் பெண்களை அனுமதிக்காமல் இருக்க தீட்டு என்று ஒரு புதிய தந்திரத்தைக்கூட ஆண் பயன்படுத்துகிறான். உண்மையில் இயற்கை தந்திருக்கும் சில உடல் மாற்றங்களை அசிங்கமாக நினைப்பதுதான் கேவலம்.

பொதுவாக, வாழ்க்கையில் கிடைக்கும் எதையும் ஆண் தன் புத்தியை வைத்துப் பார்த்துக்கொண்டு இருக்கும் நேரத்தில், பெண் அதை அனுபவித்து உணர்ந்து விடுகிறாள். ஆண் கணக்குப் போட்டுக்கொண்டு இருக்கும் நேரத்தில், பெண் நேரடியாக உணர்வுப்பூர்வமாக வாழ்ந்துவிடுகிறாள்.

ஆண் அறிவுப்பூர்வமாக இருப்பதும் பெண் உணர்வுப்பூர்வமாக இருப்பதும் பெரிய கோளாறு அல்ல... அது அச்சப்பட வேண்டிய பிரச்னையும் அல்ல. உண்மையில், இரண்டும் இணைந்து செயல்பட்டால், பல உன்னதங்கள் கிடைக்கும். அற்புதங்கள் நேரும்!

அப்புறம் கோளாறு எங்கே வந்தது? ஒன்றைவிட மற்றது உயர்ந்தது, அல்லது தாழ்ந்தது என்ற நினைப்புதான் அத்தனை பிரச்னைகளுக்கும் அடிப்படைக் காரணம்.

ஒரு பெண் சந்தோஷமாக இருந்தால்தான் அவளைச் சுற்றியுள்ளவர்களும் சந்தோஷமாக இருக்க முடியும். அதே போல் ஓர் ஆண் மகிழ்ச்சியாக இல்லையென்றால், அவனைச் சுற்றியிருப்பவர்களின் மகிழ்ச்சியும் போய்விடும்.

இயற்கை, ஆணுக்கும் பெண்ணுக்கும் சில அடிப்படைக் காரணங்களுக்காகவே வெவ்வேறு உடல் அமைப்புகளையும், வித்தியாசமான உடல்உறுதிகளையும் வழங்கி இருக்கிறது. இருவருக்கும் உடல்ரீதியாக வெவ்வேறு இன்பங்கள் இருக்கலாம்.

ஆனால், அமைதியும், முழுமையான ஆனந்தமும் உடல் தொடர்பானது இல்லை. ஆணுக்கு வேறு ஆனந்தம், பெண்ணுக்கு வேறு ஆனந்தம் என்று இயற்கை பாகுபாடு பார்க்கவில்லை.

ஆனந்தமாக இருப்பது என்பது மனித குலத்தின் அடிப்படை. இதைப் புரிந்து நடந்துகொண்டால், சமூகத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் எந்த ஏற்றத் தாழ்வும் இருக்காது!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை

“பெண் சுதந்திரம் பற்றி..?”

“சுதந்திரம் என்பது போராடிப் பெற வேண்டிய ஒன்றல்ல. உள்ளுணர்வுடன் அதைக் கவனித்து அனுபவிக்கக் கற்றுக்கொண்டால் போதும்.

நகை, உடை, அலங்காரம், வசதிகள் என்று அற்பமான விஷயங்களில் சுகம் காண்பதை நிறுத்திவிட்டு, மேன்மையான விஷயங்களுக்குப் பெண் ஆசைப்பட வேண்டும்.

ஆண் சமூகம் விளையாடும் விளையாட்டுக்குப் பகடைக்காயாக உருட்டப்பட பெண் ஏன் சம்மதிக்க வேண்டும்? ஆண்களுடைய தந்திரங்களுக்குப் பலியாகி விடாமல், கவனத்துடன் செயல்பட வேண்டாமா?

பெண்கள் உடல் ரீதியாகப் பலவீனமானவர்கள் என்பது பல காரணங்களுக்காக இயற்கை வகுத்த வழி. அதை எதற்காக மாற்ற முயற்சி செய்ய வேண்டும்? அவளைப் போலச் செயல்படும் சக்தி அற்றவனாக ஆண் பின் தங்கியிருக்கிறான் என்பதே உண்மை. அவனைப் போல் நடந்து கொள்ளப் பெண்ணும் ஏன் பின்னால் அடியெடுத்து வைக்க வேண்டும்?

ஆண்களை முன்மாதிரியாக வைத்து பின்பற்றுதலா சுதந்திரம்? அங்கே முதலில் இழப்பது பெண்மையின் மென்மையை. ஒரு பெண் முழுமையான பெண்ணாக இருப்பதல்லவா உண்மையான சுதந்திரம்?

பெண்கள் இல்லையென்றால் இந்த உலகமே இல்லை. தங்களை உடலுடன் மட்டுமே அடையாளப்படுத்திக்கொள்வதை நிறுத்தி விட்டு,

தங்களுடைய உண்மையான சக்தி என்ன என்று அவர்கள் உணரவேண்டும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

உங்களைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருக்க அரசியல்வாதிகள் மட்டுமல்ல... ஜோசியர்களும், சாமியார்களும்கூட ஆசைப்படுகிறார்கள். தங்கள் அன்பினால் உங்களைக் கட்டுப்படுத்தத் தெரியாமல், உங்களுக்குள் ஒரு பயத்தையும் குற்ற உணர்ச்சியையும் உண்டுபண்ண, பாவம் - புண்ணியம், நல்லது - கெட்டது என்றெல்லாம் சொல்லி, உங்களைக் குழப்பி வைத்திருக்கிறார்கள். ‘உங்கள் வெற்றியையும், தோல்வியையும் நிர்ணயிப்பது உங்கள் தலையெழுத்துதான்!’ என்று அடித்துச் சொல்லி, உங்களை நம்பவைத்திருக்கிறார்கள்.

விரும்பியது உங்களுக்குக் கிடைக்கவில்லையென்றால், அதற்கு முழுக் காரணம், நீங்கள்தான். வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்பதை நீங்கள்தான் கவனமில்லாமல் தீர்மானித்திருக்கிறீர்கள். ஆசைப் பட்டதற்கு உரியவராக உங்களை நீங்கள் தயார்ப்படுத்திக்கொள்ளவில்லை. அது உங்கள் தவறுதானே தவிர, விதியின் விளையாட்டல்ல!

தன் கம்ப்யூட்டர் முன் அமர்ந்து, உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்தையும் முன்கூட்டியே திட்டமிட்டுக்கொண்டு இருப்பதைத் தவிர, கடவுளுக்கு வேறு வேலை இல்லையா, என்ன? இந்தக் கதைகளை எல்லாம் நம்ப, நீங்கள் என்ன சிறு குழந்தையா?

பிறப்பின் காரணமாக, வளர்ப்பின் மூலமாக, சில அடிப்படைக் குணங்களை நீங்கள் விரும்பியோ, விரும்பாமலோ பெற்றுவிட்டீர்கள். அந்தக் குணாதிசயங் கள்தான் உங்கள் பாதையைத் தீர்மானிக் கின்றன. அதுகூட ஓரளவுக்குதான். மற்றபடி, கவனத்தோடு செயல்பட்டால், தலையெழுத்து என்று ஒன்று இருந்தாலும், அதை உங்கள் விருப்பப்படி திருத்தி எழுதிக்கொள்ள முடியும்.

தனக்கு எல்லாம் தெரியும் என்று சொல்லிக்கொண்ட ஓர் அறிவுஜீவியிடம் சங்கரன் பிள்ளை வந்திருந்தார்.

“எனக்கு அழகான மகள் இருக்கிறாள். எல்லாவற்றிலும் சிறந்து விளங்குகிறாள். ஆனால், அவளுக்கு ஒரு பிரச்னை. காலையில் எழுந்ததும் மந்தமாக இருக்கிறாள். சாப்பிட்டதையெல்லாம் வாந்தி எடுத்துவிடுகிறாள். இதற்கு என்ன காரணம்?” என்று கேட்டார்.

அறிவுஜீவி கண்மூடிச் சற்று நேரம் யோசித்துவிட்டுக் கேட்டார்... “உன் மகள் பால் குடிப்பதுண்டா?”

“உண்டு. சிறந்த பசுவிடமிருந்து சுத்தமாகக் கறக்கப்படும் மிகத் தரமான பாலை மட்டும்தான் அவளுக்குக் கொடுக் கிறோம்” என்றார் சங்கரன் பிள்ளை.

“அங்கேதான் பிரச்னை” என்றார் அறிவுஜீவி. “வயிற்றுக்குள் போனதும், பால் தயிராகிவிடும். இரவு படுக்கையில் உன் மகள் புரளும்போது, அந்தத் தயிர் கடையப்பட்டு வெண்ணெய் திரளும். உடம்புச் சூட்டில் அந்த வெண்ணெய் உருகி நெய்யாகிவிடும். அந்த நெய் ரசாயன மாற்றத்தால் சர்க்கரையாகிவிடும். அந்தச் சர்க்கரை ரத்தத்தில் கலக்கும்போது ஒரு போதை பிறக்கும். காலையில் அந்த போதை தெளிவதற்குள் எழுந்திருப்ப தால்தான், உன் மகளுக்கு அந்தப் பிரச்னை!”

புரிந்துகொள்ள முடியாத சூழ்நிலைகளுக்கெல்லாம் விதியின் மீது பழியைப் போட்டுத் தப்பித்துக் கொள்வதும், இந்த அறிவுஜீவி சொன்ன காரணத்தைப் போல அர்த்தமில்லாததுதான்!

எல்லாமே விதிப்படிதான்நடக்கும் என்று சில பெரியவர்கள் சொல்வதை நம்பி, உங்கள் பார்வையைக் குறுக்கிக் கொள்வீர்களா? உங்கள் உறுதியை மழுங்கடித்துக் கொள்வீர்களா?

யாருக்கும் வெளிச் சூழ்நிலை எல்லாத் தருணங்களிலும் நூறு சதவிகிதம் விரும்பியபடி அமைந்துவிடுவதுஇல்லை. மாற்ற முடியாத சூழ்நிலையை எதிர்த்து நின்றால், அமைதி காணாமல் போகும். மூளை ஸ்தம்பித்துநிற்கும். மாறாக, அதை உள்ளபடி ஏற்றுக்கொண்டுவிட்டால், அடுத்து என்ன செய்வது என்று புத்திசாலித்தன மாக யோசிக்க முடியும். இதற்காகத்தான் விதி என்று சொல்லி வைத்தார்கள்.

ஆனால் நீங்களோ, விதி என்றால் எதையும் சகித்துக்கொண்டு செயலற்று இருப்பது என்று தவறாகப் புரிந்து கொண்டுவிட்டீர்கள். நான் உங்களை எந்தச் சூழ்நிலையையும் சகித்துக் கொள்ளச் சொல்லவில்லை. சகித்துக் கொள்வது என்பது விருப்பத்தோடு செய்வதல்ல. கட்டாயத்தால் செய்வது.

எனவே அதை விடுத்து, எதையும் அமைதியாக ஏற்றுக்கொண்டு, விதியை உங்களுக்கேற்ப மாற்றிக் கொள்வது எப்படி என்று யோசித்துச் செயலாற்றுங்கள் என்கிறேன்.

நீங்கள் வளர வேண்டுமானால், விதி பற்றிய பயமுறுத்தல்களில்இருந்து முதலில் வெளியே வர வேண்டும்.

‘கடவுளே வந்து சொன்னாலும், என் விதியை நான்தான் தீர்மானிப்பேன்’ என்கிற உறுதி உங்களுக்கு வரவில்லை என்றால், உங்கள் வாழ்க்கை அதன் போக்கில்தான் நடக்கும். விரும்பியதை அடைய வேண்டும் என்ற தீவிரம் உங்களுக்கு இருந்தால், உங்கள் விதியைக் கடவுளிடமிருந்து பறித்து, நீங்களே அதைக் கையாள முடியும்.

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“சிலருடைய தலையெழுத்தை மாற்றவே முடியாது என்கிறார்களே?”

“மழை மலை மீது பொழிகிறது. அருவியாக வீழ்கிறது. கிளை நதி களாகப் பிரிந்து, ஆழங்களைத் தேடி ஓடி, இறுதியில் கடலில் கலக்கிறது.

பிறந்த நிமிடத்திலிருந்தே, நதி கடலுடன் சேர விரும்பிப் பயணம் செய் கிறது என்று சொல்வது கவிதைகளுக்கு தான் உதவுமே தவிர, அது நதியின் தலையெழுத்தல்ல!

வழியில் அணை கட்டித் தடுத்தால், கடலுடன் சேர முடியவில்லையே என்று நதி தற்கொலை செய்துகொள்ளப் போவதில்லை.

நதியைவிட கடலின் மட்டம் சற்று உயர்ந்து அமைந்துவிட் டால், கடல் நதியைத் தேடி வருமா, நதி கடலைத் தேடிப் போகுமா?

ரசிப்பதற் காகத்தான் மிகைப்படுத்தப்பட்ட கதைகளும், கவிதை களும்! அவற்றையே விதிமுறைகளாக நினைத்தால், முட்டாளாகிப் போவீர்கள். விதி பற்றிய கட்டுக் கதைகளை வீசியெறிந்துவிட்டு, எதையும் விழிப்பு உணர்வுடன் கவனித்து, கையாளும் திறமை உங்களுக்கு வந்துவிட்டால், அப்புறம் எந்த விதியாலும் உங்களை அசைக்க முடியாது!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

வாழ்க்கை முழுவதும் வேடதாரியாக
இருந்துவிடலாம்.
ஆனால், மரணம் உங்களைத்
தோலுரித்துக் காட்டிவிடும்!

சிறியவர்களாக இருந்தபோது உடம்பும், மனசும் எப்படி வேண்டுமானாலும் உங்களுக்கு வளைந்து கொடுத் தன. வளர வளர, உங்களை நீங்களே விறைப்பாக்கிக் கொண்டுவிட்டீர்கள்.

இது முன்னேற்றம் இல்லை. உண்மையில் பின்னோக்கித் தான் அடியெடுத்து வைத்திருக்கிறீர்கள். பிறந்தபோதே கைவச மாகி இருந்த ஒரு திறமையை மேலும் வலுப்படுத்திக்கொள்ளாமல், அலட்சியமாகத் தொலைத்துவிட்டீர்கள். காரணம் என்ன?

பிறந்தபோது, ஒரு புது உயிராக, உயிர்ப்புடன் இருந்தீர்கள். இயற்கையைப் பாகுபாடு இல்லாமல் பார்த்தீர்கள். எல்லாவற் றையும் மனதார அனுபவித்தீர்கள். வயது ஏற ஏற, உங்கள் உயிர்த் தன்மையை மறந்து, ‘நான் டாக்டர், நான் இன்ஜினீயர், நான் வியாபாரி, நான் அரசியல்வாதி,

நான் தொழிலதிபர்...' என்று சமூகத்தில் ஓர் அடையாளத்தை ஏற்படுத்திக்கொண்டு விட்டீர்கள்.

எங்கு போனாலும், இந்த அடையாளத்தைச் சுமந்துகொண்டு போவதால், உங்கள் இயல்பை இழந்துவிட்டீர்கள். பிரபலமாகிவிட்டவர்கள் சுதந்திரமாகக் கை வீசி நடக்க வேண்டுமானால்கூட, தங்கள் அடையாளங்கள் பதிவாகாத இடங்களைத் தேடி ஓட வேண்டி இருக்கிறது.

உங்களைப் பற்றிய அடையாளம் எங்கேயிருந்து வந்தது? அது உங்களுடைய இறந்த காலத்து அனுபவங்களைச் சார்ந்தே அமையப் பெற்றிருக்கிறது. அது ஒரு சடலம் போல் தான். தேவையில்லாமல் அதைச் சுமந்துகொண்டு திரிந்தால், ஒரு கட்டத்தில் துர்நாற்றத்தைத் தாங்க முடியாமல் மூச்சுத் திணறிப் போவீர்கள்.

சங்கரன்பிள்ளை தன் குருவிடம் போய் நின்றார்.

"நான் ஒருவனுக்கு மிகவும் நல்லது செய்தேன். ஆனால், அவன் சற்றும் நன்றியில்லாமல் நடந்துகொள்கிறான். அவனைப் பார்த்தாலே என் நிம்மதி போய்விடுகிறதே" என்றார்.

குரு புன்னகைத்தார். "நல்லது நடந்தாலும், கெட்டது நடந்தாலும், அதையே சுமந்துகொண்டு இருக்கக் கூடாது. இனி யாராவது உனக்குக் கெடுதல் செய்தாலோ, நீ நல்லது

செய்தாலோ, உடனே அதைக் கிணற்றில் தூக்கி எறிந்துவிடு. நிம்மதி நிச்சயம்!" என்றார்.

சங்கரன்பிள்ளை தலையை ஆட்டி விட்டு, வீடு நோக்கி நடந்தார். வழியில் பார்வையற்ற ஒரு மூதாட்டி தெருவைக் கடக்க உதவி செய்தவர், சடாரென்று அவளை அருகிலிருந்த கிணற்றில் பிடித்துத் தள்ளிவிட்டார்.

நான் சொன்னதை, அப்படி சங்கரன் பிள்ளையைப் போல் புரிந்துகொண்டு விடாதீர்கள்!

உங்கள் அடையாளத்தை உருவாக் கியது எது? உங்கள் மனம்தான்!

மனம் என்பது என்ன? வாழ்க்கை யைப் பற்றி மற்றவர்கள் சொன்னதையும், நீங்கள் துண்டுதுண்டாகச் சேர்த்த பல அனுபவங்களையும் கவனமில்லாமல் சேகரித்து வைத்திருக்கும் குப்பைத் தொட்டி. மற்றபடி, அதற்கென்று தனித் துவம் எதுவும் கிடையாது.

நீங்கள் முதலாளியாக இருக்கலாம். உங்களுக்குக் கீழ் பணி செய்யும் ஒரு தொழிலாளி சொல்லும் நகைச்சுவைக்கு வாய் விட்டுச் சிரிக்க முடியாமல் முதலாளி என்ற உங்கள் அடையாளம் தடுத்தால், நீங்கள் பரிதாபமானவர். உங்கள் அடையாளங்களோடு அதிகமாக சிடுக்கிட்டுக்கொண்டால், எதிலும் பொருந்த முடியாமல், விறைப்பாகவே இருப்பீர்கள். உங்கள் அகங்காரத்துக்குத் துணை போகும் எதையும்

இப்படி விரட்டாமல் வைத்திருப்பதால்தான், உன்னதமான பல விஷயங்களை நீங்கள் இழக்க நேரிடுகிறது.

சந்தைக்குப் பூக்களை ஏற்றிப்போன வண்டியை, ஒரு குதிரை இழுத்துச் சென்றது. அது, பக்கத்தில் விறகுகள் ஏற்றப்பட்ட வண்டியை இழுக்கும் இன்னொரு குதிரையைப் பார்த்து, 'என்னைச் சுற்றியிருக்கும் வாசனை உன் னிடம் உண்டா?' என்று ஏளனமாகக் கேட்டது.

பூக்களை இறக்கிவிட்டுச் சந்தையில் இருந்து திரும்பும்போது, காலியாக இருக்கும் அதே வண்டியில் தன் வீட்டுக் குத் தேவையான சாணத்தை நிரப்பிக் கொண்டான் வண்டிக்காரன். இப்போது விறகுவண்டிக் குதிரை எதிர்ப்பட்ட போது, இந்தக் குதிரை அவமானத்தில் தலை குனிந்தது.

உங்கள் அடையாளமும் வண்டியில் ஏற்றப்பட்ட சுமை போலத்தான். வண்டி யிலிருந்து எழும் வாசத்தை உங்களிடம் இருந்தே வருவதாக நினைத்து மமதை கொள்ளவும் வேண்டாம்... அவமானப் படவும் வேண்டாம்.

அந்தந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற கவனத்துடன் ஒரு அப்பாவாக, அம்மா வாக, தொழிலாளியாக, முதலாளியாக, அதிகாரியாக... இன்னும் என்னென்ன வோவாக முகமூடியை அணிந்து கொண்டு, இந்த உலகில் நீங்கள் சில காரியங்களைச் சாதிக்க வேண்டியிருக் கிறது. அந்த அளவுக்கு மட்டுமே அதற்கு முக்கியத்துவம் தரப் பழகுங்கள். முகமூடி அணிந்திருப்பதைப் பற்றிய கவனமில்லாமல், அதையே உங்கள் முகமாக நினைக்க ஆரம்பித்தால், ஆபத்தாகிவிடும்.

உங்கள் அடையாளத்தைக் களையத் தயாரானால்தான், உயிரின் உண்மை யான இயல்பை நீங்கள் அறிய முடியும்.வாழ்க்கை முழுமையடையும்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“கச்சிதமாக இருப்பது எப்படி?”

“ஒவ்வொன்றிலும் மிக ராணுவ ஒழுங்குடன், 'ஓ.. அவரா! அவரைப் பார்த்து கடிகாரத்தில் முட்களைத் திருத்தி அமைத்துக்கொள்ளலாமே!' என்று மற்றவர்கள் பேசும்படி நடந்துகொள்ளும் ஒருவரை நீங்கள் பார்த்திருக்கலாம். மிகக் கச்சிதமானவர் என்று அவரை நீங்கள் மதிப்பிட்டிருக்கலாம்.

உண்மையில், அவர் கச்சிதமானவர் மட்டுமல்ல... கல்லானவர். பாறையானவர். மாறுதல்களுக்குத் தயாராக இல்லாத அளவுக்கு உணர்ச்சிகளையும், எண்ணங் களையும் அடிமைப்படுத்தப் பார்த்து, அவற்றின் கழுத்தை நெரிப்பவர். சுதந்திர மான புதிய கருத்துக்களுக்கு இடம் கொடுக்க முடியாமல், தன்னையே விருப்பத் துடன் விலங்கிட்டுக்கொண்டு மூச்சுத் திணறுபவர்.

இயல்பாகக் கிடைக்கக்கூடிய ஆனந் தத்தை அனுபவிப்பதுகூடக் கச்சிதமான வர்களுக்குப் பெரும் பிரயத்தனமாக இருக்கும். ஏன்?

சதுரமான பனிக்கட்டியை வட்டமான பாத்திரத்தில் அடைக்கப் பார்த்தால், அது நொறுங்கும். வடிவிழக்கும். அதுவே உருகி தண்ணீரானதும் ஊற்றிப் பாருங்கள். எந்தப் பாத்திரத்திலும் அதன் வடிவுக்கேற்ப தன்னை மாற்றிக்கொள்ளும்.

அதற்காகத் தண்ணீரின் அடிப்படை குணம் மாறிவிடப் போவதில்லை.

எதற்காகக் கச்சிதமாக இருக்க வேண் டும்? எந்தச் சூழ்நிலையிலும் உங்களை எதிர்ப்பின்றிப் பொருத்திக்கொண்டு, அடிப்படை இயல்பை விட்டுக்கொடுக் காமல் செயலாற்றுவது அல்லவா பெரும் சக்தி?”

சத்குரு ஜக்கி வாசுதேவ்

அத்தனைக்கும் ஆசைப்படு!

இளமையாக இருந்தபோது, பின்னாளில் எப்படி இருக்க வேண்டும் என்று உங்களுக்கு நிறையக் கனவுகள் இருந்தன. உங்கள் வாழ்க்கையை எப்படி அமைத்துக்கொள்ள வேண்டும் என்று லட்சியங்கள் இருந்தன.

பதினெட்டு இருபது வயதில் கண்ட கனவுகள் எல்லாம் பிரமாண்டமாக இருந்தன. இருபத்தைந்து வயதில் வாழ்க்கைக்கு அவசியமானவை பற்றி மட்டும் கனவுகள் தொடர்ந்தன. முப்பது வயதில் கனவுகள் எல்லாம் வறண்டு போய், ‘பெரிதாக எதையும் சாதிக்க வேண்டியதில்லை. இருப்பதைப் பிடுங்கிக்கொள்ளாமல் விட்டால் சரி!’ என்று சமாதானம் செய்துகொள்ளத் தயாராகிவிட்டீர்கள்.

கேட்டால், வயது ஏற ஏற நடைமுறை வாழ்க்கையைப் புரிந்துகொண்டுவிட்டதாகச் சொல்வீர்கள். இல்லை, உண்மை யில் கனவு காண்பதற்குக்கூட நெஞ்சில் ஒரு துணிச்சல் வேண்டும். அதை இழந்துவிட்டீர்கள். அப்படியே கனவு கண்டாலும் அதைக் கையகப்படுத்தும் தைரியமின்றி, கோழைகளாகிவிட்டீர்கள்.

எந்தக் கனவுமே, அது நிறைவேறுமா, நிறைவேறாதா என்ற சந்தேகத்துடன்தான் உங்களால் கவனிக்கப்படுகிறது. அதனால் உங்கள் முயற்சிகள் முழுமையாக இருப்பதில்லை.

சீனாவில் ஒரு ஜென் குரு இருந்தார். அவர் தன் சீடனை அழைத்தார்.

‘நான் குளிப்பதற்குத் தொட்டியில் தண்ணீர் நிரப்பு’ என்றார். கிணற்றிலிருந்து தண்ணீரை இறைத்த சீடன், மர வாளிகளில் நிரப்பி, தோள்களில் சுமந்து போய், குளிக்கும் தொட்டியில் கொட்டினான். வாளியின் அடியில் மிச்சமிருந்த சிறிது நீரைக் கீழே விசிறிவிட்டு, அடுத்த தவணையைக் கொண்டுவர கிணற்றடிக்குப் போனான்.

குரு ஒரு பிரம்பை எடுத்தார். சீடனைப் பொளேர் என்று அடித்தார். ‘எதற்காகத் தண்ணீரை வீணடித்தாய்? அதைச் செடிக்கா வது ஊற்றியிருக்கலாமே?’

சீடன் வலியும் கண்ணீருமாக, வார்த்தைகளில் கோபத்துடன் நிமிர்ந்தான். ‘கீழே கொட்டியது ஒரு டம்ளர் தண்ணீர்கூட இருக்காது. அதை ஊற்றுவதால் செடி வானம் வரை வளர்ந்துவிடப் போகிறதா?’ என்றான்.

‘முட்டாள்! நான் செடியின் வளர்ச்சிக் காகவா சொன்னேன்? உன் வளர்ச்சிக்காகச் சொன்னேன். அரைத் துளியானாலும் அதைக் கேவலமாக நினைக்காமல், அதற்கும் மதிப்புக் கொடுத்து வீணடிக் காமல் இருந்தால்தான், நீ வளர முடியும்!’

ஜென் குரு சொன்னது தன் சீடனுக்கு மட்டு மல்ல... உங்களுக்கும் சேர்த்துதான். உங்கள் கனவு நனவாக வேண்டு மானால், மிகச் சிறிய சந்தர்ப்பத்தைக்கூட அலட்சியம் செய்யாமல் பயன்படுத்திக்கொள்ளத் தயாராகஇருக்க வேண்டும்.

சுதந்திரத்துக்கு முன் நம் தேசத்தில் எல்லோரிடமும் கனவு இருந்தது. அதை நனவாக்கிப் பார்க்க, தங்கள் வாழ்க்கையையே விருப்பத்தோடு பணயம் வைக்கத் தயாராக இருந்தார்கள். அவ்வளவு தீவிரத்துடன் இருந்ததால் தான் சுதந்திரக் கனவு நனவானது. இப்போது தீவிரமாக, வளர்ச்சிக்கான கனவுகள் காண ஆட்கள் இல்லை என்பதுதான் வேதனை.

உங்கள் பிச்சைப் பாத்திரத்தில் இன்று என்ன விழுமோ என்று மற்றவர்களை அண்ணாந்து பார்த்துக் கொண்டு ஏன் உட்கார நினைக்கிறீர்கள்? உங்கள் கனவை நனவாக் கிக்கொள்ள முழுமை யான அர்ப்பணிப்புடன் செயல்படுங்கள். ஆச்சர்ய மான உயரங்களை உங்களால் தொட முடியும்!

ரஷ்யாவில் பாலே நடனம் பிரபலம். லின்கின்ஸ்கீ என்ற கலைஞர், பாலே நடனத் துக்காகத் தன்னையே அர்ப்பணித்திருந்தவர். அவர் பங்குபெறும் நடன நிகழ்ச்சிகளில் சுழன்று ஆடித் துள்ளிக் குதிப்பார். புவியீர்ப்பு விசை எல்லார்க்கும் பொதுவானதுதான். ஆனால், லின்கின்ஸ்கீ துள்ளிக் குதிக்கும் போது, விஞ்ஞானத்தின் விதிகளை மீறி அசாதாரண உயரங்களுக்குப் போய் வருவதைப் பலர் பார்த்து வியந்திருக் கிறார்கள். அவரிடம் இது பற்றிக் கேட்டபோது, அவர் சொன்னார்: ‘என்னால் முடியுமா என்று நான் யோசிக்காத தருணங்களில் என்னையும் மீறிய ஒரு சக்தியோடு செயல்படுவதை உணர்கிறேன்.’

லின்கின்ஸ்கீ சொல்வது உண்மைதான். நூறு சதவிகித ஈடுபாட்டுடன் முயற்சி செய்யும்போது, உங்களையும் மீறியதொரு சக்தி பிறக்கும். முழுமையான ஆற்றல் வெளிப் படும். எதுவும் சாத்தியமாகும்!

உங்கள் கனவை நிஜமாக்க என்ன செய்ய வேண்டும்?

முதலில் அடுத்த ஐந்து வருடங்களில் நீங்கள் என்ன சாதிக்க நினைக்கிறீர்கள் என்று தீர்மானியுங்கள். அதை நோக்கி திட்டமிட்டு அடியெடுத்து

வையுங்கள். ஒவ்வொருஐந்து வருடங்களிலும் உங்கள் கனவு விரிவடைந்துகொண்டே போகட்டும்.

உச்சியை அடைய நினைத் தால், ஏறித்தான் ஆகவேண்டும். கால்கள் வலிக்கும். களைப்பாகும். 'இதெல்லாம் உனக்குச் சாத்தியமில்லை!' என்று மனம் அச்சுறுத்திப் பார்க்கும். 'ஓய்வெடுத்துக்கொள்' என்று சபலம் காட்டும். தளராதீர்கள். செய்வதை முழுமையான விருப்பத்துடன் செய்தால், எந்த வலியும் வேதனை தராது. உச்சியை அடைந்ததும், அத்தனை களைப்பும் சுகமாகும்!

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

"ஒரு ஆண், தகப்பனாகத் தன் குழந்தையிடம் காட்டாத பாசத்தை, தன் பேரக் குழந்தையிடம் மட்டும் காட்டுகிறானே, ஏன்?"

"இந்தப் பிரபஞ்சத்தில் பல நுட்பமான விஷயங்களை அனுபவித்து உணர முடியுமே தவிர, மூளைகொண்டு புரிந்துகொள்ள முடியாது.

இயற்கையிலேயே பெண்களுக்கு இந்த அனுபவம் சாத்தியப் படுகிறது. ஆண் என்ற கர்வத்துடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்பவனோ, தன்னை மூடி மூடி வைத்துக்கொள்கிறான். உண்மை யான அனுபவங்களுக்குத் தன்னைத் தர, அவன் தயாராக இல்லை. வயதாக ஆக, இந்த ஆண் என்ற இறுக்கமான முகமூடி தேய்ந்து உதிர்கிறது. வாழ்க்கையை உணரும் மிருதுவான மனிதனாக மாறும் பக்குவம் அவனுக்குக் கிடைக்கிறது. அதனால்தான், தகப்பனாக இருக்கும் வயதில் தன் சொந்தக் குழந்தையைக் கொஞ்சத் தோன்றாத ஆணுக்கு, மூப்பு வந்த பின்பு பேரனையும் பேத்தியையும் தூக்கி வைத்துக் கொண்டாடத் தோன்றுகிறது!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

'ஈஷா யோக மையம், கிராமப் புத்துணர்வு இயக்கத்தில் இவ்வளவு மும்முரமாக ஈடுபட்டிருக்கிறதே, உங்களுக்கு ஏதாவது அரசியல் உள்நோக்கம் இருக்கிறதா?' என்று என்னை ஓர் இளைஞர் கேட்டார்.

எனக்கு அந்தக் கேள்வி வேடிக்கையாக இருந்தது. வேதனையாகவும் இருந்தது.

'வீட்டுக்குப் போய் உங்கள் தாயிடம் கேளுங்கள்... உங்களைப் பெற்றெடுத்தபோது பால் கொடுத்தாளே, அதற்கு என்ன உள்நோக்கம் என்று? அதே உள்நோக்கம்தான் எனக்கும்!' என்று அந்த இளைஞரிடம் சொன்னேன்.

அவரைச் சொல்லியும் குற்றமில்லை. ஆதாயம் இல்லாமல், உள்நோக்கம் இல்லாமல் எதையும் செய்யத் தயாராக இல்லாதவர்களால் இந்தச் சமூகம்

நிரம்பிவிட்டது. அதனால், யாவற்றையும் சந்தேகத்துடன் பார்ப்பதற்கே சமூகம் பழகிவிட்டது.

வாழ்க்கையைகணத்துக்குக் கணம் முழுமையாக அனுபவித்து வாழ வேண்டுமானால்,குறைவற்ற அன்பைச் செலுத்திப் பாருங்கள். மாறாக, வாழ்க்கையைக் கொடுக்கல் வாங்கலாக மட்டுமே பார்க்க ஆரம்பித்துவிட்டீர்கள் என்றால், உங்கள் நிம்மதி தொலைந்துவிடும்!

எல்லாவற்றிலும் உங்களுக்கான ஆதாயத்தை மட்டுமே தேடிக்கொண்டு இருந்தால், மனதுக்குள் சாத்தானை அனுமதித்துவிட்டீர்கள் என்று அர்த்தம்!

தேவாலயத்தில் ஒவ்வொரு கூட்டத்திலும் அன்பின் மேன்மையைப் பற்றி போதனை செய்யும் ஒரு பாதிரியார், தெருவில் சென்றுகொண்டு இருந்தார். வழியில் ஒருவர் ரத்த வெள்ளத்தில் துடிப்பதைப் பார்த்தார். பதறிப்போய் அவரைப் புரட்டியவர், திடுக்கிட்டார்.

அங்கே உயிருக்குப் போராடிக் கொண்டு இருந்தது வேறு யாருமல்ல, கொடிய சாத்தான்!

பாதிரியார் சட்டென்று பின்வாங்கினார். “என்னை எப்படியாவது காப்பாற்றுங்கள்” என்று சாத்தான் மன்றாடியது.

“என்னது, உன்னைக் காப்பாற்றுவதா? உன்னை இந்த உலகிலிருந்து விரட்டுவதற்குத்தானே அத்தனை பாதிரியார்களும் ஓயாமல் போராடிக்கொண்டு இருக்கிறோம்!”

“பகைவனையும் நேசி என்றுதானே உங்கள் ஏசு சொல்லியிருக்கிறார்? அதை மறந்துவிட்டீர்களா?”

“சாத்தான் வேதம் ஓதலாம். ஆனால், அதைக் கேட்டு ஏமாற நான் தயாராக இல்லை” என்று பாதிரியார் வேகமாக நடக்க ஆரம்பித்தார்.

“எனக்காகச் சொல்லவில்லை. உங்களுக்காகத்தான் சொல்கிறேன். என்னைக் காப்பாற்றவில்லை என்றால், இழப்பு உங்களுக்குத்தான். சாத்தான் என்று ஒன்று இல்லாவிட்டால், கடவுளைத் தேடி யார் வருவார்கள்?” பாதிரியார் மனதில் போராட்டம் துவங்கியது.

“யோசியுங்கள். தேவாலயத்துக்கு மக்கள் வருவதை நிறுத்திவிட்டால், உங்கள் பிழைப்பு என்ன ஆகும்?”

அதற்கு மேல் பாதிரியார் தயங்கவில்லை. சாத்தானை அள்ளிப் போட்டுக்கொண்டு மருத்துவமனைக்கு விரைந்தார்.

பாதிரியாரைக்கூட மசியவைக்கும் கொடுக்கல் வாங்கல்தான், சாத்தானின் சாமர்த்தியமான வியாபாரம்!

வாழ்க்கையைக் கொடுக்கல் வாங்கலாக மட்டுமே பார்ப்பீர்களானால், உங்கள் மனதை சாத்தான் வசம் ஒப்படைத்துவிடுவீர்கள் என்று அர்த்தம்.

அப்புறம் உள்ளும் வெளியும் நரகம்தான். போராட்டம்தான்!

உங்களுக்கு மரியாதை என்பது நீங்கள் எவ்வளவு வெற்றிகரமான வியாபாரி என்பதில் அல்ல. நீங்கள் எந்த அளவுக்கு மனிதத்தன்மையுடன் நடந்துகொள்கிறீர்கள் என்பதில்தான்!

சங்கரன்பிள்ளையின் தானியக் களஞ்சியத்தில் தீ விபத்து ஏற்பட்டு, அங்கு சேமித்து வைத்திருந்த தானியங்கள் எல்லாம் சாம்பலாகிவிட்டன. சங்கரன்பிள்ளை துக்கத்தை மறக்க மதுக்கடைக்குப் போய்விட்டார். அவர் மனைவியோ இன்ஷூரன்ஸ் கம்பெனிக்குக் கோபத்துடன் போனாள். மேனேஜரின் அறையில் புயல் போல் நுழைந்தாள். “எங்கள் தானியக் கிடங்கை ஐந்து லட்சத்துக்கு இன்ஷூர் செய்திருக்கிறோம். அந்தப் பணத்தை உடனே எண்ணி வையுங்கள்” என்று சத்தம் போட்டாள்.

“அம்மணி, நீங்கள் என்ன தொகைக்கு காப்பீடு எடுத்திருக்கிறீர்கள் என்பது முக்கியமில்லை. உண்மையிலேயே, அதற்கு அந்த மதிப்பு உண்டா என்பதைத் தீர்மானித்துவிட்டுதான், நாங்கள் பணத்தை செட்டில் செய்வோம்” என்றார், மேனேஜர்.

சங்கரன் பிள்ளையின் மனைவி யோசித்தாள். “அதுதான் இங்கே விதிமுறை என்றால், என் கணவர் எடுத்திருக்கும் இன்ஷூரன்ஸை உடனே ரத்து செய்யுங்கள்” என்றாள்.

மறக்காதீர்கள்... உங்கள் உண்மையான மதிப்பு, வெளியில் நீங்கள் எவ்வளவு வெற்றிகரமானவராகச் சித்திரிக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதில் இல்லை. உள்ளுக்குள் நீங்கள் எப்படிப்பட்டவர் என்பதில்தான் இருக்கிறது!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“அரசியல்வாதி என்றாலே ஊழல் என்றாகிவிட்டதே?”

“முதலில் ஓர் உண்மையைச் சொல்லுங்கள். போலீஸ்காரர் தென்படாத நேரங்களில் சிக்னலை நீங்கள் மீறுவது இல்லையா? தெருவில் எச்சில் துப்புவது இல்லையா? யாரும் கவனிக்காதபோது, அடுத்த காம்பவுண்டுக்குள் குப்பைகளை வீசுவதில்லையா? ஓட்டை விழுந்த ரூபாய் நோட்டை மடித்துக் கொடுப்பதுஇல்லையா?

உண்மையிலேயே ஊழலற்ற சமூகம் வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், மாற்றத்தை உங்களில் ஆரம்பியுங்கள். அடுத்து, உங்களைச் சுற்றியுள்ளவர்களைச் சுத்தமாக்குங்கள். அவர்கள் தங்களைச் சுற்றியுள்ளவர்களை மாற்றட்டும். இது ராத்திரியோடு ராத்திரி யாக நடந்துவிடாது. கவனத் துடன் நீங்கள் இந்தக் கணத்திலிருந்து உறுதியாகச் செயல்பட்டால், ஊழலற்ற சமூகம் மெள்ள மெள்ள உருவாகும்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

நீங்கள் பிறந்தபோது, உங்கள் உடலின் அளவு எவ்வளவு இருந்தது? இப்போது எவ்வளவு இருக்கிறது? இடையில் அது வளர்ந்து, விரிவடைய என்ன செய்தீர்கள்?

உணவு கொடுத்தீர்கள்!

உங்கள் சாப்பாடு எங்கேயிருந்து கிடைத்தது? இந்த மண்ணிலிருந்து. நீங்கள் சாப்பிட்ட ஒவ்வொரு தாவரமும், தானியமும் இந்த மண்ணாலும், நீராலும்தானே தயாராயின?

நீங்கள் அசைவமென்றால், நீங்கள் சாப்பிட்ட ஆடும் கோழியும்கூட, இந்த மண்ணில் இருந்தவற்றை உண்டுதான் வளர்ந்தன. பின்னர், உங்கள் பசியைத் தீர்த்தன.

ஆக, அடிப்படையில் எப்படியும் இந்த மண்ணால்தான் உங்கள் உடல் உருவாகி இருக்கிறது. உங்கள் உடலில் மண் சேரச் சேர, அதை 'நான்' என்று ஏற்றுக்கொண்டீர்கள்.

ஒரு குவளையில் தண்ணீர் இருக்கிறது. அதுவும் நீங்களும் ஒன்றா? இல்லை என்பீர்கள். அந்தத் தண்ணீரை எடுத்துக் குடித்துவிடுங்கள். அது உங்கள் உடலில் கலந்ததும், அதை என்னவென்று சொல்வீர்கள்? நீங்கள் என்றுதானே?

அதாவது, உங்கள் உணர்ச்சி எல்லைக்குள் வருவதைத்தான் நீங்கள் என்று உணர்வீர்கள். வெளியில் இருக்கும்வரை அது வேறு, நீங்கள் வேறு!

வெளியே இருக்கும் தண்ணீரும், மண்ணும், காற்றும், வெப்பமும் கொண்டுதான் நீங்கள் உருவாக்கப்பட்டு இருக்கிறீர்கள் என்பதை உணர்கிறீர்களா? அவை உங்களில் ஒரு பகுதியான பின், அவற்றைத் தனித்தனியே வித்தியாசப்படுத்திப் பார்க்க முடியவில்லை. மொத்தமாக 'நான்' என்று அடையாளமிட்டு உணர்கிறீர்கள்.

உங்களுடைய மூதாதையர்கள் எங்கே போனார்கள்? புதைக்கப் பட்டாலும், எரிக்கப்பட்டாலும் இந்த மண்ணுக்குள்தான். அவர்கள்மீதுதான் நீங்கள் தினமும் நடை போட்டுக் கொண்டு இருக்கிறீர்கள் என்பதை மறக்காதீர்கள். நீங்கள் மட்டும் எங்கே போகப் போகிறீர்கள்? உங்கள் மூலப் பொருளான இதே மண்ணுக்குள்தான். கொஞ்சம் மண் உங்கள் வடிவத்தில் மூச்சு விட்டுக்கொண்டு இருக்கிறது. இன்னும் கொஞ்சம் மண், உங்கள் தோட்டத்தில் ஓங்கி வளர்ந்து மரமாகி இருக்கிறது. மேலும் கொஞ்சம் மண், நீங்கள் உட்கார்ந்திருக்கும் நாற்காலியாகி இருக்கிறது.

இதே மண்தான் சுழற்சியில் மா மரமாக, வேப்ப மரமாக, புல்லாக, பூவாக, மண்புழுவாக, மனிதனாக... இப்படிப் பலப் பல வித்தியாசமான

அவதாரங்களை எடுத்துக்கொண்டு இருக்கிறது; எடுக்கப் போகிறது.

குடத்தில் பிடித்து வைத்தாலும், சிறு குவளையில் பிடித்து வைத்தாலும், அதைத் தண்ணீர் என்றுதானே அழைப்பீர்கள்? அதே நியாயம்தானே உங்களுக்கும்?

சேகரிக்கப்பட்ட பாத்திரங்கள் வெவ்வேறாயினும், எல்லாவற்றிலும் நிரம்பியிருக்கும் மூலப்பொருள் இதே மண்தானே? இதே தண்ணீர்தானே? இதே காற்றுதானே? இதே வெப்பம்தானே?

எனவே, ஒவ்வொன்றிலும் நீங்கள் இருக்கிறீர்கள், அல்லவா?

சுருக்கமாகச் சொன்னால், இந்தப் பிரபஞ்சத்தில் நீங்கள் ஒரு பகுதி என்பது போல், இந்தப் பிரபஞ்சமும் உங்களில் ஒரு பகுதி என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறதா?

இதை மூளையை வைத்துப் புரிந்துகொண்டால் வியக்கலாம். அவ்வளவுதான். மாறாக, உங்கள் உள்ளுணர்வில் இது மலர்ந்துவிட்டால், உங்களுக்குள் பெரும் மாற்றம் வெடிக்கும். இதுதான் உண்மையான ஆன்மிகம்!

மற்றபடி, ஆன்மிகம் என்றால் கோயில்களுக்குச் சென்று தேங்காய் உடைப்பதல்ல. மெழுகுவத்தி ஏற்றி வைப்பதல்ல. மண்டியிட்டுத் தொழுவது அல்ல.

இதைப் புரிந்துகொண்டால், கடவுளை எதிர்பார்க்காமல், உங்கள் சொர்க்கத்தை நீங்களே தீர்மானித் துக்கொள்ள முடியும்.

ஒரு யோகி மரணப் படுக்கையில் இருந்தார்.

தன் சீடர்களிடம் தான் சொர்க்கத் துக்குப் போக முடிவு செய்திருப்பதாகச் சொன்னார்.

“குருவே, உங்களுக்குச் சொர்க்கமா, நரகமா என்று கடவுளின் மனதில் என்ன இருக்கிறதோ? உங்களுக்கு எப்படி நிச்சயமாகத் தெரியும்?” என்றான் ஒரு சீடன்.

“கடவுளின் மனதில் என்ன இருக்கிறது என்பது எனக்குத் தெரியாது தான்! ஆனால், என் மனதில் என்ன இருக்கிறது என்று அறிவேனே! நரகம் என்று மற்றவர் நினைக்கும் பகுதிக்கு என்னை அனுப்பினாலும், அதையும் சொர்க்கமாகவே கொண்டாட எனக்குத் தெரியும்” என்றார் குரு.

உண்மைதான். உங்கள் உள்ளுணர்வின் அனுபவத்தில் எதையும் சொர்க்கமாக்கலாம் அல்லது நரக மாக்கலாம். அது, வெளிச் சூழ்நிலையின்

விளைவு இல்லை.

நீங்களும் அடுத்ததும் ஒன்றேதான் என்பதை உணர்ந்துவிட்டீர்கள் என்றால், அப்புறம் யாரைப் பார்த்துப் பொறாமை கொள்வீர்கள்? யாருடன் சண்டை போடுவீர்கள்? யாருடன் போட்டி போடுவீர்கள்? யாருடன் பகைமை பாராட்டுவீர்கள்?

இந்த அனுபவம் வந்த பின், வெளிச் சூழ்நிலைகள் எப்படி அமைந்திருந் தாலும், உள்ளுணர்வில் உங்களுக்கு எப்போதுமே சொர்க்கம்தான்!

## குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

"நீங்கள் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்டவரா? உங்களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்?"

"கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்டு இருப்பதாகத் தங்களைச் சொல்லிக் கொள்பவர்கள், அகங்காரத்தின் உச்சியில் இருப்பவர்கள். உண்மையில், அவர்கள்தான் கடவுளிடம் இருந்து மிகத் தொலைவில் இருப்பவர்கள்.

ஞானம் என்பது சிலருக்கு மட்டுமே சாத்தியம் என்று உங்களுக்குச் சொல்லப் பட்டிருந்தால், அதைவிட மாபெரும் பொய் ஏதும் இல்லை. மனிதப் பிறவி எடுத்திருக் கும் ஒவ்வொருவருக்கும் இந்தப் பேருண்மையை அனுபவித்து உணர்தலுக் கான வாய்ப்பு வழங்கப்பட்டு இருக்கிறது.

எனக்குச் சாத்தியமாகும் என்றால், அது உங்களுக்கும் சாத்தியமாகும். எப்படி?

அதற்காகத்தான் யோகா. யோகா என்றால் தலைகீழாக நிற்பதல்ல. இன்னொன்றுடன் ஐக்கியமாவது.

உங்களைப் பிரபஞ்சத்திலிருந்து தனிமைப்படுத்திச் சிறைப்படுத்தி வைத் திருக்கும் கதவின் தாழ் எங்கிருக்கிறது என்று உணர்த்திவிடும் விஞ்ஞானம்தான், யோகா!

உங்களுக்குள்ளே இருப்பதும், வெளியே இருப்பதும் ஒன்றே என்பதை நீங்கள் என்னைப் போல அனுபவப்பூர்வமாக எப்போது உணர்ந்துகொள்கிறீர்களோ, அப்போதே இதன் முன் அனுபவித்திராத பேரானந்தத்தை அனுபவிப்பீர்கள்.

அதன்பின், எனக்கும் உங்களுக்கும் ஏது வித்தியாசம்?"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

இளமை என்பது இயற்கை கொடுத்த அற்புதமான வாய்ப்பு. சிலர் அதைச் சிறப்பாகப் பயன்படுத்தி, சிறந்த மனிதர்களாகிவிட்டார்கள். சிலர் அதைக் குழப்பி, உபயோகமற்றதாக்கிவிட்டார்கள். சிலர் இனி மாற முடியாத அளவுக்குக் கடினமாக உறைந்துவிட்டார்கள்.

இப்போது இருக்கும் இளைய தலைமுறையினர் புதிதாகத் தயாராகிக்கொண்டு இருப்பவர்கள். இளகிய பாகாக இருப்பதால், அவர்களைத் தங்கள் விருப்பப்படி வடிவமைத்துக்கொள்வதற்கு அரசியல்வாதிகள், ஆன்மிகவாதிகள், தீவிரவாதிகள் என்று அத்தனை பேரும் ஆசைப்படுகிறார்கள். இளைஞர்களைத் தங்கள் வசப்படுத்திக்கொள்ள என்னென்னவோ வித்தைகள் புரிகிறார்கள்.

இளைஞர்கள் இந்த உலகுக்குக் கிடைத்த வரமாகவோ, சாபமாகவோ மாறுவது அவர்கள் கையில்தான் இருக்கிறது.

மண்ணில் போடப்பட்ட இரண்டு விதைகள் அதே மண்ணைத் தின்று, அதே தண்ணீரைக் குடித்து வளர்கின்றன. ஆனால், மா மரம் கொடுக்கும் பழத்துக்கும், வேப்ப மரம் கொடுக்கும் பழத்துக்கும் ருசியில் என்னவொரு அபாரமான வித்தியாசம்!

நாம் அனைவரும்கூட ஒரே உயிர் மூலத்திலிருந்து வந்தவர்கள்தான். ஒரே மண்ணைத்தான் தின்கிறோம். ஒரே நீரைத்தான் குடிக்கிறோம். ஒரே காற்றைத்தான் சுவாசிக்கிறோம். ஆனால், வழியில் எதையெல்லாம் சேகரித்து நம் உள்ளடக்கத்தை அமைத் துக்கொள்கிறோமோ, அதைப் பொறுத்துதான் நம்முடைய உண்மை யான மதிப்பு வெளிப்படும்.

நகரத்தின் மையத்தில் இருவர் எதிரெதிரே வந்துகொண்டு இருந்தனர். ஒருவன் தன் வலது காலை இழுத்து இழுத்து நடந்து வந்தான். எதிரில் வந்தவனும் அதே போல் வலது காலை இழுத்து இழுத்து நடந்தான். அவர்கள் இருவரும் நெருக்கத்தில் வந்தனர்.

முதலாமவன் தன் வலது காலை பெருமையுடன் தட்டிக் காட்டினான். “இந்திய ராணுவம். எல்லைப் போர் 1971. காலில் வெடித்தது கண்ணி வெடி” என்றான்.

எதிரில் வந்தவன் சளைக்கவில்லை. அவனும் தன் காலைத் தட்டினான். “தெருத் தெருவாய்ப் பிச்சை. ஐம்பதடிக்கு முன்னால்... காலில் மிதித்தது எருமைச் சாணம்” என்றான்.

தொலைவில் இருந்து பார்த்தால், இருவரும் காலை ஊன்ற முடியாமல் வருவது மட்டும்தான் தெரியும். ஆனால், காரணம் அறிந்த பின், இருவர்

மீதும் ஒரே மரியாதை வருமா?

கவனமில்லாமல் சேகரிப்பதால்தான், மனிதன் தனக்குச் சம்மதமில்லாத குணங்களையெல்லாம் சொந்தமாக்கிக் கொள்கிறான். பொருத்தமில்லாத பாதைகளில் எல்லாம் சுய விருப்பம் இல்லாமல் பயணமாகிறான்.

பயணத்தின் துவக்கத்தில் இருக்கும் இளைஞர்களுக்கு இந்த கவனம் வந்து விட்டால், வழியில் எதைச் சேகரிப்பார்கள்? அற்பத்தையா... அற்புதத்தையா?

போர்க்காலத்தில் பீரங்கிகளைத் தயாரிப்பவர்கள் பெரும் பணக்காரர்கள் ஆவார்கள். பஞ்ச காலத்தில் தானியங் களைப் பதுக்கிவைத்தவர்கள் செல்வந்தர்கள் ஆவார்கள். கம்ப்யூட்டர் பிரபலமாகும்போது அதில் அறிவு பெற்றவர்கள் நிறையச் சம்பாதிப் பார்கள்.

கடல் அலை ஒரு காகிதத்தை உயர்த்திக்கொண்டு போகும். அதைக் கீழே போடும். ஒரு மரக்கட்டையைத் தூக்கும். அதையும் கீழே எறியும். அடுத்து, ஒரு குப்பையை மேலே உயர்த் திச் செல்லும். அலையில் மிதக்கும் பொருளும், அலையின் போக்குக்குத் தக்கபடி எழும்பும். தாழும். வீழும்.

அதே போல், சமூகத்தில் எந்த அலை வீசுகிறதோ, அதற்கான கல்வியை முடித்துத் தயாராக இருப்பவர்களை அது மேலே இழுத்துக்கொண்டு போகிறது. சாப்பாட்டுக்குச் சுலபமாக வழி பிறக்கலாம். ஆனால், அதுவா உண்மையான வெற்றி? காகிதமோ, குப்பையோ மேலே எழும்புவதை வெற்றி என்று கொண்டாடலாமா? கீழே வீழ்வதை தோல்வி என்று வருத்தம்கொள்ளலாமா? அப்படித்தான் இன்றைய இளைஞர்களின் வெற்றி, தோல்விகளும் அர்த்தமற்று அமைந்து விட்டன.

படிப்பு ஏறவில்லையா? வியாபாரத் தின் நுணுக்கம் புரியவில்லையா? ஏதாவது உங்கள் கைமீறிப் போகும் போல் இருக்கிறதா? இளைஞர்களே, இனி அதற்கெல்லாம் கடவுளைத் துணைக்குக் கூப்பிடாதீர்கள். நம் முட்டாள்தனங்களைப் பழுதுபார்ப்பதற் காக அவர் வெட்டியாக உட்கார்ந்திருக்க வில்லை.

எது வேண்டுமோ, முதலில் அதன் மீது ஆசையை வளர்த்துக்கொள்ளுங் கள்.ஆசையோடு சாப்பிட்டால்தான் ருசி தெரியும். ஆசையோடு பார்த்தால் தான் அழகு தெரியும். ஆசை சந்தோஷத்தைத்தான் கொண்டு வந்து தரும். எந்த வேலையையும் ஆசையோடு செய்தால்தான் முழுத் திறமை வெளிப்படும்.

ஆசை என்பதை கவனத்துடன் பயன்படுத்தக் கற்றுக்கொண்டீர்கள் என்றால், அவற்றை நிறைவேற்றித் தர கடவுள் தேவையில்லை.

கவனத்துடன் ஆசையைப் பயன் படுத்துவது என்றால் என்ன?

குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

“வயது ஏறாமல் இளமையாகவே இருக்க வேண்டும் என்று விரும்பு கிறேன். முடியுமா?”

“உங்கள் உடலை எங்கே பெற்றீர்கள்? தினம்தினம் நீங்கள் சுவாசித்த காற்று, அருந்திய நீர், உட்கொண்ட உணவு இவற் றின் சேகரிப்புதான் உடல். தேவையில்லை என்று ஒரு நாள் சேகரிப்பைக்கூட நீங்கள் உடலிலிருந்து உரித்து எறிய முடியாது. எனவே, நாள் ஒன்று போனால், வயது ஒன்று கூடித்தான் போகும்.

உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளலாமே தவிர, அதன் வயதில் ஒரு நாளைக்கூட உதற முடியாது.

மனதை எங்கே பெற்றீர்கள்? பிறந்ததில் இருந்து உங்கள் சுற்றுப்புறம் உங்கள் மீது வீசி எறிந்த கருத்துக்கள், நீங்கள் கற்ற கல்வி, பெற்ற அனுபவங்கள், சமூகத்தால் சுமத்தப்பட்ட எண்ணங்கள் எல்லாம் சேகரிக்கப்பட்ட குப்பைத் தொட்டியாகத்தான் மனம் இருக்கிறது.

எல்லாவற்றையும் வைத்துக்கொண்டே ஆக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் உங்களுக்குக் கிடையாது. எதையெல்லாம் நீக்கலாம் என்பது உங்கள் கையில்தான் இருக்கிறது. சேகரித்தது எல்லாவற்றையும் கூட நீங்கள் நினைத்தால் ஒரே கணத்தில் உதறிவிட முடியும்.

தேவையற்றதை நீக்கி, மனதை தினம் தினம் புதிதாகப் பிறப்பிக்கும் சுதந்திரமும், அதன் வயது ஏறாமல் என்றென்றும் இளமையாக வைத்துக்கொள்ளும் வாய்ப்பும் உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

முறையான யோகாவால் இது சாத்தியம். தவற விடாதீர்கள்!”

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

உங்களுக்கு மிகச் சிறந்த சாம்ராஜ்யம் கிடைத்தாலும், முழுமையான திருப்தி இல்லாமல் உள்ளுக்குள் ஒரு ஏக்கம் இருப்பதை உணர்ந்திருக் கிறீர்களா? என்ன கிடைத்தாலும் சரி, இன்னும் கொஞ்சம்... இன்னும் ஏதாவது என்று எப்போதுமே ஓர் ஆசைத் தீ உங்களுக்குள் எரிந்து கொண்டே இருப்பதைக் கவனித்திருக்கிறீர்களா?

ஏன் இப்படி?

அளந்து பார்க்கக்கூடிய எதைக் கொடுத்தாலும், உங்களுக்குத் திருப்தி வரப் போவதில்லை. உண்மையில் உங்கள் தவிப்பு, கிடைப்பதையெல்லாம் கைவசப்படுத்திக்கொள்வதற்காக எழுந்ததல்ல! பின்னே?

எல்லையில்லாத பிரபஞ்சத்தின் அங்கமாகிய நீங்கள், கவனமில்லாமல் உங்களை ஓர் எல்லைக்குள் அடையாளப்படுத்தி அடக்கப் பார்த்ததால் வந்த விளைவு இது.

விரிவடைந்து விரிவடைந்து எல்லையில்லாததுடன் கலந்துவிடத் துடிப்பதால்தான், வேறு எதைக் கொடுத்தாலும் உங்கள் ஆசை முழு திருப்தி வராமல் குறைபட்டுக்கொள்கிறது. இந்த அடிப்படையைக் கவனமாகப் புரிந்துகொண்டால், துன்பத்துக்கு வாய்ப்பே இல்லை.

இந்தப் பிரபஞ்சமும், நீங்களும் ஒன்றே என்பதை அனுபவப்பூர்வமாக உணர்ந்ததும், ஆசை சட்டென்று அதன் தவிப்பை விட்டுவிடும்.

அதன் பின், ஆசை என்பது வெளியில் இருந்து வரும் ஒரு வற்புறுத்தலாக இல்லாமல், உள்ளார்ந்த விருப்பமாக மட்டுமே இருக்கும். ஆசை உங்களைச் செலுத்தாது. நீங்கள் ஆசையைச் செலுத்துவீர்கள். எப்படி?

கிரிக்கெட் ஆட வேண்டும் என்று முடிவு செய்கிறீர்களா? அதற்கான ஆசையை முழுமையாகப் பயன்படுத்து வீர்கள். வியாபாரத்தில் வெற்றி பெற விரும்புகிறீர்களா? அதற்கான ஆசை யைப் பயன்படுத்துவீர்கள். எதைச் செய்தாலும், அதனுடன் இருக்கும் நிமிடங்களில் உங்கள் வாழ்க்கையே அதுதான் என்பது போல், பூரணமான ஆசையுடன் இயங்குவீர்கள். அந்தந்த ஆட்டம் முடிந்ததும், அதற்கான ஆசை யைச் சுருட்டி வைத்துவிடுவீர்கள்.

வண்டியை குதிரைக்குப் பின்னால் கட்டினால், பிரச்னையில்லாமல் இழுத்துப் போகும். மாறாக, வண்டியை குதிரைக்கு முன்னால் வைத்துக் கட்டி இழுக்கச் சொன்னால்..? குதிரையின் திறமையும் வீணாகும்... வண்டியும் தடம் புரண்டு போகும்!

சந்தோஷமும் ஆசையும்கூட குதிரை யும் வண்டியும் போலத்தான்! ஆசை யினால் சந்தோஷம் கிடைக்கும் என்று நினைக்காமல், உங்கள் சந்தோஷத்தின் ஒரு வெளிப்பாடாக ஆசையைப் பயன்படுத்திப் பாருங்கள்.

சங்கரன்பிள்ளை கடுமையான இதய வலியால் தாக்கப்பட்டார்.

“காலை வரை தாக்குப் பிடித்தாலே ஆச்சர்யம்” என்று டாக்டர் சொல்லி விட்டார். சங்கரன்பிள்ளையின் மனைவி கொஞ்ச நேரம் அழுதாள். தன் கணவருக்கு கேரட் அல்வா என்றால் பிரியம் என்பது அவள் நினைவுக்கு வந்தது. மறுநாள் அதற்கெல்லாம் நேரமிருக்காது. அவர் போட்டோவின்

முன் படைப்பதற்காக இரவே அதைத் தயார் செய்து, ஃபிரிஜ்ஜில் வைத்தாள். பின்பு, அழுது அழுது களைப்புடன் படுத்து உறங்கிவிட்டாள்.

சங்கரன்பிள்ளைக்கு இரவு விழிப்பு வந்தது. ஃபிரிஜ்ஜைத் திறந்தார். கேரட் அல்வா கண்களில் பட்டதும், நாக்கில் எச்சில் ஊறியது.

அல்வாவை ஆசையுடன் ஒரு ஸ்பூனில் எடுத்தார். பொட்டென்று அவர் கையில் ஓர் அடி விழுந்தது. திரும்பினால், மனைவி கோபத்துடன் நின்றிருந்தாள்.

"உங்களுக்குப் படைப்பதற்கென்று வைத்திருப்பதை இப்போதே எடுத்துத் தின்றால் என்ன அர்த்தம்?" என்று உறுமினாள்.

விரும்பியதை நோக்கிச் செயலாற்றும்போதே ஆனந்தத்தை அனுபவிக்காமல், அதன் முடிவில்தான் ஆனந்தம் கிடைக்கும் என்று காத்திருப்பது, உயிரோடு இருக்கும்போது சாப்பிடவிடாமல், படையலுக்காக வைத்திருப்பது போலத்தான்!

முடிவுக்கு ஆசைப்படுவதை விடுத்து, செயலாற்றுவதற்கே ஆசைப்பட்டுப் பாருங்கள். ஆனந்தத்தின் வெளிப் பாடாக ஆசையை வளர்த்துக்கொண்டு கவனியுங்கள். துன்பம் என்ற பேச்சுக்கே இடமிருக்காது. உங்கள் சந்தோஷம் என்பது அப்புறம் வெற்றியா, தோல் வியா என்கிற முடிவுக்காகக் காத்திருக்காது!

### குருவிடம் ஒரு குறுக்கு விசாரணை!

"யோகாவினால் நன்மை கிடைக்கும் என்று உத்தரவாதம் தர முடியுமா?"

"பரிபூரணமாக!

யோகா என்பது தலைகீழாக நிற்பதோ, பல கோணங்களில் உடலை வளைப்பதோ அல்ல. அது யோகாசனம். அது யோகாவில் ஒரு சிறு பகுதி. அவ்வளவுதான்!

யோகா என்றால், வித்தியாசங்களைக் களைந்து, மற்றதுடன் ஐக்கியமாவது.

40 ஆயிரம் வருடங்களுக்கு மேலாகவே யோகப் பயிற்சி அளிக்கப்பட்டதற்கான சான்றுகள் நம்மிடம் இருக்கின்றன. நிச்சயமான வெற்றி இல்லாமலா பல்லாயிரம் வருடங்களாக யோகா தனக்கென்று ஓர் இடத்தைத் தக்க வைத்து இருக்க முடியும்?

சென்ற நூறு தலைமுறைகளில் நாகரிகங்களும், கலாசாரங்களும், மொழிகளும் எத்தனையோ விதமாகப் புரண்டுவிட்டன. ஆனால், யோகா

சற்றும் மதிப்பிழக்கவில்லை. முறையான யோகா ஒரு விஞ்ஞானம்!

பல்பு எப்படி வேலை செய்கிறது என்பதைப் பள்ளிக்கூடத்தில் கற்றுக் கொள்ளாதவன் சுவிட்சைப் போட்டாலும் விளக்கு எரியும்.

யோகாவும் அதைப் போலத்தான். கல்வியோ, கல்லாமையோ அதற்குப் பொருட்டல்ல. குறிப்பிட்ட கலாசாரத்துக்கோ, ஒரு மதத்துக்கோ அது அடிமை அல்ல. எந்தவொரு குழுவையும் அது சார்ந்து இருக்கவில்லை. எந்த தெய்வ நம்பிக்கையும் அதற்குத் தேவையில்லை.

'ஈஷா'வில் யோகாவை அப்படித்தான் வழங்குகிறோம். எதனுடனும் தன்னைப் பிணைத்துக் கொள்ளாத காரணத்தாலேயே யோகா தனி மகத்துவம் கொண்டு இருக்கிறது.

நீங்கள் ஆணா, பெண்ணா... கறுப்பா, சிவப்பா... இந்தியனா, அமெரிக்கனா... என யோகா கவலைப்படுவதில்லை. நீங்கள் எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும், முறையான யோகா மிகச் சரியாகவே வேலை செய்யும்.

உலக சரித்திரத்தில் அது தோற்றதே இல்லை. அது எண்ணற்றவர்களுக்கு வேலை செய்திருக்கிறது. எனக்கும் வேலை செய்திருக்கிறது. உங்களுக்கும் வேலை செய்யத் தவறாது!

யோகா துணையிருந்தால், நீங்கள் விரும்பியதை விரும்பியபடி உருவாக்கிக் கொள்ள முடியும்.

இன்னும் என்ன யோசனை?

வாருங்கள், யோகாவின் அற்புதக் கதவுகள் அகலமாகத் திறந்து உங்கள் வரவுக்காகக் காத்திருக்கின்றன!"

## அத்தனைக்கும் ஆசைப்படு!

சத்குரு ஜக்கி வாசுதேவ்

"'ஆசை கொள்ளாதே!' என்று புத்தர் சொன்னார். ஆனால், நீங்களோ 'அத்தனைக்கும் ஆசைப்படு' என்று சொல்கிறீர்கள்! ஏன் இந்த முரண்பாடு?" என்று என்னிடம் பலர் கேட்கிறார்கள்.

தன் வாழ்நாளில் அத்தனை மனிதர்களுக்கும் ஞானம் கொடுத்துவிட வேண்டும் என்று ஆசைப்பட்ட புத்தரா, மற்றவர்களை ஆசைப்பட வேண்டாம் என்று சொல்லி இருப்பார்? ஒருக்காலும் இருக்காது!

உங்கள் ஆசைகள் மிகப் பெரிதாகவே இருந்துவிட்டுப் போகட்டும். அவற்றை அடைய நீங்கள் நூறு சதவிகித ஈடுபாட்டுடன் செயலாற்றுங்கள். கவனத்துடன் ஆசையைக் கையாண்டால், நினைத்ததைச் சாதிக்கலாம்!

ஆசை என்பது துன்பமில்லை. அதைப் பற்றிய அறியாமைதான் துன்பம். இதைப் புரிந்துகொள்ளாமல், அந்த ஆசையை ஒரு வியாபாரத்தின் மீதோ, மண்ணின் மீதோ, அடுத்தவர் மீதோ, ஆன்மிகத்தின் மீதோ, அதிகாரத்தின் மீதோ அடையாளப்படுத்திப் பார்த்தால் நிறைவு வராது. அதிருப்திதான் மிஞ்சும்.

இந்த அறியாமையை எப்படிக் களைவது?

முறையான யோகாவின் மூலம் குறுகிய எல்லைகளை உடைக்க முடியும். பேரானந்தத்தை ருசித்துப் பார்க்க முடியும். உங்கள் உச்சபட்ச சக்தியை உயிர்ப்பித்துவிட்டால், அப்புறம் வியாபாரமோ, குடும்பமோ, ஆன்மிகமோ எதை வேண்டுமானாலும் உள்காயம் இல்லாமல் முழுமையாக விளையாடிப் பார்க்க முடியும்.

உள்ளுணர்வில் இந்த அனுபவம் கிடைக்கும் வரை, வெளியிலிருந்து சேகரித்த திறமைகளை மட்டுமே வைத்து விளையாட முடியும்.

ஆசைப்பட்டதில், உங்கள் திறமைக்கேற்றவைதான் கிடைக்கும். ஆனால், ஆசையோடு நீங்கள் செயலாற்றத் துவங்கிவிட்டால், அதுவே உங்களுக்கு மகிழ்ச்சியைக் கொண்டு தரும். தோற்றாலும் துன்பம் வராது. கிடைத்த ஆயிரம் விஷயத்தை மறந்து விட்டு, கிடைக்காத ஏதோ ஒரு விஷயத்துக்காகத் தற்கொலை செய்து கொள்வது போன்ற முட்டாள்தனமான எண்ணங்கள் ஒருபோதும் உங்களை நெருங்காது.

எல்லோருக்கும் ஒரே அளவு பணமோ, பதவியோ, அதிகாரமோ, வசதியோ கிடைப்பது வேண்டுமானால் சாத்தியமில்லாமல் இருக்கலாம். ஆனால், எல்லோருக்கும் உள்ளுணர்வில் ஒரே அளவு ஆனந்தம் கிடைப்பதை யார் தடுக்க முடியும்?

ஆசையின் அடிப்படை புரியாதவர்கள்தான் இந்த வியாபாரம் வேண்டும், இந்த வீடு வேண்டும், இந்தப் பெண் வேண்டும் என்று குறுகிய வட்டத்துக்குள் அடங்கிப் போகும் அற்ப ஆசைகளை வளர்த்துக்கொள்வார்கள்.

அப்படி, ஏதோ குறிப்பிட்ட ஒன்றுக்கு மட்டும் ஆசைப்படாமல், அத்தனைக்கும் ஆசைப்பட வேண்டுமென்றால், அதை முழுமையான கவனத்துடன் மட்டும்தான் செய்ய வேண்டும். அப்படி முழுமையான கவனத்துடன் வாழத் துவங்கி விட்டீர்கள் என்றால், எதையும் உங்களுடையது என்று சொந்தம் கொண்டாடுவதை விட்டுவிட்டு, எல்லாமே நீங்கள்தான் என்று உணர்ந்துகொள்ள முடியும்.

அதனால்தான், அத்தனைக்கும் உங்களை ஆசைப்படச் சொன்னேன். கவனத்துடன் அத்தனைக்கும் ஆசைப்பட்டால், உங்கள் வாழ்க்கையைப்

பூரணமாக உங்கள் விருப்பப்படி அமைத்துக்கொள்ள முடியும்!

ஆசை விரிவடைந்து விரிவடைந்து பிரபஞ்சத்தையே உள்ளடக்கிக் கொள்ளும் தருணம் வந்ததும், பேரானந்தத்தை நீங்கள் ருசிக்க முடியும்.

புத்தருக்குக் கிடைத்த ஞானம், எனக்குக் கிடைத்த ஆனந்தம் இங்கே இருக்கும் ஒவ்வொருவருக்குமே சாத்தியம்!

எனவே, அத்தனைக்கும் ஆசைப்படுங்கள்!

ஆசிகளுடன்,




ஈஷா யோக மையம்

சத்குரு ஜக்கி வாசுதேவ் நிறுவிய ‘ஈஷா யோக மையம்’ கோவை, வெள்ளியங்கிரி மலையடிவாரத்தில் செயல்படுகிறது.



மதங்களுக்கு அப்பாற்பட்ட தியான லிங்கம் என்னும் மிகச் சக்தி வாய்ந்த சன்னிதியை இங்கே சத்குரு எழுப்பியுள்ளார்.

தமிழ்நாட்டில் பெரும்பாலான ஊர்களி லும், மற்ற மாநிலங்களில் பெரிய நகரங் களிலும் ஈஷா யோக வகுப்புகள் தொடர்ந்து நடத்தப்படுகின்றன.

முகவரி: ஈஷா யோக மையம், வெள்ளியங்கிரி மலைச்சாரல், கோவை. 641114.

இணையதளம்: www.isha foundation.org.

மின்னஞ்சல்: yogacenter@isha foundation.org. தொலைபேசி: 9841675578, 9841915929

சிலிர்ப்பான அனுபவம்!

சத்குரு ஜக்கி வாசுதேவ், எந்தக் குறிப்பிட்ட மதத்துடனும் கலாசாரத்துடனும் தன்னைப் பிணைத்துக்கொள்ளாதவர்.

அவருடைய யோக வகுப்புகளில் எங்களுக்குக் கிடைத்த அற்புத அனுபவம், எங்களுள் பல அற்புத மாற்றங்களை நிகழ்த்தியது. இறுக்கமாக மூடியிருந்த பல மனக் கதவுகளைத் திறந்து விட்டது. இந்த பூமியில் நாம் சும்மா வசிக்க வரவில்லை, வாழ வந்திருக்கி றோம் என்பதை

உணர்த்தியது.



அதற்கு முன் கடினமாகத் தோன்றிய பல வேலைகள் எளிதாகிப்போயின. எதைச் செய்தாலும் ஆசையுடன் செய்யக் கற்ற பின், வாழ்க்கையின் வேதனைகள் குறைந்தன.

விகடனுக்காக பிரத்யேகமாக சத்குருவை நாங்கள் சந்தித்த தருணங்களில், தயார் செய்து கொண்டு போயிருந்த பல கேள்விகளைக் கேட்டோம். எந்தக் கேள்வியானாலும், கேட்டு முடித்த அடுத்த கணம் அதற்கான பதிலைத் தெளிவாகத் தருவார் சத்குரு.

ஆசை பற்றியும், வெற்றி பற்றியும், கடவுள் பற்றியும், மத நம்பிக்கைகள் பற்றியும் அவர் கூறிய பல கருத்துக்கள் ஆணித் தரமானவை. நமக்குள் ஆழமாக இறங்குபவை.

தமது கருத்துக்களை பாமரர் களுக்கும் விளங்கும்படி, சரளமான வார்த்தைகளில் சொல்வதில் சத்குரு வல்லவர். அவருடைய ஆங்கிலம், அருவி போல் தடை இன்றிப் பொழியும். அவருடைய தமிழ், பாறைகளில் அருவி தத்திச் செல்வதுபோல் ரசிக்கத்தக்க மழலையாக மலரும்.

சத்குருவோடு ஆங்கிலத்தில் உரையாடி, அவரது வார்த்தைகளை மீண்டும் சுவைத்து, ருசித்து, அவற்றை இத்தனை வாரமாக உங்களோடு தமிழில் பகிர்ந்துகொண்டது எங்களுக்குக் கிடைத்த ஓர் இனிமையான, சிலிர்ப்பான அனுபவம்!

அன்புடன்,
சுபா